# முன்னுரை

கதை கேட்கும் வழக்கம் எப்படி அநாதி காலம் தொட்டு மனிதரிடையே வேரூன்றியிருக்கிறதோ, அப்படியே கதை சொல்லும் சுபாவமும் ஒவ்வொரு மனிதனிடத்தும் என்றும் இயற்கையாகவே அமைந்திருக்கிறது. சின்னஞ் சிறு குழந்தையும் நாம் சொன்ன கதையையே மறுநாள் நம்மிடமே சொல்ல ஆசைப்படுகிறது. ஆனால் நாம் சொன்ன அந்தக் கதை நாம் சொன்ன உருவத்திலேயே நம்மிடம் திரும்பி வந்து சேருவதில்லை. நாம் சொல்லும்போது வேட்டையாடப் போன ராஜாவும் ராணியும் இப்போது பாண்டியாடப் போவார்கள்; நாம் காட்டிலே விட்டுவந்த சிங்கம், புலி கரடிகளெல்லாம் இப்போது அரண்மனைக்குள்ளேயே வந்துவிடும்; இன்னும் இவ்விதம், குழந்தையின் இளங் கற்பனைக்கு ஏற்றவாறு கதை சொல்வதில் ஏராளமான மாறுதல்களைக் காணலாம்.

ஆனால் இந்தச் சில்லறைத் திருத்தங்களிலேதான் விசேஷம். கதையைச் சொல்லும் முறையிலேதான் கதையின் சுவை அடங்கியிருக்கிறது. இல்லாமற்போனால் உலகத்தில் மொத்தம் நாலைந்து கதைகளுக்குமேல் இதுவரையில் உண்டாகியிருக்க முடியாது; உலகத்தின் இலக்கிய ஆசிரியர்களை விரல் விட்டு எண்ணிவிடலாம்.

உலகத்தில், ஆதிகாலத்தில், நம் நாட்டில்தான் முதல் முதலில் கதைகள் பிறந்தன என்று இன்றை இலக்கிய ஆராய்ச்சியாளர் ஒப்புக்கொள்ளுகின்றனர். இந்தியாவில் உற்பத்தியான கதைகள், பாரசீகம், அரேபியா மூலம் இத்தாலியை அடைந்து ஐரோப்பாவில் குடியேறின என்று அவர்கள் கூறுகின்றனர். நம்முடைய **கதாசரித்ஸாகரம்,**

**பாரதம், பாகவதம், பஞ்சதந்திரக் கதைகள்** ஆகியவை எழுதப்படாதிருந்தால், இன்று ரஸிகர்கள் சிலாகிக்கும் **அரபுக் கதைகள், ஈசாப் கதைகள், பொக்காஷியோ, சாஸர் கதைகள்** ஆகியவை பிறந்திருக்க முடியா.

ஆனால் நம்மிடமிருந்து வாங்கிய கதைகளை அவர்கள் அப்படியே தூங்கப்போடவில்லை. அவற்றைக் கொண்டு அவர்கள் தங்கள் தங்கள் இலக்கியத்தை வளம் பெற வளரச் செய்துகொண்டுவிட்டார்கள். மேல்நாட்டு இலக்கியத்திலே இன்று சிறுகதை என்பது பரிபூர்ணமாக வளர்ச்சியடைந்த ஓர் உறுப்பாக நிலைத்துவிட்டது. அதற்கு வேண்டிய இலக்கணத்தையும் திட்டமாக வகுத்து, அவர்கள் அந்த உறுப்பை ஸ்திரப்படுத்திக்கொண்டு விட்டார்கள்.

உலகக் கதைகளுக்கெல்லாம் தாயகமான நம் நாடு மட்டும் சமீபகாலம் வரையில் தொடங்கிய இடத்திலேயே நின்றுவிட்டது. மற்ற எல்லாத் துறைகளிலும் பின்னடைந்து நிற்பதைப் போலவே இலக்கியத் துறையிலும் மற்ற நாடுகளுக்கு வெகுதூரம் பின் தேங்கி நின்றுவிட்டது.

ஆனால் இப்போது, கால் நூற்றாண்டுக்குள் ஏற்பட்ட தேசீய எழுச்சியின் வேகத்தில் நம்முடைய இலக்கியமும் தன்னுடைய பங்குக்கு ஏற்ற பெரும் பலனை அடைந்துவிட்டது. தற்கால உலக இலக்கிய மேதாவிகளுக்குச் சமமாக அமரும் அந்தஸ்தைக் கவி டாகுர் அடைந்துவிட்டார். அவருடைய சிறுகதைகள் எந்த நாட்டுச் சிறுகதைகளுக்கும் தாழ்ந்தவை அல்ல என்பதை இலக்கிய உலகம் ஒப்புக்கொண்டுவிட்டது.

நம் தமிழ் நாட்டிலும், இந்த இருபதாம் நூற்றாண்டின் இலக்கிய உறுப்பைக் கையாண்டு வெற்றிபெற்றவர் வரிசையில் காலஞ் சென்ற **வ. வே. சு. ஐயர்** முதன்மை ஸ்தானத்தில் நிற்கிறார். அவருடைய **குளத்தங்கரை அரசமரம்** சாகா வரம் பெற்ற கதை.

# மாஜி மனைவி

## 1

ஸ்ரீமான் ஆத்மநாதன் அன்று மாலை தமிழ் டாக்கி பார்க்கப் போனான். அவனுடைய மனைவியும் அவன் கூடப் போனாள்.

ஸ்ரீமான் கே. ஆத்மநாதன், பி. ஏ., ஜி. டி. ஏ., சீப் கிளார்க், அம்பத்து நட்டு கம்பேனி (இந்தியா) லிமிடேட், நல்ல தேச பக்தி உடையவன் என்பதைப்பற்றிச் சந்தேகம் இல்லை. உத்தியோக உடை ஹாட், சூட், பூட் மோஸ்தர்தான் என்றாலும், வீட்டுக்கு வந்ததும் சுத்த சுதேசி மில் வேஷ்டிதான் அணிந்துகொள்வான்; இரண்டொரு கதர் உருப்படிகள்கூட (கைக் குட்டைகளைத் தவிர) வைத்திருக்கிறான் என்றால், வேறு என்ன வேண்டும்?—இன்னும் எவ்வளவோ உதாரணங்கள் (அவனுக்கு இங்கிலீஷ் வேஜிடபிள் மேல் உள்ள வெறுப்பு இத்யாதி) சொல்லலாம், அவனுடைய தேச பக்தியைக் காட்ட! ஆனால் நமக்கு அதெல்லாம் அவ்வளவு அவசியம் அல்ல. முக்கியமான விஷயம் அவன் தேச பக்தி உடையவன் என்பதுதான்.

ஆனாலும் ஸ்ரீமான் ஆத்மநாதன்....டைய தேச பக்தி தமிழ் டாக்கியைப் போய்ச் சிரத்தையுடன் பார்த்து ரஸிக்கும் எல்லைக்கு எட்டவில்லை. ஆகவே ஆத்மநாதன் அன்று அபூர்வமாகத் தமிழ் டாக்கியைப் போய்ப் பார்த்தது உன்னதமான தேசாபிமான உணர்ச்சியினால் தூண்டப்பட்டு அல்ல என்பது நிச்சயம். ஆனால், அன்று அவன் மட்டும் தனியாகப் போக வில்லை என்ற விஷயத்தை ஞாபகப்படுத்திக்கொண்டோமானால், 'அவன் ஏன் போனான்?' என்ற கேள்விக்குப்

பதில் பெறுவதற்காக வெகு தூரம் சுற்றி வளைக்க வேண்டிய அவசியம் இராது.

அன்றைத் தினம் ஸ்ரீமான் ஆத்மநாதன், பத்தினி பக்தியினால் அல்லாத போதிலும் பத்தினியின் ஹிம்சையினால் தூண்டப்பட்டுத் தமிழ் டாக்கி பார்க்கப் போனான்.

கமலாசனி என்று அழைக்கப்பட்ட ஸ்ரீமதி ஆத்மநாதனை அந்தத் தெய்வம் அப்படிக் கொடிய சித்தம் படைத்த பூதகணங்களுடன் சேர்க்கப்பட வேண்டியது அல்ல. இருந்தாலும் அது அன்று தன்னுடைய கணவனும் (சாஸ்திரப்படி) தெய்வமும் ஆன ஸ்ரீ ஆத்மநாதனைத் தமிழ் டாக்கிக்குப் போகும்படி செய்து விட்டது.

'இந்த டமில் படங்களை நான் பார்ப்பதில்லை; ஸார்!' என்று உதட்டைக் கோணிக்கொண்டு சொல்லும் புதிய கால ஸ்நாப்கள் (தங்களை மேதாவிகளாய் நினைத்துக்கொள்பவர்கள்) ரகத்தைச் சேர்ந்தவன் அல்ல ஆத்மநாதன்; ஸ்நாப் பதவிக்கு வேண்டிய முதற்படியான மயிலாப்பூர் அல்லது மாம்பல வாசங்கூடச் செய்யவில்லை அவன். இருந்தாலும் அவன் இதுவரையில் ஒரு தமிழ்ப் படங்கூடப் பார்த்ததில்லை. தமிழ்ப் படத்தின்மேல் அவனுக்குள்ள துவேஷம் அவனுடைய ஸ்ரீமதிக்குத் தெரியாததல்ல. இருந்தாலும் அவள் அன்றைத் தினம் அவனை வற்புறுத்திக் கிளம்பும்படி செய்ததற்குக் காரணங்கள், அந்தப் படம் சேர்ந்தாற்போல் முப்பத்திரண்டாவது வாரம் ஒரே இடத்தில் காட்டப்பட்டதுதான்; அதைப் போய் ஊர் முழுக்கப் பார்த்துவிட்டு வந்ததுதான்; சோற்றுக்குக்கூட விதியில்லாத, பக்கத்து வீட்டு எழுபத்திரண்டு குடிகளில் ஒன்றாய்க் குடித்தனம் பண்ணின (அவளுடைய புருஷனுக்குக் கார்ப்பரேஷனில் ஏதோ உத்தியோகம் என்று கேள்வி) செல்லிகூட இரண்டு தடவை பார்த்து விட்டு

வந்ததுடன், அதை இங்கே வந்து பறை சாற்றியது தான்; எல்லாவற்றையும்விட விசேஷமாக அதைப் போய் இன்றும் பார்த்துவிட வேண்டும் என்று நினைத்த சாமான்யமான விஷயந்தான்.

மூன்று வருஷத்துக்கு மேலாகத் தமிழ்ப் படம் காட்டப்படும் கொட்டகைக்குள்ளே நுழைந்தறியாத ஆத்மநாதன் அன்று போனதுதான் ஆச்சரியமே யொழிய, ஸ்ரீமதி ஆத்மநாதன் போக வேண்டுமென்று சொன்னதும், வெறும் சொல் பிரயோசனப்படாமற் போகவே வெறும் சொல்லைவிட அழுத்தமான முறைகளைக் கையாண்டதும், அதன் பயனாக அவளது விருப்பம் செயலாகிப் பலித்ததும் ஆச்சரியம் அல்ல.

ஆத்மநாதனின் தமிழ்ப் பட வெறுப்பு அவனுடைய நண்பர்கள் எல்லோருக்குமே தெரிந்த விஷயமாக இருந்தது. புதிதாகப் பரிசயமான நண்பர் யாரேனும் அவனைத் தமிழ்ப் படம் பார்க்க அழைத்தால், உடனே தனக்குக் கண் சரியாக இல்லை என்று சொல்லித் தப்பித்துக்கொள்வான். தன்னிடம் ஓர் அங்கஹீனத்தைக்கூட அவன் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருந்தான்; தமிழ்ப் படம் பார்க்கத் தயாரில்லை.

இந்த அவனுடைய வெறுப்பு விசித்திரமாக இருந்த போதிலும், அந்த வெறுப்பின் பின்னே ஒரு சோக நாடகம் மறைந்திருந்தது வெகு பேருக்குத் தெரியாது.

## 2

அன்றைத் தினம் காலையில் ஸ்ரீமான் ஆத்மநாதன் சாப்பிட்டுவிட்டுக் கையில் காபியுடன் தர்மாஸ் பிளாஸ்க், சின்ன டிபன் பாக்ஸ் சகிதம் ஆபீசுக்குக் கிளம்பும்போது, அன்று மாலையில் அவனுக்கு எதிர் பாராத விபரீதம் ஒன்று காத்திருக்கிறது என்பது தெரியாது.

அந்த விபரீதம் அவனுடைய தர்மபத்தினி கமலாசனியின் ரூபத்தில், அவளுடைய வார்த்தை ஒலியில் காத்திருந்தது.

அன்று சனிக்கிழமை. வெள்ளைக்கார ஆபீசுகள் எல்லாம் பகல் இரண்டு மணிக்குள் மூடப்படும். ஆத்மநாதன் மூன்று மணிக்கே வீடு வந்து சேர்ந்துவிட்டான்.

அன்று சனிக்கிழமை..முதலிய இத்தனை விஷயமும் ஸ்ரீமதி ஆத்மநாதனுக்கும் தெரியும்.

ஆத்மநாதன் வீடு வந்ததும் உத்தியோக அவசரத்தை மாற்றிச் சாதாரணமாகிக்கொண் டிருந்தான். அப்பொழுது பின்வரும் நாடகம் நிகழ்ந்தது.

(கையில் பளபளவென்று மின்னும் ஒரு வஸ்துவுடன் முகத்தில் அதைவிடப் பளபளப்பான கொஞ்சல் - கெஞ்சல் - கலந்த புன் சிரிப்புடன் உள்ளே நுழைகிறாள் கமலாசனி.)

கமலாசனி: (குதித்துக்கொண்டு அவன் சமீபம் வந்து) இதோ பார்த்தியளா! இதுதான் சொன்னேன்?

ஆத்மநாதன்: (கோட்டை மடித்துக்கொண்டு, அசட்டுக் களை வழியும் முகத்தைத் திருப்பிக்கொண்டு) அது என்ன?

கமலா: (பல்லை நன்றாகத் தெரியும்படி காட்டி) இதென்ன, பாருங்கோ!

ஆத்ம: (அவள் முகத்தைப் பார்த்து) உன் பல்லு! (சிரிக்கிறான்.)

கமலா: (அரை வராகன் எடை கோபத்தைக் கலந்துகொண்டு) போதும்! என் கையில் பாருங்கோ!

ஆத்ம: (பார்த்து) கையிலா! விரல்களைத் தவிர ஏதோ ஒரு வஸ்து! அது என்ன?

கமலா: (சந்தோஷத்தை எச்சிலாக வெளியில் தெளித்துக்கொண்டு) அதுதான் பேஸ்திரி!

ஆத்ம: ஓகோ! அதைத் தலையில் வைத்துப் பின்னிக்கொள்ளுகிறதோ!

கமலா: (நாலு வீட்டுக்கு அப்பால் உள்ளவர்களும் அவளுடைய சந்தோஷத்தை அநுபவிக்கும்படி சிரித்து) நன்னா இருக்கு! அன்னிக்கி நான் சொல்லலையா? வைர பேஸ்திரி.

ஆத்ம: (குனிந்து வேஷ்டியைச் சரி பார்த்து ஒத்திகை நடை நடந்து வாசற்படிப் பக்கம் போய்) ஓகோ! சொன்னியா? இருக்கும், சொல்லியிருப்பாய்!

கமலா: (முன்னாடி வந்து அவனுடைய வழியை மறிக்கிறாப்போல் நின்று முகத்தில் பளபளவென்று கோபம் மின்ன) ஆனா உங்களுக்குச் சொன்னது நினைவு இல்லையா? (சட்டென்று தோற்றம், நடை, நொடி, பாவனை எல்லாவற்றையும் மாற்றிக்கொண்டு) ஆமாம், எங்கேயாவது வெளியில் போகப் போகிறீர்களா?

ஆத்ம: இல்லே! என் சிநேகிதன் சேஷ செப்பன் இருக்கிறான் இல்லையா? அவன் எனக்கு ஒரு ரெண்டே முக்கால் ரூபாய் தரணும். இப்போ வீட்டிலே இருப்பான். அதைப் போய்க் கேட்டுவிட்டு வரலாம்னு நெனச்சேன்.

கமலா: அதுவா? மூக்குக் கண்ணாடி போட்டுக்கிண்டு வருமே? - அது எங்கே தரப்போகிறது? ஆனை வாயிலே போன கரும்புதான்! இப்பத்தான் ஆபீசிலேயிருந்து வந்தியள். அதுக்குள்ளே இந்த வெயிலிலே போகாவிட்டா என்ன? நாளைக்கு நாயித்துக் கிழமை; போங்களேன்.

ஆத்ம: இப்போ என்ன பண்ணப் போகிறேன்?

கமலா: இப்போ வேலை இருக்கு! (கடைக்கண்ணால் சிரிக்கிறாள்.)

ஆத்ம: (பீதியுடன்) என்ன வேலை?

கமலா: (இன்னும் சிரிப்புடன்) ஒண்ணுமில்லை, இன்னிக்கிச் சீக்கிரந்தான் வந்துவிடுவீர்களென்னு கொஞ்சம் சோதுமை அல்வா கிளறினேன். வாங்கோ, உட்காருங்கோ.

(உள்ளே ஓடுகிறாள். வழியில் கையில் இருந்த பளபளப்பான வஸ்து புடைவைத் தலைப்பில் முடிச்சாக மாறுகிறது.)

ஆத்ம: (ஒரு சாய்மான நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு) ஏது வர வரத் தேவலையே—பேஷ்!

கமலா: (கையில் தட்டுடன் அவனிடம் நீட்டிக் கொண்டே) என்னமா இருக்கோ?

ஆத்ம: (வேலையைத் தொடங்கி) பேஷா இருக்கே! ......ஆமாம், அதென்ன அது, அந்தப் பேஸ்திரி!

கமலா: (முடிச்சை அவிழ்த்துக் கையில் பேஸ்திரியை எடுத்துக்கொண்டு) இதோ, இதுதான்! நீங்கள் அன்னிக்கி வாங்கித் தரேகிறேன் என்று சொல்லலையா? அடுத்தாத்து லக்ஷ்மியிடமிருந்து மாதிரி வாங்கிக் கொண்டு வந்தேன்.

ஆத்ம: (அதை வெறித்துப் பார்த்து) இதில் எத்தனை கல்லு?

கமலா: ஏழு கல்லு. ஒன்பது கல்லும் வைக்கிறதுண்டு; ஆனா எனக்கு ஏழுதான் பிடித்திருக்கிறது.

ஆத்ம: எத்தனை ரூபாயாம்?

கமலா: நூத்தெழுபத்தஞ்சு!

ஆத்ம: அம்மாடி! (எழுந்து நின்றுகொண்டு 'சகோதர சகோதரிகளே!' பாவனையில்) நான் சொல்லு கிறேன், கேளு, கமலாசனி! இந்தப் பேஸ்திரி மேஸ்திரி எல்லாம் என்னிடம் பேசாதே. இன்னும் ஒரு வருஷத் துக்கு என் காதில் இதெல்லாம் போடாதே! வேறு ஏதாவது விசேஷம் உண்டானால் இப்போது பேசு. இல்லையானால் நான் இதோ வெளியில் கிளம்பு கிறேன்.

இந்த விதமாக நாடகம் உச்சஸ்தாயியை அடைந்து, நெருக்கடியான நிலைமையை எட்டிவிட்டது.

ஆனால் சமயோசித புத்தியுள்ள ஸ்ரீமதி ஆத்மநாதன் சந்தர்ப்பத்தின் அவசரத்தையும், முக்கியத்துவத்தையும் நன்றாய் உணர்ந்துகொண்டு, நெருக்கடியை மிகவும் லாக வமாகச் சமாளித்துக்கொண்டுவிட்டதை யாவரும் பாராட்டித்தான் ஆகவேண்டும். சமாசத்துக்குத் தயா ரானதோடு இல்லாமல், அதற்காக எவ்வளவு தூரம் வேண்டுமானாலும் அவள் விட்டுக்கொடுத்துத் தியாகம் செய்யத் தயாராய் இருந்ததைக் குறிப்பிட வேண்டியது அவசியம்.

அதாவது, நடந்தது இதுதான்: கமலாசனியம்மாள் தன் புருஷன் பேஸ்திரி விஷயத்தில் இவ்விதம் முட்டுக் கட்டை போட்டதோடு, சர்வ சங்க பரித்தியாகம் செய்து மறைந்துவிடவும் தயாராக இருப்பதாய்த் தெரிவித் ததும், உடனே தனது லக்ஷ்யத்தை மடமடவென்று கீழே இறக்கிக்கொண்டு வந்துவிட்டாள். பேஸ்திரி வாங் கித் தருவதற்கும் அன்று மாலை சினிமாவுக்கு அழைத் துக்கொண்டு போவதற்கும் எத்தனை தூரம்?

ஆனால் ஸ்ரீமான் ஆத்மநாதன் அவர்களுக்குத் தமிழ்ப் படத்துக்குப் போவதைவிட, பேஸ்திரி வாங்கித் தருவது மிகவும் எளிது. இருந்தாலும் அவன் முன்னதை ஏற்றுக்கொண்டதற்குக் காரணம் இதுதான்:

"சினிமாவுக்கு நீங்கள் வந்தாலும் சரி, வராவிட்டாலும் சரி; நான் இன்னிக்கி அடுத்தாத்து ஓவர்சீயர் ஆம்படையாள் ராஜியோடே போகத்தான் போகிறேன். நீங்க வந்தால் உங்களையும் அழைத்துக்கொண்டு போகிறேன்...." (ஸ்ரீமதி கமலாசனி சொன்ன வாக்கியங்களிலிருந்து எடுத்தது.)

அன்றைத் தினம் கமலாசனி தான் சொன்ன பிரகாரம் தன் கணவனைச் சினிமாவுக்கு அழைத்துக் கொண்டு போனாள்.

## 3

கொட்டகைக்கு வெளியில் ஒரே கும்பலாய் இருந்தது. இவ்வளவு கும்பல் எதற்கு? இந்தத் தமிழ்ப் படம் பார்க்கவா? இதெல்லாம் ஆச்சரியமாயிருந்தது ஆத்மநாதனுக்கு.

முப்பத்திரண்டரை வாரம் ஓடின படமல்லவா இது? முப்பத்திரண்டரை வாரம் ஒரே படத்தை எப்படிப் பார்க்க முடியும்? அந்தக் கொட்டகையில் வேலை செய்கிறவர்கள், அதோ அந்த வாசற்படியில் கோணல் மூக்குடன் நிற்கிறானே காவற்காரன், இத்தனை பேருக்கும் காது இரும்பா? இவ்வளவு நாட்களாகத் தினசரி இரண்டு தடவை ஒரே மாதிரியான பாட்டுக்களை ஓயாமல் கேட்டுக்கொண்டிருக்கிறார்களே! இவர்களுடைய பொறுமைக்கு ஒரு நோபல் பரிசு கொடுத்தால்கூடத் தகும். ஆனால் இவர்களுக்கு எத்தனை சம்பளம் இருக்குமோ?

இந்த மாதிரி ஆராய்ச்சிகளில் மூழ்கியிருந்த அவன் மனம் சட்டென்று எழுப்பப்பட்டது.

"இதோ கூட்டம் குறைந்துவிட்டதே! போய் டிக்கட்டை வாங்கிண்டு வாருங்களேன்! முன்னாலே

போனால் ஆரம்பத்திலேயிருந்து பார்க்கலாம்.”—கமலாசனியின் குரல்.

டிக்கட் கொடுக்கும் இடத்தில் இன்னும் பத்துப் பேர் இருந்தனர். அவர்கள் அந்த ஜன்னல் துவாரத்திலிருந்து கை மூலமாக முளைத்து வெளியே வந்த விசித்திரப் பிறவிகளாய்த் தோன்றினர். அப்படி அவர்களுடைய கைகள் மட்டும் துவாரத்திற்குள் நுழைந்து குவிந்து ஒன்றாய்ச் சேர்ந்திருந்தன.

“இருமே ஐயா, ஒருத்தர் ஒருத்தராய் வாங்கிக் கொண்டு போவோமே!”

“ஏ! என்னப்பா, காலிலே ஜோட்டாலே முதிச்சிட்டே!”

“என்ன எளவுக்கு ஐயா, அவசரம்?”

இந்த மாதிரியான பல ரக, பல ஸ்வரக் குரல்கள் ஆத்மநாதனின் மனத்தில் வெறுப்பை நிரப்பின.

“நின்னுக்கிண்டே இருந்தால் என்ன பண்றது! போங்களேன்! எல்லாரும் போகலியா?” கமலாசனியின் கோபமான குரல் ஆத்மநாதனை முடுக்கிற்று.

காதலியின் வீரச் சொற்களால் உற்சாக மூட்டப் பட்டுப் போர்க்களத்திடையே பாய்ந்த புராதன ராஜ புத்திர வீரனைப்போல் பாய்ந்தான் ஆத்மநாதன்.

எட்டு நிமிஷம், இருபத்திரண்டரை விநாடியில் வெற்றியுடன் திரும்பி வந்தான். இந்த வீரச் சம்பவத்தின் விளைவாகக் கீழ்க்கண்ட மாறுதல்கள் காணப்பட்டன ஆத்மநாதனுடைய சரீரத்தில்:

அவனுடைய இடது கால் (‘அடையாறு மாடல்’) செருப்பின் வலது வார் இரண்டு அறுந்து தொங்கின; அவனுடைய வலது முழங்கைக்குச் சரியாக இரண்டு அங்குலம் மேலே (ஸில்க்) சொக்காய் மூணரைத் தம்பிடி அகலத்துக்குக் கிழிந்திருந்தது; அவனுடைய இடது

காதுக்கு மேலே அவனுக்குச் சொந்தமல்லாத ஒரு அந்நிய அங்கவஸ்திரத்தின் துண்டு (அரையடி ஓரங்குலம் நீளம் இரண்டே கால் அங்குலம் அகலம்) சுற்றித் தொங்கிக்கொண்டிருந்தது.

கொட்டகைக்குள்ளும் ஒரே கும்பல். ஓர் ஓரமாக அமர்ந்துகொண்டனர் ஆத்மநாதனும் அவனுடைய மனைவி கமலாசனியும்.

ஆத்மநாதன் நான்கு பக்கமும் திரும்பிப் பார்த்தான். ஒரே மனுஷ்யத் தலைகள்! இத்தனை பேரும் அங்கே என்ன செய்தார்கள்? அவ்வளவு பேருக்கும் பைத்தியமா? ஆத்மநாதனுடைய மனம் குழம்பிற்று.

இத்தனை பேருக்குந்தான் பைத்தியம். இவன் ஏன் அங்கே வந்தான்?

அந்தக் கேள்வி எழும்பியதும் தாமாகவே அவனுடைய கண்கள் இடது பக்கம் திரும்பின.

எதிர்த்த பெஞ்சியில் உட்கார்ந்திருந்த ஒரு தடித்த பெண்மணி தன் தலையில் சுமந்துகொண்டிருந்த புஷ்ப வனத்தைப் பார்த்து வியந்துகொண்டிருந்தாள் கமலாசனி.

"அய்ய, இந்தப் பாருங்களேன்! எத்தனை வண்டிப் பூ! தலை ஒடிஞ்சு விழுந்துடும்-!"

குசுகுசுவென்ற அந்தரங்க மனைவி குரலில் தெரிவிக்கப்பட்ட மேற்கண்ட செய்தியைப் புத்த விக்கிரகத்தைப் போன்ற அடக்கத்துடன் ஏற்றுக்கொண்டு, "ஆமாம்!" என்றான் ஆத்மநாதன்.

எதிரில் பார்த்தான். தடித்த ஸ்ரீமதி புஷ்பவனத்தின் பக்கத்தில் இருந்த ஸ்ரீமானைப் பார்த்தான். ஏ அப்பா! எத்தனை ஒல்லி அவன்! புருஷன் மனைவிதான்!- இவர்கள் எப்படி ஒத்துக்கொள்ள முடியும்?- ஆனால்,

இதுதான் ரொம்ப நியாயம்! ரொம்பப் பொருத்தம்! ஒருத்தருக்கு ஒருத்தர் ஆதரவு! - புருஷன் மனைவி!......

ஏதோ 'கீச்சு மூச்சு' என்ற குரலில் பாட்டு ஆரம்பம். சத்தம் காதைத் துளைத்தது. 'கொல்' லென்று கேட்கும் மனிதக் குரல்களின் 'கசமுச' சத்தத்துக்கு மேலே அந்தக் கீச்சுக் குரல் கீச்சிட்டது.

அது கூட ஆத்மநாதனின் காதில் விழவில்லை.

## 4

"ஏண்டி, இங்கே வந்தே?"

பதில் இல்லை.

"என்னடி! நான் சொல்றது கேக்கலியா?"

"கேக்கறது!"

"ஏன் வந்தே?"

மறுபடியும் பதில் இல்லை.

"நீ மாத்திரம் வந்தியா?"

"இல்லே—"

"ஏன், உனக்கு என்ன தனியா வரத் தெரியாதா?— போன வருஷம் நீ போனவள்தானே? கும்பகோணத்திலேயிருந்து மன்னார்குடிக்கு ராவோடே ராவாப் போனவள்தானேடீ! - ஆமாம், உங்கப்பன் வந்திருக்கிறானா? எங்கே அவன்!"

"ஹோட்டலுக்குப் போனான்-"

"ஊஹூம்! - நல்ல பழஞ் செருப்பு ஒண்ணு வச்சிருக்கேன்! - உன்னைத்தான் காலேஜிலே சேத்து விடப் போறேன்னு கடுதாசு எழுதினானே!"

"சேக்கத் தெரியாமெத்தான்-!"

"என்ன! ஊஹூம்! ஏண்டி தெரியல்லே! உங்கப் பனுக்கு என்ன மான வெக்கமா! ஊரிலே யாராவது ஒரு வார்த்தை சொல்லப் போறுன்னு பயமா! எல்லாத்தை யும் அடிச்சுத்தான் போரிலே போட்டுட்டானே!-"

"மான வெக்கத்தோடே இருக்கிறவாளே யெல்லாம் பாத்தாச்சு!"

"ஏண்டீ! யாருக்கு என்னடி குறைச்சல்! மான வெக்கத்துக்கு என்ன?"

போதும்! பொண்டாட்டி வச்சு சம்ரக்ஷணை பண்ணி-"

"டேய்! வாயை மூடுடி எச்சக்கலே! நீ வாழ்ந்த வாழ்வுதான் ஊர் சிரிக்கிறதே!"

மௌனம். தலைவி தலையைக் குனிந்துகொண்டு, கால் பெருவிரலால் பூமியைச் சுரண்டிப் பார்க்கிறுள். அது கல்தரை. தலைவியின் கண்களில் கண்ணீர்.

தலைவன் வெளியில் பார்க்கிறுன். வீட்டைப் பார்க் கிறுன். கதவு பூட்டியிருக்கிறது. சட்டைப் பையிலிருந்து சாவியை எடுத்துப் பூட்டைத் திறந்து விறைப்பாக உள்ளே நுழைகிறுன்.

—மேற்படி விஷயங்கள் சுமார் ஐந்து வருஷங்களுக்கு முன்னுல் தஞ்சாவூர் மேலே வீதி இருபத்திரண்டாம் எண்ணுள்ள வீட்டின் வெளி வாசற்படியில், பூட்டின கதவுக்கு முன்னுல் நடந்தேறின.

மேற்படி நாடகத்தில் பாத்திரங்கள் ஸ்ரீமான் கே. ஆத்மநாதன் பி. ஏ. (ஜி. டி. ஏ. படிப்பு அப்போது பூர்த்தியாகவில்லை.) யும், அவருடைய (முதல்) மனைவி பத்மாவதியும் ஆகும். (பத்மாவதி முதல் மனைவி என்றதனுல் கமலாசனி இரண்டாவது மனைவி என்பது விளங்காநிற்கின்றது.)

மேலே காட்டின ஸதிபதி சம்வாதத்திலிருந்து அவர்களுடைய அந்நியோந்நிய பாவத்தைப்பற்றி யாரும் சந்தேகிக்க இடமில்லை. அவர்களுடைய பரஸ்பர சம்பந்தம் இவ்வளவு 'உயர்ந்த' நிலையில் இருக்க வேண்டுமானல் அதற்குக் காரணம் இருக்கத்தான் வேண்டும்.

வெங்காயத் தோலை உரித்துக்கொண்டே போனல் முடிவில் மிகச் சிறிதான முளையில் கொண்டுபோய் விடுவதுபோல ரொம்பப் பிரமாதமாகத் தோன்றும் விஷயங்களை அலசி அலசித் தேடிக்கொண்டே போனல், முடிவில் அந்த ஆராய்ச்சி அதிக அற்பமான ஒரு விஷயத்தில் கொண்டுபோய் விடுவது சகஜம். இதற்குப் பிரத்தியக்ஷப் பிரமாணங்களாக நம் வேதோபநிஷத்துக்களையே சொல்லலாம். நம் ஆத்மநாதன் பத்மாவதி விஷயத்தைச் சொன்னலும் பொருந்தும்.

இந்த விவகாரத்தில் ஆத்மநாதனும் பத்மாவதியும் மட்டும் சம்பந்தப்பட்டிருந்தால் இவ்வளவு சிக்கலுக்கு இடமில்லை. ஒரு பக்கம் ஆத்மநாதன் பெற்றோர்; இன்னொரு பக்கம் பத்மாவதியின் பெற்றோர். இவர்களுக்கிடையே மனுஷ்ய தோஷங்களான கோப தாப மோக ராக வைராக்கியங்கள்.

'இந்தப் பறப்பயல் வீட்டுக்கு என் பெண்ணை அனுப்ப மாட்டேன்!' என்ருர் பெண்ணின் தகப்பனர். (இந்த இடத்தில் 'பறப்பயல்' என்ற பிரயோகம் பிள்ளையின் தகப்பனைக் குறிக்கிறது.)

இது கொஞ்ச காலத்துக்கு முன்னல் நடந்தது. பிறகு, 'இந்தக் கபோதிப் பயல், அப்பன் பேச்சைக் கேட்டுக்கொண்டு குதிக்கிறது! மறு கல்யாணம் பண்ணிக் கொள்வானும்! மோசந்தான்! என் பெண் வீட்டிலேயே இருக்கட்டுமே! எனக்குச் சாதம் போடமுடியும்!' (இது மேற்படியாரே தம் மருமகனுடைய கடிதத்தைக் கண்டதும் மெய்ம்மறந்து சொல்லியது.)

பத்மாவதியின் தகப்பனார் தம் பெண், புருஷன் வீட்டில் போய் வாழ்ந்து சௌக்கியமாய் இருக்க வேண்டும் என்று மனப்பூர்வமாக விரும்பித்தான் ஆத்மநாதனுக்குக் கல்யாணம் செய்து கொடுத்தார், ஆதியில்.

அவர் இவ்விதம் தம் அபிப்பிராயத்தை அடியோடு மாற்றிக்கொண்ட விதம் பின்வருமாறு:

கல்யாணத்தின்போது நடுவில் இருந்தவர்களுடைய யதேச்சையான முயற்சியால், பிள்ளை வீட்டார் தங்களுக்குச் சரியான மரியாதை கிடைக்கவில்லை என்று நினைத்தனர். அதுதான் வித்து. அந்த வித்து நாளடைவில் இயற்கையாகவே வளர்ந்து வந்தது.

பெண், வீட்டுக்கு வந்த சமயத்தில், பெண் வீட்டார் சரியானபடி சீர் செய்யவில்லை என்ற புகார். இதில் ஆத்மநாதனின் தாயாரும் தகப்பனாரும் நேரடியாகக் கலந்துகொண்டனர்.

பிற்பாடு ஒரு சமயம், பத்மாவதி பிறந்த வீட்டிற்குப் போயிருந்த சமயத்தில், அவளுடைய மாமியார் ஒரு குறிப்பிட்ட தினத்தில் வரவேண்டுமென்று கடிதம் எழுதியிருந்தாள். ஆனால், அந்தச் சமயத்தில் பத்மாவதியின் தகப்பனார் வீட்டில் இல்லாதபடியால் உத்தரவுப்படி உடனே நடக்க முடியவில்லை. இதை ஓர் அவமரியாதையாக ஏற்றுக்கொண்டனர் எதிர்க் கட்சியினர்.

பிறகு கொஞ்ச காலம் கழித்து நாட்டுப்பெண் வீட்டுக்கு வந்தபோது, மாமியார் அவளைச் சரியானபடி தண்டித்துப் பிறந்த வீட்டுக்குக் கண்ணும் கண்ணீருமாகப் போகும்படி செய்தாள். போகிற போக்கில், அவள், தன் மனக் குறையை அடுத்த வீட்டில் சொல்லி அழுதுவிட்டு, செலவுக்குப் பணமும் கடன் வாங்கிக்கொண்டு தனியாக ஊருக்குக் கிளம்பிவிட்டாள்.

இந்த இடத்திலிருந்து ஆத்மநாதன் நேரடியாக விவகாரத்தில் தலையிட்டுக்கொண்டு, எல்லாவற்றையும் தானே நேரில் நிர்வகிக்கத் தொடங்கினான்.

ஒரு வருஷம் ஆயிற்று. அந்தக் காலத்துக்குள் நடந்தேறிய முக்கியமான சம்பவங்களாவன: ஆத்மநாதனுக்கும் அவனுடைய மாமனாருக்கும் இடையே இருபத்தேழு கடிதங்கள் போய் வந்தன. கடிதப் போக்குவரத்து வர வரக் கடுமையாக ஆகி உஷ்ணத்தின் உச்ச எல்லையை அடைந்துவிட்டது.

ஆத்மநாதனுடைய தாய் தந்தையர் இந்த விவகாரங்களையும், அதனுடன் தங்களுக்கு இருந்த கடன் பொறுப்புகளையும் தம் மகனும், சட்டப்படி வார்சும் ஆன அவனிடம் ஒப்படைத்துவிட்டு மறைந்துவிட்டனர்.

ஆத்மநாதன் மனைவியைக் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை என்று சபதம் செய்துகொண்டான். அவனுடைய மாமனார் தம் பெண்ணை எப்படியும் புருஷன் வீட்டில் கொண்டுபோய் விட்டுவிட்டு வந்துவிட வேண்டும் என்று தீர்மானித்தார்.

ஆத்மநாதன் கும்பகோணத்தை விட்டுத் தஞ்சைக்குக் குடியேறினான்; அவனும் பி. ஏ. படிப்பு முடிந்து, ஜி. டி. ஏ.யிலும் ஒரு பகுதி முடிந்து, அதைப் பூர்த்தி செய்யும் தறுவாயில் இருந்தான். - இதெல்லாமும், இன்னும் நமக்குத் தெரியாத எத்தனையோ சமாசாரங்களும் அந்த ஒரு வருஷ காலத்தில் நடந்தேறின.

* * * *

உள்ளே நுழைந்த ஆத்மநாதனின் பார்வை ஒரு விநாடி பத்மாவதி நின்ற பக்கம் விழுந்தது.

இரண்டு டிரங்குப் பெட்டிகள்: ஒன்று பெரியது; இன்னொன்று கொஞ்சம் சிறியது; ஒரு தகரம், மூடி

போட்டது; அதன் பக்கத்தில் ஒரு பழக் கூடை, துணியைப் போட்டுச் சுற்றப்பட்டிருந்தது. - இந்தப் பரிவாரங்களுக்கு மத்தியில் நின்றிருந்தாள் பத்மாவதி; அவளது இடது கையைக் குறுக்கே மார்பு மேல் சுற்றி அதன்மேல் வலது கையை ஊன்றி முகத்தைத் தாங்கிக் கொண்டு. அவள் கொஞ்சம் பருமனாக இருந்தாள்; முகத்தைத் தொங்கவிட்டுக்கொண்டிருந்தால் கண்ணில் நீர் வந்ததா இல்லையா என்று அவனுக்குத் தெரியவில்லை.—எப்படி இருந்தால் இவனுக்கு என்ன கவலை இனிமேல்!

ஆத்மநாதன் உள்ளே நுழைந்ததும், பத்மாவதியும் அவன்கூட நுழையவில்லை. தெருப் பக்கம் எட்டிப் பார்த்தாள்.

சற்று நேரத்தில் தகப்பனார் கூஜாவில் காபியுடன் வந்து சேர்ந்தார். அந்தக் காபியை அவள் குடிக்கவில்லை. தந்தைக்கும் மகளுக்கும் இடையே மந்திராலோசனை நடந்தது. அதன் விளைவாக அவளுடைய தகப்பனார் அப்படியே உள்ளே நுழையாமல் ரெயிலுக்குத் திரும்பி விட்டார்.

அதன்பின் பயத்துடன் தயங்கி உள்ளே நுழைந்தாள் பத்மாவதி. அவள் உள்ளே நுழைவதை மிருக பலத்தைக்கொண்டு எதிர்த்துத் தடுத்தான் ஆத்மநாதன். அதோடு நில்லாமல் அவளுடைய தலைமயிரை யெல்லாம் எடுக்கச் செய்து, இன்னும் பலவிதமான அவமானப் படக்கூடிய மரியாதைகளையும் செய்து, நிர்ப்பந்தமாக வெளியில் போகும்படி செய்யத் தயாராய் இருப்பதையும் உணர்ச்சி மிகுந்த வார்த்தைகளினால் தெரிவித்தான்.

தன் தாய் செத்துப்போனபோதுகூட அப்படி அழுதிருக்கமாட்டாள் பத்மாவதி; அப்படி அழுதுவிட்டு ஒரு வாடகை வண்டியில் சாமான்களை ஏற்றிக்கொண்டு

கிளம்பிவிட்டாள். அவள் வேறு என்ன செய்ய முடியும்? பூட்டியிருக்கும் வீட்டுக்குள் எப்படி நுழைய முடியும்?

தந்தையும் மகளும் ரெயில்வே ஸ்டேஷனில் சந்தித்தனர்.

இன்னும் ஒரு வருஷம் ஆயிற்று. அதன் பின்னர் பத்மாவதியை ஆத்மநாதன் பார்க்கவில்லை. பார்க்காவிட்டாலும் சில முக்கியமான விஷயங்களைக் கேள்விப்பட்டான்.

அவனுடைய மாமனார் காலமானதும் அவற்றில் ஒன்று.

## 5

தீவிரமான சிந்தனை வெள்ளத்திலே மூழ்கடிக்கப்பட்டுப் பிரக்ஞையற்றவன்போல் இருந்த ஆத்மநாதனை அவனுடைய மனைவி (நெ. 2) கமலாசனியின் கேலிக்குரல் தட்டி எழுப்பிற்று:

"இதைப் பாருங்களேன்!"

அவன் பார்த்தான். ஒரே இருள். திரையில் படம் ஓடிக்கொண்டே இருந்தது. எப்பொழுது ஆரம்பமாயிற்றோ?—

திரையைப் பார்த்தான்.

"உங்க ஆம்படையாளும் இப்படித்தானே முத்தம் கொடுப்பாள்?" என்ற கமலாசனியின் வார்த்தைகள் அவன் காதில் நுழைந்தனவோ என்னவோ!

அவன் விழித்துப் பார்த்தான். அவனுடைய சுய நினைவு வர, சில விநாடி காலமாயிற்று.

பக்க வாத்திய சங்கீதம், அவன் நெஞ்சுக்குள்ளே இடி முழக்கம்போல் சப்தித்தது. வர வர இடியின்

கர்ஜனை வேகமாகிக்கொண்டே போயிற்று. கடைசியில் படார்! அவனுடைய நெஞ்சு நின்றுவிட்டதா!

ஆமாம், திரையில், அவன் எதிரில் அவனுடைய மாஜி மனைவி! திரைக் காதலனுடன் காதல் புரிகிறாள்! அட சை! தூ!....

சப்த மேகங்களும் திரண்டு வந்து 'திடு திடு'வென்று அவன் தலைமேலே குதித்து, இடித்து, முழங்கின. அண்ட சராசரங்களும் தலை குப்புறக் கவிழ்ந்து உருண்டன.

பளீர்!

ஒரே ஜகஜ்ஜோதி! இடை வேளை விளக்கு ஏற்றப்பட்டது.

சட்டென்று தன் மனைவியின் பக்கம் திரும்பிப் பார்த்தான் ஆத்மநாதன். அவனுடைய முகத்திலே நிகழ்ந்து திகழ்ந்த சோக நாடகத்தைப் போன்றது இலக்கிய உலகிலே இனிமேல்தான் சிருஷ்டிக்கப்பட வேண்டும்.

# அடைத்த கதவு

## 1

“நான் பத்துப் பிராயத்துப் பிள்ளையாய் இருக்கிறபோது பண்ணைக்கு வந்தேன். அப்போ சின்ன ஐயரு பிறக்கக்கூட இல்லை. பெரிய எசமான் இருந்தாரு. என்னைக் கண்டா அவருக்கு ரொம்பப் பிரியம். ‘வயித்தைப் பாரு, சால் மாதிரி. இதுக்குப் பழயது இருந்தாக் கொட்டு, திங்கட்டும். அதுக்குத்தானே வந்து நிக்கறது?” என்று அவரு அம்மா கிட்டச் சொல்லுவாரு, அடிக்கடி. பெரியம்மாவுக்கு எங்கிட்ட ரொம்பப் பிரியம். நான் வீட்டுக்கே போக மாட்டேன். இங்கேயே சாப்பிட்டுக் கிட்டுக் கிடப்பேன்.

“நான் பண்ணைக்கு வந்து அஞ்சு வருசம் கழித்துத் தான் சின்ன ஐயரு பிறந்தாரு. பத்து வயசு வரையில் தோளிலேயே வச்சுச் சுமந்திருக்கேன் அவரை. இப்பத் தான் வளந்து போயிட்டாரு. அவரு கையாலே நான் வாங்கி இருக்கற உதை என் முதுகைக் கேட்டால் தெரியும். அப்புறந்தான் போறாத காலம் வந்து, லச்சுமி மாதிரி . . பெரியம்மா போயிடுச்சு. என்னைப் பிடிச்ச துரதிருஷ்டம்! அப்புறமும் கொஞ்சமாவா உழைச்சிருக்கேன். இந்த வீட்டிலே! எதுக்காணலும் பெரிய ஐயரு, ‘கந்தா, கந்தா!’ என்று என்னைத்தான் கூப்பிடுவாரு. நான் இல்லாதே ஒரு வேலையும் நடக்காது வீட்டிலே.

‘இந்த முப்பது வருசமா நான் குடிக்கிற கஞ்சி அவங்களதுதான். என்னை அவரு ஒரு வார்த்தை கடிஞ்சு சொல்லியிருக்க மாட்டாரு. இத்தனை காலமா, ஒரு வேளை என்னை வயிறு பசிக்கப் பார்க்கமாட்டாரு. அவர்

சாகிறபோதுகூட - நான் பத்து நாளாய் அவங்க படுக்கையை விட்டு நகரல்லே - என்னைக் கிட்ட அழைச்சு, 'கந்தா, நீதான் எல்லாத்தையும் பார்த்துக்கணும். குளந்தைக்கு ஒன்றும் தெரியாது. உன்னைத்தான் நம்புறேன்' என்று சொல்லிவிட்டுத்தான் போனாரு. சின்ன ஐயருக்குத்தான் என்ன? என்கிட்டப் பிரியம் இல்லையா? நல்லா உண்டு. ஆனா அந்த அம்மா, சின்னம்மாளுக்குத்தான் என்னைக் கண்டாப் பிடிக்கலே. அதனாலே அது ஏதாவது சொல்றபோது நிசம்னு நினைக்கிறாரு. சின்ன அம்மாளுக்குக் கோவம் வரும்படியா நான் என்ன பண்ணறேன்? ஒண்ணும் இல்லே. அவங்களுக்கு நல்லதைத்தான் சொல்றேன். பெரிய ஐயரு எத்தனை கஷ்டப்பட்டு, வெயில், மழை பாக்காது, வயல் தரப்பிலே அலைஞ்சு சேத்து வச்சாரு. சொத்து பாளாப்போனா எனக்கு மனசு கேக்காமே சொல்லறேன். வீட்டிலே இருக்கற நெல்லையெல்லாம் கொட்டி அங்காடிக்காரியிடம் காய்கறி வாங்கணுமா? நான்தான் வேணுமெங்கறதைக் கொண்டுவந்து போடுறேன். பெரியம்மா ஒரு மணி நெல் வீணாக்காது. எங்கிட்டத்தான் சொல்லும், 'கந்தா! நாளைக்கு வீட்டிலே விசேசம்'னு. நான் விடியறத்துக்குள்ளே வீடு பூராக் காயாக் கொண்டுவந்து நிரப்பிவிடுவேன். இதை நான் சொன்னாச் சின்னம்மாளுக்குப் பிடிக்கல்லே. அதுவும் இல்லாதே சின்னப்புள்ளையை நான் தூக்கினா சின்னம்மாளுக்குப் பிடிக்கிறதில்லே. அதுக்கு அப்பாவை நான் தூக்கி வளத்தேன், அதையும் தூக்கறேன்; அதுக்குப் பிள்ளை பிறந்தாலும் தூக்குவேன். ஏன் தூக்கப் படாது?..'' என்று நினைத்தான் கந்தன்.

'இவன் பாட்டனார் காலத்திலேயிருந்து பண்ணை பார்க்கிறானாம். பார்த்தால் என்ன? என்ன இருந்தாலும் இவன் ஒரு வேலைக்காரன்தானே? இவன் நம்மை வேலைக்காரி மாதிரின்னா நினைக்கிறான். இவனுக்கு யார் இவ்வளவு அதிகாரம் கொடுத்தார்கள்? என்னை அதிகாரம் பண்ண இவன் யார்? இருந்தாலும் இவ்வளவு

இடம் கொடுக்கக்கூடாது இவனுக்கு. வீட்டிலே ஒவ்வொருவரையும்னு அதிகாரம் பண்ணுகிறான்! வீட்டுக்கு எஜமான் இடம் கொடுத்தால் நான், பொம்மனாட்டி என்ன பண்ண முடியும்?' என்று நினைத்தாள் அம்புஜம்.

'அம்புஜம் பட்டணவாசத்துப் பெண்; அதனாலே கிராமாந்தரப் பழக்கங்கள் தெரியவில்லை. கந்தன் பேசுவதே அவளுக்கு அர்த்தமாகவில்லை. எல்லாம் பழகப் பழகச் சரியாகப் போய்விடும். என்ன இருந்தாலும் கந்தன் மாதிரி நம்பிக்கையாக உழைக்கக்கூடிய வேலைக்காரன் எங்கே கிடைப்பான்!' என்று முதலில் நினைத்தான், சுந்தரேசன்.

## 2

ஆனால் சுந்தரேசன் நினைத்த மாதிரி, பழக்கம் அம்புஜத்தை மாற்றிவிடவில்லை. அதற்குப் பதிலாக அவளுக்குக் கந்தனிடத்தில் வெறுப்பும் கோபமும் ஏற்பட்டுவிட்டன.

ஒரு நாள் காலை எட்டு மணி இருக்கும். அம்புஜம் வீட்டு வேலைக்காரிக்கு முதல் நாள் மிஞ்சிய சோற்றைப் போட்டுக்கொண்டிருந்தாள். அப்போது கந்தன் எங்கோ வயலுக்குப் போய்விட்டுத் தோட்டத்திலிருந்து உள்ளே நுழைந்துகொண்டிருந்தான். அப்படியே நின்று இதைப் பார்த்துக்கொண்டிருந்தான் அவன். வேலைக்காரியின் தலை மறைந்தவுடனே உள் பக்கம் வந்து நின்றுகொண்டு அம்புஜத்தைப் பார்த்துச் சொன்னான்: "அம்மா, கோவிச்சுக்காதிங்கோ. வேலைக்காரிக்குத்தான் மாச மாசம் சம்பளம் கொடுக்கிறோமே. எதுக்காகச் சோறு போடணும்? பெரியம்மா இருக்கிறபோது இதெல்லாம் கிடையாது" என்று.

தான் கண்டிராத ஒரு பெரியம்மாளைப் பற்றிச் சிலாகித்துப் பேசியதில் அம்புஜத்திற்கு வருத்தம் இல்லை.

தன்னை அதிகாரம் பண்ண இவன் யார்? அந்த வீட்டிற்கு அவள் எஜமானி அல்லவா? இஷ்டம்போல் செய்ய அவளுக்கு உரிமை இல்லையா? அவளுக்குப் பிரமாத மான கோபம் வந்துவிட்டது. கோபம் முற்றி அழுகை கூட வந்துவிட்டது. ஒன்றும் பேச முடியவில்லை. பதில் சொல்லாமல் உள்ளே போய்விட்டாள்.

சற்று நேரம் கழித்துக் கந்தன் குழந்தை மணியைத் தூக்கிக் கொஞ்சிக்கொண்டே தெருவிலிருந்து உள்ளே வந்தான். கூடத்தில் ஏதோ காரியமாய் இருந்தாள் அம்புஜம்.

"என்ன சுளந்தை, இன்னிமே நீ தெருப்புழுதி யிலே போய் விளையாடினியோ உன்னை நான் அடிச்சுப் புடுவேன். இங்கே பாரு. பாக்கமாட்டாயா! சீ! களுதே!" என்ற கந்தன் குரல் அவள் காதில் விழுந்தது. உடனே ஓடிப்போய், "டேய் கந்தா, புள்ளையைப் பயமுறுத் தாதே! நீ கொஞ்சினது போதும். கொண்டு வா, இங்கே" என்று குழந்தையை வெடுக்கென்று பிடுங்கிக் கொண்டு வந்துவிட்டாள்.

அன்று பகல் ஒரு மணி இருக்கும். எங்கோ வயல் களுக்குப் போய்ச் சுற்றிவிட்டுக் களைத்துப்போய், 'அப் பாடா!' என்று வந்து உட்கார்ந்தான் சுந்தரேசன். அம்புஜம் ஒரு டம்ளரில் குளிர்ந்த மோரைக் கொண்டு வந்து அவன் பக்கத்தில் வைத்துவிட்டு, ஒரு விசிறியை எடுத்து அவனுக்கு விசிறிக்கொண்டு நின்றாள்.

"இங்கே இன்று கந்தன் வந்தானா? வயலுக்குப் போயிருந்தேன், காணவில்லை" என்றான் சுந்தரேசன். மோர் குடித்த வாயைக் கையால் துடைத்துக்கொண்டே.

"அவனுக்கு வயலுக்குப் போக நேரம் ஏது? இங்கே எல்லாரையும் அதிகாரம் பண்ணத்தானே போது சரியாயிருக்கிறது?" என்றாள் அம்புஜம் அதிருப்தி யுடன்.

"என்ன?"

"இன்னும் கொஞ்ச நாளில் அவன் எல்லாரையும் வீட்டை விட்டே விரட்டிவிடுவான்."

இந்தப் பதிலைச் சுந்தரேசன் எதிர்பார்க்கவில்லை. வியப்புடன், "அம்புஜம், நீ என்ன சொல்லுகிறாய் என்று விளங்கவில்லையே?" என்றான்.

"எல்லாம் நீங்கள் கொடுக்கிற இடந்தானே அது?"

"ஏன், என்ன?"

"இந்த வீட்டில் இனிமேல் குடித்தனம் பண்ண யோக்கியதை இல்லை."

வழக்கமாக உள்ள புகாரை விட ஏதோ விசேஷமாக இருக்கவேண்டுமென்று நினைத்தான் சுந்தரேசன். அதனால் ஆவலுடன் கேட்டான்.

"என்ன, அம்புஜம்? என்ன செய்தான் அவன்? என்ன சொன்னான்?"

"என்ன இன்னும் சொல்ல வேண்டும்? என்னை இன்னும் வீட்டை விட்டுப் போ என்று சொல்லவில்லை; பாக்கியெல்லாம் சொல்லிவிட்டான். ஒவ்வொன்றுக்கும் அவனுடைய உத்தரவைத்தான் நான் கேட்க வேண்டுமாம்! வீட்டில் மிஞ்சிப்போன சோற்றை எடுத்து வேலைக்காரிக்குப் போடக்கூட அதிகாரம் இல்லை எனக்கு! என்னைக் 'காய்தா' பண்ண இவன் யாரு? இவன் ஒரு வேலைக்காரன்தானே!—அது மட்டுமா? அந்தச் சின்னக் குழந்தையை என்னபாடு படுத்துகிறான்! 'போடா' என்கிறான், 'வாடா' என்கிறான்; கழுதையாம், குதிரையாம்! அதை அதட்டி உருக்கறான்! கொஞ்சமாவது தான், 'ஒரு வேலைக்கார நாய்' என்ற நினைப்பு இருந்தால்தானே? இந்த வீட்டுக்கே எஜமானனாய் நினைத்துக் கொண்டுவிட்டால்—?"

சுந்தரேசனுக்கும் மனம் சலித்தது. கந்தன் நல்லவன்தான்; ரொம்ப நல்லவன். அவன் இல்லாவிட்டால் சுந்தரேசனுக்கு ஒரு வேலையும் ஆகாது. நான்கு வருஷத்துக்கு முன், காலேஜிலிருந்து வந்தவுடன் அவனுக்கு என்ன தெரியும்? வெறும் சகதியாயிருக்கும் வயல்கள் மூன்று மாதத்திற்குள் எப்படி ஒரே தானியமாய்ச் சொரிந்துவிடுகின்றன என்பது அவனுக்கு அப்போது ஒரு பெருத்த ஆச்சரியம். அவனை இவ்வளவு தூரம் தயார் பண்ணி, வேலையின் 'சூக்ஷுவு நெளிவுகளை' எல்லாம் கற்றுக்கொடுத்தவன் கந்தன்தானே? இப்பொழுதுந்தான் என்ன? கொஞ்சம 'அடா பிடி'யான வேலைகளில் கந்தன் இல்லாமல் அவனால் சமாளிக்க முடியுமா? அப்படி மரியாதை தெரியாதவனா கந்தனும்?

ஆனாலுங்கூட அம்புஜம் அவன் மனைவி. கந்தனுக்கு எஜமானி அல்லவா? அவளுடைய மனம் நோகச்செய்ய யாருக்குத்தான் அதிகாரம் உண்டு? அவளுடைய கண் கலங்க அவன் சகித்துக்கொண் டிருக்க முடியுமா?

"இதற்குத்தானா! பூ! நீ வருத்தப்படாதே; அவனை நான் கண்டிக்கிறேன்" என்று மனைவியைத் தேற்றினான் சுந்தரேசன்.

## 3

நாளடைவில் சுந்தரேசனுக்குக் கந்தனிடத்தில் தோன்றிய சலிப்பு வளரத் தொடங்கியது. அதற்கு அனுசரணையாகவே சில சம்பவங்களும் நடந்தன.

ஒரு நாள் சாயந்தரம் ஆறு மணி இருக்கும். குழந்தை மணியை வைத்துக்கொண்டு கொஞ்சிக் கொண்டு திண்ணையில் உட்கார்ந்திருந்தான் சுந்தரேசன். விளக்கு வைப்பதற்காக வாசற்புறம் வந்த அம்புஜம், அந்தக் காட்சியைக் கண்டுவிட்டு அப்படியே வாத்ஸல்யத்

துடனும் பெருமையுடனும் பார்த்துக்கொண்டே நின்ருள்.

அப்போது அவசரமாக ஓடி வந்தான் கந்தன். "சாமி, இன்னிக்கி நீங்க ராத்திரிக்கு வந்தால்தான் முடியும். தண்ணி வந்து விட்டது. சின்னவங்க தண்ணியைப் பாச்சிக்கப் போருங்களாம். அப்புறம் நம்ம பாடு தகராறுதான். உங்க தலையைக் கண்டால் ஒரு பயல் வரமாட்டான். வேலையும் நடக்கும்......" என்று படபட வென்று சொன்னுன்.

ஊருக்குள்ளேயே அதிக நிலங்களுள்ள மிராசுதார் சுந்தரேசன்தான். அதனுல் ஆற்றில் தண்ணீர் வந்த உடனேயே வருஷந்தோறும் முதலில் அவன் பாய்ச்சிக் கொண்டுவிடுவது வழக்கம். ஏனெனில் அவனுடைய நிலங்கள் ஆற்றையொட்டி இருப்பதோடு கொஞ்சம் மேடானவையுங்கூட. இது பரம்பரையாக வந்த ஓர் உரிமை. சுந்தரேசனுடைய தந்தை ஐயாவையர் இருக்கும் வரையில் அவரை எதிர்த்து யாரும் குறுக்கே பேசக்கூட மாட்டார்கள். அவ்வளவு செல்வாக்கு, மதிப்பு, ஊரில் அவருக்கு. அடுத்தபடியாக நிலங்களுள்ளவர் சின்னப்பண்ணைச் சாமுவையர். அவர் இருக்கும் வரையில் சாமுவையர் அடங்கிக் கிடந்தார். அவர் காலமான பிறகு தமக்குப் போட்டியான சுந்தரேசனை எதிர்க்கச் சமயம் பார்த்துக்கொண் டிருந்தார்.

ஆகவே கந்தன் சொன்னவுடன் சந்தர்ப்பத்தின் நெருக்கடியை நன்ருக அறிந்துகொண்டான் சுந்தரேசன். ஏதோ கொஞ்சம் யோசனை பண்ணினுன். பிறகு மெதுவாக, "நான் வந்து என்ன பண்ணவேணும்?" என்று கேட்டான்.

"என்னங்க, நீங்க வந்து கொஞ்சம் தலை காட்டினுல் போதும்; வேலையை முடித்துவிடலாம். பள்ளப் பயல்களை எல்லாம் வரச்சொல்லி யிருக்கிறேன்."

"இன்னிக்கி நான் வர முடியாதேடா. இன்னிக்கித் தானு நாள் பார்த்தே அதற்கு?" என்று கேட்டான் சுந்தரேசன், யோசித்துக்கொண்டே. ஏனென்றால் அன்று இரவு பக்கத்தில் ஐந்து மைல் தூரத்தில் நகரத்தில் நடக்கும், 'தசாவதாரம்' டிராமாவுக்குப் போவதாகத் தீர்மானித்திருந்தான் அவன்.

"அப்புறம் வேலை நடக்கணுங்களே—"

"வேலை நடக்கணுமானால், நீதான் இருக்கையே, என்ன பண்ணப்போகிறாய்? ஐயர் வந்து வேலை செய்யப் போகிறாரா? எல்லாம் நீயே பாத்துக்கோ" என்று எதிர்பாராத விதமாய்ப் பதில் சொன்னாள் அம்புஜம்.

கந்தனுக்கு என்ன சொல்வதென்று தோன்றவில்லை. ஆவலுடன் ஐயரின் வாயைப் பார்த்தான்.

சுந்தரேசன் ஒன்றும் சொல்லவில்லை. அவனைப் பார்த்து அம்புஜம் சொன்னாள்: "எல்லாம் அவன் பார்த்துக்கொள்ளட்டுமே. இன்னிக்கித்தான் கடைசியாம். ஊரிலே எல்லாரும் போய்விட்டு வந்தாச்சு. நாம். தான் பாக்கி!" என்று.

அவளுடைய அந்த வார்த்தை, பிரச்னையைத் தீர்த்துவிட்டது.

"சரி. நீ இன்னும் எவ்வளவு கூலியாட்கள் வேண்டுமோ வைத்து வேலையை முடித்துக்கொள்; நான் வர முடியாது" என்று தீர்மானமாகச் சொல்லிவிட்டான் சுந்தரேசன்.

ஏமாற்றத்துடன் திரும்பினான் கந்தன்.

மறுநாள் பகல் கந்தன் வீட்டுக்குப் போனபோது கோபம் கொதிக்கும் முகத்துடன் இருந்த சுந்தரேசனைக் கண்டதும் திடுக்கிட்டான்.

"ஏண்டா, நேற்று ராத்திரி எங்கே போயிருந்தாய்?" என்று ஆத்திரத்துடன் கேட்டான் அவன்.

"எங்கும் இல்லிங்களே, வயலுக்குத்தான்."

"நேற்று ஏன் தண்ணி பாய்ச்சலே?"

"அதானுங்க; சின்னப் பண்ணை ஐயரே வந்திருந்தாரு. நான் போறத்துக்குள்ளே அவங்க வந்துட்டாங்க. நம்ம ஆட்களுக்கும், அவங்க ஆட்களுக்கும் கைகலப்பு வந்துடும்போலே ஆயிடுச்சு. நீங்க இல்லாதபடிக்கு நம்ம ஏதாவது செய்தா, பிரமாதமா வந்துடும்னு நம்ம ஆள்களை அடக்கிக் கொண்டாந்துட்டேனுங்க."

"இனிமே தண்ணி எப்போ பாச்சுவது?"

"நான் என்ன பண்றதுங்க? நேத்திக்கே சொன்னேன். நீங்கதான் வந்து.."

சுந்தரேசனுக்குக் கோபம் பொங்கிற்று. வீம்பு பண்ணுகிறுன இவன்?

"என்னடா நீங்கதான்?"

"நீங்க—கவனிக்கல்லே. போன வருசந்தான் தண்ணி இல்லாமெக் காஞ்சுபோய்—கிஸ்திக்குக்கூட ஐந்நூறு ரூபா கடன் வாங்கிச்சு......"

அட அயோக்கின்! இவன் அதிகாரமா அது! அம்புஜம் சொன்னதில் பிசகென்ன! கோபம் கட்டு மீறிற்று.

"சீ! சீ! நாயே! நீ யார் என்னைச் சொல்ல? மரியாதையோடே இரு. இல்லேன்னு நாளைமுதல் இங்கே படி ஏறுதே. இனிமேல் உனக்கு இங்கே வேலை இல்லை; போ வெளியே!"

கந்தன் ஏதோ திடீரென்று மின்னலால் தாக்குண்டவன் போலத் திடுக்கிட்டு ஸ்தம்பித்து நின்றுன். இதுவரையில் சீ என்ற வார்த்தையை அவன் கேட்டது உண்டா? அதைப்பற்றி யோசிக்கவே இல்லை, அவன் மனம்.

மட மடவென்று ஏதோ பதில் சொல்ல வேண்டு மென்று நினைத்தான். ஆனால் வார்த்தை வரவில்லை. ஒரு பெரிய வெள்ளத்தில் அகப்பட்டு முழுகியதுபோல் தவித்தது அவனுடைய நெஞ்சு.

## 4

அன்று இரவு முழுவதும் யோசித்தான் கந்தன். அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. மூளை கலங்கியிருந் தது. அவன் மறுநாள் வீட்டுக்குப் போவதா? 'போகா மல் என்ன பண்ணமுடியும்? மறுபடியும் அவமானப் படுவதா? அவமானம் ஏது? ஐயர் வீடு அவன் வீடு அல் லவா?' இதெல்லாம் அவன் மனத்தில் எழுந்து வாட்டிப் பதில் கிடைக்கப் பெறுமல் போன கேள்விகள்.

மறுநாள் காலையில் வழக்கம்போல் அவன் கால்கள் அவனைச் சுமந்துகொண்டுபோய் ஐயர் வீட்டிற்குள் நிறுத்தின. ஆனால் அவனுடன் யாரும் பேசவில்லை. அது மாத்திரம் அல்ல. அவனுக்குப் பதிலாக அவனுடைய ஸ்தானத்தில் புதிய ஆள் ஒருவன் வந்திருந்தான். அவன் அந்த வீட்டிற்குப் வேலைக்குந்தான் புதியவனேயன்றிக் கந்தனுக்குப் புதியவன் அல்ல. அவனுடைய எதிர் வீட்டுக்காரன் சுப்பையன்; எப்பொழுதும் இவனுடைய சுக வாழ்க்கையில் பொருமைகொண்டவன். 'அல்ப நாய்' என்று நினைத்தான் கந்தன்.

என்னதான் இருந்தாலும் அவனுக்கு அந்த வீட் டில் உரிமை இல்லையா? முப்பது வருஷமாகக் கால்தேய உழைக்கவில்லையா? ஏதாவது கொஞ்சமேனும் அவன் மேல் பிசகு சொல்ல முடியமா? தன்னுடைய 'காணி யாட்சி'யை விட்டுவிட முடியுமா? ஊரார் சிரிக்க மாட்டார் களா?

அவனுக்குச் சிந்தனை ஓடவில்லை. வீட்டை விட்டு யந்திரம் மாதிரி வெளியே போனுன். தெருக்கோடியில்

மாட்டுக் கொட்டம் இருக்கிறது. அங்கே ஆயிரம் தடவை போய்ப் பழக்கப்பட்ட கால்கள் தாமாகவே போயின. உள்ளே நுழைந்தான் கந்தன். எதிர்த்தாற்போல் நின்றன, அவனுடைய செல்வக் குழந்தைகளாகிய காளை மாடுகள். எட்டு வருஷங்களாக அவைகளைக் குழந்தைகள் மாதிரி வளர்த்துவந்திருக்கிறான். அவைகளுக்குத் தீனி வைக்காமல் அவன் சாப்பிடுவதில்லை தினமும். 'பெரிய எசமான்' இருக்கிறபோது அவனுக மூன்று மாதம் தேடி அலைந்து முந்நூறு ரூபாய்க்கு வாங்கியவை, அவை இரண்டும். இப்போது ஐந்நூறு ரூபாய் பெறும்.

அவைகளை ஆசையுடன் முதுகில் தடவிக்கொடுத்தான். அவன் கண்களில் நீர் நிரம்பியிருந்தது. கொட்டத்தை விட்டு வெளியே போகிறபோது, 'முப்பது வருஷமாக வளர்த்த நினைப்புகளை விட்டு இனிமேல் பிரிந்திருக்க முடியுமா?' என்று நினைத்துக்கொண்டே போனான் கந்தன்.

## 5

முப்பது வருஷ காலமாக வளர்த்த நினைப்புகளை விட்டுப் பிரிந்திருப்பது அவ்வளவு சிரமமன்று என்பதைக் காட்டிவிட்டான் கந்தன் சீக்கிரத்தில்.

சுந்தரேசனுடைய வீட்டை விட்டு வெளியில் வந்த பின் ஒரு வாரம் வரையில் கந்தனுக்குப் பித்துப் பிடித்த மாதிரி இருந்தது. யாரையோ சாகக்கொடுத்த மாதிரி நிரந்தரமான ஒரு துக்கம் நெஞ்சில் அடைத்துக்கொண்டிருந்தது. பகற் காலங்களில் வீட்டை விட்டு வெளியிலேயே கிளம்புவதில்லை.

எத்தனை நாள் இப்படி இருக்கமுடியும்? அவன் பெரிய சமுசாரி. மூன்று பெண்களும் மூன்று பிள்ளைகளும் இருந்தன. பெண்களையெல்லாம் கல்யாணம் செய்து கொடுத்து அனுப்பியாகிவிட்டது என்றாலும்,

பிள்ளைகளெல்லாம் சிறு குழந்தைகள். இன்னும் சம்பாதிக்கும் வயசு வரவில்லை. எத்தனை நாள்தான் எல்லாம் பட்டினி கிடக்கும்? பெரிய பண்ணையில், ஊருக்கே அதிகாரியாய், கங்காணம் செய்துவிட்டு அதே ஊரிலேயே போய்க் கூலிவேலை செய்து பிழைப்பதென்றால் அவனால் முடியுமா? என்ன கேவலமாக இருந்தாலும் யாருக்குத்தான் முடியும்?

இப்படியும் அப்படியுமாகப் பத்து நாட்களாயின. கடைசியிற் கந்தன் முன்னால் நினைத்துப் பார்த்திருக்க முடியாத ஒரு நிலைமையில போய்ச் சேர்ந்தான். அதாவது, அந்த ஊரிலேயே அவன் முப்பது வருஷகாலமாக உழைத்து அதிகாரம் பண்ணிக்கொண் டிருந்த பண்ணைக்குப் பங்காளியான சின்னப் பண்ணையில் வேலைக்கு அமர்ந்தான். அவனாக அவர்களிடம் போகவில்லை; வாஸ்தவந்தான். அங்கேயும் கங்காண வேலைதான். இருந்தாலும் ஒரு மாதத்துக்கு முன்னால் இந்த நிலைமையை அவன் சொப்பனத்திலும் நினைத்துப் பார்த்திருப்பானா? இந்த மாதிரி எதிர்பாராத நிலைமைகள் உலகத்தில் நேர்வது உண்டு என்று முதலில் அப்போதுதான் உணர்ந்தான் கந்தன்.

ஒரு மாதமாயிற்று. வெளிப்படையாகக் கந்தனுடைய நிலைமை சரியாகப் போய்விட்டாலும் உள்ளூறப் புண் ஆறவே இல்லை. அவனுடைய உள்ளம் முழுவதும் பழைய இடத்திலேயே திருப்ப முடியாதபடி சென்றுலயித்திருந்தது. ஒவ்வொரு சமயம் அவன் முன்பு வேலை செய்த இடங்களுக்குப் போனால் பழைய நினைவுகள் வந்துவிடும். அப்படியே வேலையைப் போட்டுவிட்டுக் கனவு கண்டுகொண்டு நின்றுவிடுவான். வயல்களில் எங்கேயாவது அவனுடைய செல்வக் குழந்தைகளான மாடுகளைப் பார்ப்பான். அப்படியே கண்களில் ஆசை ஊறக் கல்லாய் நின்றுவிடுவான்.

## ௬

கந்தன் பண்ணையை விட்டுப் போய் ஆறு மாதத்திற்குமேல் ஆகிவிட்டது.

சுந்தரேசன் உண்மையிலேயே சில சமயங்களில் கந்தனை நினைத்து வருத்தப்பட்டான். அவனுடைய தேவையைச் சில சமயங்களில் உணருவான். சுப்பையனோ வேலைக்குப் புதிது. சில நெருக்கடியான சந்தர்ப்பங்களில், 'கந்தன் இந்தச் சமயத்தில் இருந்திருந்தால்—?' என்று நினைப்பது உண்டு. இருந்தாலும்,'என்ன வேலைக்காரனானாலும் அகம்பாவம் ஆகுமா? முப்பது வருஷம் உழைத்த உரிமையைக் கொண்டு மரியாதை கெட்ட நடத்தை நடக்கலாமா? அதைச் சகித்துக்கொண் டிருக்க முடியுமா யாரும்?'

கந்தனுடைய தேவையை அவசியமாக உணரும் ஒரு சம்பவம் நேர்ந்தது. அன்று மாலை, வழக்கமாக மாடுகளுக்குத் தீனி வைக்கக் கொட்டிலுக்குப் போன சுப்பையன் ஓடோடியும் வந்து, "சாமி, கொஞ்சம் கொட்டிலுக்கு வாங்க. நீங்க வந்து பாருங்க" என்றான் பரபரப்புடன்.

சுந்தரேசன் கொட்டிலுக்குள் நுழைந்ததும் அங்கே அவனை வரவேற்ற காட்சி திடுக்கிடச் செய்தது.

எதிரில் அவனுக்கு மிகச் செல்லமான பூர்ணி ஜோடியில் ஒரு காளை ரிஷபம் மாதிரி கீழே கால்களைப் பரப்பிக்கொண்டு கிடந்தது; அதனுடைய வாயிலிருந்து நுரை வழிந்துகொண் டிருந்தது; பெரிய சத்தத்துடன் சுவாசம் வந்துகொண் டிருந்தது.

"சுப்பா, என்னடா இது?" என்றான் சுந்தரேசன் கவலையுடன்.

"இன்னிக்கிக் காலையிலிருந்தே அந்தக் காளை சரியா இல்லீங்க. சாயந்தரம் முதல் இப்படியே கிடக்குங்க.

நேற்று முதலே தீனி திங்கலேங்க" என்றான் சுப் பையன்.

உடனே உள்ளூர் மாட்டு வைத்தியனுக்கு ஆள் அனுப்பப்பட்டது. அவன் வந்தவுடன் வாயில் ஏதோ பச்சிலையைப் பிழிந்தான். "காலையில் வந்து பாக்கறேன். அதற்கு அப்புறந்தான் சொல்ல முடியும்" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டான்.

சுந்தரேசனுக்குத் துக்கம் நெஞ்சை அடைத்தது. குழந்தை மாதிரி வளர்த்த மாடு! அது போய்விட்டால் எவ்வளவு நஷ்டம்!'

மறு நாள் காலையில் மாட்டுக்குக் குணம் ஏற்பட வில்லை. நோய் இன்னும் அதிகமாக இருந்தது. கண்கள் பிதுங்கிவிட்டன. அன்று பகல் முழுவதுங்கூடத் தாங்காது என்று தோன்றிற்று.

படாத பாடு பட்டான் சுந்தரேசன். யார் யாரையோ வந்து பார்க்கும்படி செய்தான். ஒன்றும் பிரயோசனம் இல்லை. மாடு போனதுதான்.

அந்தச் சமயத்தில் யாரோ கூட்டத்திலிருந்து, "கந்தையன் கைப்பச்சிலை பட்டால் போதும்; சிட்டாப் பறந்திடும் இது" என்று சொன்னது காதில் விழுந்தது அவனுக்கு. இது அவனுக்கும் ஏற்கனவே தெரியும். இருந்தாலும், 'நாயே!' என்று வீட்டைவிட்டு விரட்டி யவனைப் போய் அழைப்பதா? அவனுடைய தயவை எதிர்பார்ப்பதா? அப்படியும் அவன் வருவான் என்பது என்ன நிச்சயம்? அவமானப்படுவது முடியுமா?

இருந்தாலும் கடைசியாகப் பார்க்கலாமென்று தோன்றிற்று, அவனுடைய ஆசை. ஒரு பள்ளனை அழைத்து, "போய்க் கந்தையனை நான் அழைப்பதாகக் கூட்டி வா" என்று அதிகாரத்துடன்தான் சொன்னான்.

ஆனால் அவன் சற்று நேரத்தில் திரும்பி வந்து, "அவர் வீட்டில் இல்லையாம்" என்று சொல்லிவிட்டான்!

அந்தக் கடைசி ஆசையிலும் இடி விழுந்தது.

## 7

அந்தி மயங்கும் சமயம். கந்தன் பெரிய பண்ணைச் சுந்தரேசையருடைய கொட்டிலுக்குள் நுழைந்தான். அவனுடைய கையில் ஏதோ ஒரு கொத்துத் தழை இருந்தது. அப்போதுதான் வயலில் வேலை செய்து கொண்டிருந்த அவன் சமாசாரத்தைக் கேள்விப் பட்டான். அவனுக்கு இருப்புக்கொள்ளவில்லை. உடனே பச்சிலையைப் பிடுங்கிக்கொண்டு நேராக ஓடி வந்தான். அவனுக்கு ஒரே ஞாபகந்தான். எல்லாவற்றையும் மறந்து கொட்டிலுக்குள் நுழைந்தான். அங்கே ஒருவரும் இல்லை. கால்களை விரித்துக்கொண்டு மகா கோரமாகக் கிடந்தது, 'பூர்ணி!'க் காளை. தன்னுடைய கண்களில் வழிந்த கண்ணீரைத் துடைத்துக்கொண்டே மருந்து இலையை அதன் வாயில் திணித்தான்.

கொட்டிலை விட்டு வெளியே வந்த பிறகுதான் கந்தனுக்கு அவனுடைய சுயப் பிரக்ஞை வந்தது. உடனே தன் வேலை ஞாபகம் வந்தது. நேராகச் சின்னப் பண்ணையின் வீட்டை நோக்கி நடந்தான். வீட்டிற்குள் நுழைந்து ரேழியை அடைந்ததும், யாரோ குசுகுசுவென்று பேசும் சத்தம் கேட்டுச் சட்டென்று நின்று கவனித்தான், கந்தன். சாமு ஐயர் தம் பிள்ளை சங்கரனிடம் பேசிக் கொண்டிருந்தார், தாழ்ந்த குரலில்.

சில நிமிஷங்களில் அவர்கள் பேசிக்கொண் டிருந்த விஷயம் புரிந்துவிட்டது கந்தனுக்கு. உடனே அவன் உடம்பு துடித்தது; அவனுள் இருந்த ஏதோ ஒன்று அவனை உந்தித் தள்ளத் தெருவுக்கு ஓடிவந்தான்.

சென்ற வருஷத்தில் சுந்தரேசன் கிஸ்தி கட்டுவதற்காக அவசரமாக உள்ளூர்ச் செட்டியாரிடம் ஐந்நூறு ரூபாய் கடன் வாங்கியிருந்தான். அது கந்தனுக்கு நன்றாய்த் தெரியும். அந்தப் பணத்திற்காகச் செட்டியாரிடம், 'மேடோவர்' வாங்கிக்கொள்ள ஏற்பாடு செய்துவிட்டார் சாமுவையர். அதை ஒரே நாளில் நிறைவேற்றிச் சுந்தரேசனைக் கோர்ட்டுக்கு இழுப்பதைப் பற்றிப் பிள்ளையுடன் ஆலோசித்துக்கொண் டிருந்தார். இதுதான் அவன் அறிந்துகொண்டது.

அதைக் கேட்டதும் க்ஷணமும் பொறுக்கவில்லை அவனுக்கு. உடனே சுந்தரேசனிடம் போய்த் தெரிவித்து விடவேண்டுமென்று ஓடிவந்தான். தெருவில் வந்ததும் அவன் மனம் சற்றுச் சலித்தது. 'அவர் உள்ளே விடுவாரோ, மாட்டாரோ, ஐயர்!'

கடைசியில் தெருப்பக்கம் போகாமல் தோட்டப் பக்கமாய்ப் போய், சுந்தரேசனுடைய வீட்டை அடைந்தான். தோட்டக்கதவு சாத்தப்பட்டிருந்தது.

வாசற்படியில் ஒரு நிமிஷம் நின்றான். அவனுடைய நெஞ்சில் பல பல யோசனைகள் எழுந்தன.

'கதவைத் தட்டலாமா? தட்டுவது சரியா? தான் வந்திருப்பதைத் தெரிந்துகொண்டு கதவைத் திறக்காவிட்டால்-?' என்றெல்லாம் யோசித்தான். கடைசியில் எல்லாவற்றிற்கும் மேலாக ஏதோ ஒன்று அவனை, 'கதவை இடி. இடி' என்று தூண்டிற்று.

துணிந்து கதவை இடித்தான்.

"யார் அது?"

"நான்தான் கந்தன்."

அவனுடைய வாய் குழறிற்று; நெஞ்சு அடைத்துக் கொண்டது.

ஐந்து நிமிஷமாயிற்று. கதவு திறக்கப்படவில்லை. பத்து நிமிஷமாயிற்று. கதவு திறக்கப்படவில்லை.

கந்தனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. பைத்தியம் பிடித்தவனைப்போல் திரும்பி ஓடத் தொடங்கினான்.

கதவு திறக்கப்பட்டது.

"ஒருவரையும் காணோம். காற்றுத்தான்" என்ற அம்புஜத்தின் குரல்.

மறுபடியும் கதவு சாத்தப்பட்டது. அதற்கு வெகு நேரத்துக்கு முந்தியே கந்தன் மூலை திரும்பி மறைந்து விட்டான்.

# தாம்பத்ய வசியம்

## 1

'ஆண்டவன் காற்றைப் படைத்தான்; கடலைப் படைத்தான்; கன்றுக் குட்டியைப் படைத்தான்; இன்னும் எவ்வளவோ நல்ல சாமானெல்லாம் படைத்திருக்கிறானே; இந்தப் பெண்ணையும் ஏன் படைத்தான்?' என்று தொண்ணூற்றெட்டாவது தடவை வாய்விட்டுச் சொல்லிப் பெருமூச்சு விட்டான் சேஷண்ணா.

அவனுக்கு எதிரில் விரிந்தபடி கிடந்தது அந்தப் புஸ்தகம். திறக்கப்பட்டுக் கிடந்த அந்த ஏடு சொல்லிற்று:

"அவளிடம் அதிகமாகப் பேசாதே. ஆனால் கோபமும் காட்டிக்கொள்ளாதே. கூடிய வரையில் அவள் கேட்பதை வாங்கிக் கொடு. ஆனால் அடிக்கடி அவளுடைய கண்ணில் படாமல் போய்விடு. அவள், 'எங்கே போனாய்?' என்று கேட்டால் ஏதாவது ஒரு காரணம் சொல்லு. ஆனால் நீ சொல்லும் காரணத்தால் அவளுக்குச் சந்தேகம் வரவேண்டியது அவசியம்.—இதை ஒரு மாதம் வரையில் அனுசரித்துவிட்டுத் தேவையானால் அடுத்த பாடத்துக்குப் போ..."

அதற்கு மேல் படிக்கப் பொறுமையில்லை, சேஷண்ணாவுக்கு.

'சீ—அவள் கேட்கிறதையெல்லாம் வாங்கிக்கொடுத்தால் மூணே நாளில் நான் ஆண்டிதான்!......என்னவோ கதை விடறான்! ஏழே கால் ரூபா தண்டம்!......' என்று வாய் விட்டுச் சொன்னதும் சொல்லாததுமாய்ப்

புஸ்தகத்தை மூடி டொக்கென்று போட்டுவிட்டு நிமிர்ந்து நேராக உட்கார்ந்தான் சேஷண்ணு.

அப்போது கேட்ட குரல் சேஷண்ணுவின் தர்ம பத்தினியான கல்பகத்தின் பிரவேசத்தை அறிவித்தது.

"என்ன, எங்கேயோ காவேரிக்குப் போகப் போறேன்னியளே, போகலியா? சாயங்கால வேளையிலே இப்படி அடைச்சுக் கிடப்பாளா புருஷா?..."

அந்தப் புஸ்தகம் சொன்னதையும் மீறிச் சேஷண்ணுவுக்குக் கோபம் வந்தது.

"பொம்மனாட்டி இப்படித் தொண்டையைக் கிழிச்சுண்டு கத்துவாளா?" என்று துணிந்து சொல்லிவிட்டான் கோபமாக.

"ஆமா, நான் கத்தறேன். நீங்க மயிலா இருக்கய."

இப்போது உள்ளே நுழைந்துவிட்டாள் அம்பிகை. நுழைந்ததும் அவனை விழித்துப் பார்த்தாள். உடனே உடலை நெளித்து, கைகளால் அபிநயம் பிடித்து முகத்தில் பாவம் ததும்ப, "ஆமாம், இப்படி அறுபது நாழியும் படுக்கையை விரிச்சுண்டு படுத்துக் கிடந்தா வீடு விடியுமா? வீட்டிலே லக்ஷ்மி வாசம் பண்ணுவளா?" என்றாள்.

"நீ இருக்கிறபோது லக்ஷ்மி எதற்கு?" என்றான் சேஷண்ணு, சற்றுக் கோபத்தைக் குறைத்துக்கொண்டு. அந்தப் புஸ்தகத்தின் கட்டளையை நினைத்துக்கொண்டு.

"இல்லாவிட்டா முகத்திலேதான் லக்ஷ்மி களை சொட்டறதே!—பாத்தாத் தெரியலையோ அழகு!"

"நம்ம ரதிக்கிளிதான்! அந்தத் தொன்னைக் காது ஒண்ணே போருமே!"

"நான் ரதியில்லைதான். அப்போ கண்ணு அவிஞ்சா போச்சு? பாத்து ரதியா இருக்கிறவளைப் பண்ணிக்கப்

படாதோ!—வந்தயளே வாலைக் குழைச்சிண்டு, அப்பாவும் பிள்ளையும், பொண் பார்க்க!—"

"ஏ, கழுதே!"

எதிரி பின் வாங்கிக்கொண்டே, "நான் கழுதை தான்—அதுக்கும் கேடு கெட்டுத்தான்..." என்று சொன்னது சேஷண்ணுவின் காதில் விழுந்தது. பின் வாங்கும் எதிரியை அவன் துரத்த விரும்பவில்லை. எதிரில் மூடப்பட்டுக் கிடந்த புஸ்தகத்தின்மேல் அவன் பார்வை விழுந்தது.

தாம்பத்ய வசியம்: அமெரிக்க டாக்டர் எச். டி. ஹக்ஸ்லி, எம். டி. அநுபவபூர்வமாய் ஆராய்ச்சி செய்து கண்டுபிடித்த ஆலோசனைகள்.

ஏழேகால் ரூபாய் கொடுத்து வாங்கின அந்தப் புஸ்தகத்தின் மேலெழுத்துக்கள் அவன் அதிகமாகப் பேசி விட்டானென்று அவனைப் பார்த்துக் கடிந்து கொள்ளுவதுபோல் தோன்றின, சேஷண்ணுவுக்கு. அதற்கேற்றாப்போல் பக்கத்தில் சமையற் கட்டிலிருந்து விக்கி விக்கி விசிக்கும் பெண் குரலும் கேட்டது.

புஸ்தகத்தைப் பிரித்து இன்னொரு தடவை படித்தான் சேஷண்ணு. டாக்டர் ஹக்ஸ்லியின் யோசனைகளில் அவனுக்குத் தங்கமானதாகப் பட்டது ஒன்றே ஒன்றுதான். 'அடிக்கடி அவள் பார்வையில் படாமல் மறைந்திரு'—என்பதுதான் அது. அந்த யோசனையை சிரந்தரமாகவே கடைப்பிடிக்க முடியுமானால்—! ஆனால் அவ்வளவு எளிதா ஆண்டியாவது?

## 2

ஒரு புருஷன் நித்தியம் (சில சமயம் ஞாயிற்றுக் கிழமைகள் உள்பட) காலையில் ஒன்பது மணி முதல் ராத்திரி ஏழு மணி வரையில் ஓர் இன்ஷயூரன்ஸ் கம்பெனி

ஆபீஸில் போய், 'லொடபுட, லொடபுட' என்று ஓயாத டைப் அடிக்கும் சத்தத்துக்கு நடுவில் உட்கார்ந்து கொண்டு, ஒவ்வொன்றும் சுமார் மூன்று மணங்கு கனமுள்ள கணக்குப் புஸ்தகங்களில் ஆறைப் புரட்டிப் புரட்டிக் கணக்கெழுதிவிட்டு வீட்டுக்கு வந்து 'அப் பாடா!' என்று ஆய்ந்து ஓய்ந்து உட்காரும் சமயத்தில் ஒரு பொம்மனுட்டி, 'சள் புள்' என்று விழுந்து பிராணனை வாங்கினுல் அவனுக்கு என்னவாக இருக் கும்? அந்தப் பொம்மனுட்டி சொந்த மனைவியேயானுலும் அவனுடைய எண்ணங்கள் காஷாயத்தைச் சமீபிப்பதில் ஆச்சரியம் உண்டோ?

இத்தனையும் யாருக்காக உழைக்கிருன்? அவ னுடைய நன்மைக்காக மட்டுந்தானு? அந்த 'நாப்பத் தஞ்சு' ரூபாய் சம்பளத்தையும் தனக்காகவே செலவழித் துக்கொண்டுவிடுகிருனு? இவனுக்கு ஓர் அனு வேண்டு மென்ருலும் 'கஜானு அதிகாரி'யின் தயவு இல்லாமல் தொட முடியுமா?

'அப்படி இருந்தும்...இந்தப் பெண்களே...பெண் களை ஏன் படைத்தான் கடவுள்?..'

இந்த மாதிரியான எண்ணங்கள் சேஷண்ணுவின் மனத்தில் அடிக்கடி ஓடிக்கொண்டே இருந்தன.

எப்போது பார்த்தாலும் ஏதாவது தொந்தரவு தானு? இன்று எப்போதோ தீபாவளிக்குக் கேட்ட புடைவையை வாங்கிக் கொடுக்காததற்குக் குற்றம்; புகார், குற்றப் பத்திரிகை. நாளைக்கு எப்போதோ தன் தங்கைக்கு நடக்கப்போகும் கல்யாணத்துக்கு மூன்று வருஷம் முந்தி முதல் என்ன புடைவை வாங்குவது, என்ன பாத்திரம் வாங்குவது என்பனபோன்ற முக்கிய மான பிரச்னைகள் பற்றி விவாதம். ஒரு தலைப்பக்ஷ முடிவு; உடனே வழக்கப்படி புகார், குற்றச் சாட்டு,

தண்டனை? அநேகமாகச் சேஷண்ணாவின் உண்ணாவிரதத்தில் வந்து எல்லாம் முடிவடையும்.

'சே, சே, சே! மனுஷ்யன் பிறந்தால் பெண்ணாய்ப் பிறக்க வேண்டும். இல்லாவிட்டால் பிறக்கவே கூடாது. ஆடு மாடுகளாய்ப் பிறக்கலாமே ஒழிய இந்த ஆண் பிள்ளையாய்ப் பிறக்கவே கூடாதப்பா!' என்ற விரக்தியான முடிவுக்கு வந்துவிட்டான் சேஷண்ணா.

எவ்வளவோ முயற்சிகள் செய்து பார்த்துவிட்டுத் தான் சேஷண்ணா கடைசியில் அமெரிக்க டாக்டரின் உதவியை நாடினான். அதுகூட யதேச்சையாக நேர்ந்த விஷயந்தான். ஒரு நாள் பத்திரிகையைப் புரட்டிப் பார்த்துக்கொண் டிருக்கும்போது அந்த விளம்பரம் அவன் கண்ணில் பட்டது:

"உங்கள் மனைவி ஓர் அடங்காப் பிடாரியா?—உங்கள் வீட்டில் சமாதானம் நிலவ வேண்டுமானால் அமெரிக்க டாக்டர் ஹக்ஸ்லியின், 'மனைவியை அடக்க நூற்றெட்டு யோசனைகள்' என்ற ஆராய்ச்சி நூலை வாங்கிப் படியுங்கள்."

அந்தப் விளம்பரத்தைப் பார்த்ததும் அந்த முதல் கேள்வியைக் குறித்துப் பன்னிரண்டு நிமிஷம் யோசனை பண்ணினான் சேஷண்ணா. இரண்டாவது தேவையைப் பார்த்ததும் டாக்டர் ஹக்ஸ்லியின் உதவியை நாட வேண்டியதுதான் என்று தீர்மானித்துவிட்டான்.

## 3

அந்தப் புஸ்தகத்தை மூன்று தடவை அடியிலிருந்து முடிவு வரையில் திருப்பித் திருப்பி நன்றாகப் படித்தான். அதில் சொல்லப்பட்டிருந்த யோசனைகளையெல்லாம் நன்றாக ஜீரணித்து ஒரு காகிதத்தில் ரத்தினச் சுருக்கமாகக் குறித்துக்கொண்டான். அவன் குறித்து வைத்த முடிவான யோசனை இதுதான்:

சூத்: 1. அடிக்கடி அவளுடைய கண்ணில் படாமல் மறைந்துவிடு.

சூத்: 2. அவள் கேட்டால் தப்பு சால்ஜாப்பாகச் சொல்லு. நீ சொல்லுவதை நம்பாமலிருக்கும்படியாகப் பார்த்துக்கொள்ள வேண்டியது உன் பொறுப்பு.

சூத்: 3. நீ ஒரு பெண்ணைக் காதலிப்பதாக அவள் சந்தேகப்படும்படியாக நடந்துகொள். ஆனால், 'இருந்தாலும் இருக்கலாம்' என்று சந்தேகப்படும்படியாகத் தான் நடந்துகொள்ள வேண்டுமே தவிர, திட்டமாக எந்த வழியும் தீர்மானித்து விடும்படியாக இருக்கக் கூடாது.

சூத்: 4. வரவர அவளுடைய மாறுதலைக் கவனித்துக்கொண்டால் அபிவிருத்தி தோன்றும். அதற்கேற்றாற் போல் சமயோசிதம் போல் நிலைமையைச் சமாளித்துக் கொள்ளவேண்டியது.

ஒவ்வொரு யோசனையாகச் சேஷண்ணு அநுபவத்தில் கையாள ஆரம்பித்தான்.

தினமும் மாலை ஆறு மணிக்கு வீட்டுக்கு வந்து விடுவான் சேஷண்ணு. அன்று சரியாக எட்டு அடித்ததுந்தான் வந்தான். அவன் வந்ததும் கல்பகம் அவனை ஒன்றும் கேட்கவில்லை. அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

"சாப்பிட இலை போடவா?" என்றாள் சர்வ சாதாரணமாக.

மனசுக்குள்ளாகவே டாக்டர் ஹக்ஸ்லியைத் திட்டிக் கொண்டே, "ஊம்" என்றான்.

இலையில் உட்கார்ந்ததுமாவது, 'ஏன் இன்று இத்தனை நாழிகை?" என்று கேட்கமாட்டாளா என்று ஏங்கிற்று அவன் மனம். அவளா? மூச்சுவிடவில்லை! தினசரி

வேறு எதற்காகவாவது சண்டையாவது போடுவாள். இன்று அதுவும் இல்லை.

கடைசியில் சேஷண்ணு பொறுமையை இழந்தவனாய்த் தானாகவே விஷயத்தை ஆரம்பித்து விடுவதென்று தீர்மானித்து, "ஒண்ணுமில்லாமல் எட்டு மணி வரைக்கும் காக்க வச்சுட்டான்கள்!" என்றான்.

"என்ன?" என்றாள், அவள் ஊறுகாய் எடுக்கப் போன பக்கத்து உள்ளிலிருந்து.

"ஆபீசிலே இன்னிக்கி யாரோ வரல்லையாம். அதுக்காக எட்டு மணி பண்ணிப்பிட்டான்."

"அவன்தானே கூலி கொடுக்கிறான்? அவன் சொன்னபடி ஆடித்தானே ஆகணும்?"

இந்தப் பதிலைக் கேட்டால் அவனுக்கு எப்படி இருக்கும்! அப்படியே அமெரிக்காவுக்குப் போய் அந்த ஹக்ஸ்லிப் பயலை மென்னியைப் பிடித்து உந்திக்கொண்டு வந்து அங்கே நிறுத்தவேண்டும் என்று தோன்றிற்று.

இன்னும் இரண்டு நாள் கழிந்ததும் சேஷண்ணு இன்னொரு தடவை ஹக்ஸ்லி மந்திரத்தைப் பிரயோகம் பண்ணினான். அன்று எட்டரை மணிக்கு வந்தான்.

அதுவரையில் அவன் காலத்தைக் கழிக்கப் பட்ட சிரமம் கொஞ்ச நஞ்சமல்ல. ஆபீஸ் விட்டதும் கடை வீதியிலிருந்து 'போர்ட்' ஸ்டேஷனுக்குப் போனான். அங்கே பிளாட்பாரத்தில் நின்றுகொண்டு மூன்று வண்டிகளிலிருந்து மொத்தமாக நூற்றுத் தொண்ணூற்றிரண்டு பேர் இறங்கினதை எண்ணினான். புக்ஸ்டாலில் தொங்கின பத்திரிகைகளின் தலையங்கங்களை எல்லாம் திரும்பத் திரும்ப இருபத்தொரு தடவைகள் படித்தான். வெளிப்புறத்தில் இருந்த வெற்றிலை பாக்குக் கடையில் மொத்தம் ஒன்றே முக்கால் அணுவுக்கு வியாபாரம் ஆனதைக் குறித்துக்கொண்டான். அவன் நின்றிருந்த காலத்துக்

குள் வியாபாரம் ஒன்றே முக்கால் அணு ஆனல் ஒரு நாளைக்கு எவ்வளவு அணு, இப்படியே ஒரு மாதத்திற்கு எவ்வளவு ஆகும், செலவு எவ்வளவு ஆகும்? போக, நிகர லாபமோ நஷ்டமோ எத்தனை ஆகும்? என்று மனக் கணக்காகவே போட்டுப் பார்த்து ஒரு முடிவுக்கு வந் தான்.

இத்தனை வேலை ஆகியும் மணி ஏழரைதான் ஆகி யிருந்தது. அவனுக்குக் கோபம் கோபமாக வந்தது. அங்கிருந்து கிளம்பி நேராக டவுன் ஸ்டேஷனுக்குப் புறப்பட்டான். வழியில் மலைவாசற்படிப் பிள்ளையாரைத் தரிசிக்காமல் போகலாமா? உள்ளே நுழைந்து ஒன்பது பிரதக்ஷிணம், மூன்று தோப்புக்கரணம் ஆகியவற்றை முடித்துக்கொண்டு புறப்பட்டான். டவுன் ஸ்டேஷனி லும் போய், காலத்தை வீணுக்காமல் ஏதேதோ வேலை களைச் செய்துவிட்டு அவன் ஆண்டார் தெரு நாற்பத் தைந்தாம் நம்பராகிய தனது கிருகத்தை நெருங்கிய போது அந்தப் பாழாய்ப்போகிற மணி எட்டே கால் தான் ஆகியிருந்தது! இன்னும் கால் மணி பாக்கி.

அதை எப்படிக் கழிக்கிறது? ஒரு யோசனை தோன் றிற்று. பக்கத்து வீட்டில் திண்ணையிலேயே காத்திருந் தால்-? அப்படியே கொஞ்சம் இருண்டிருந்த மூலைப் பக்கம் வக்கீல் ராஜகோபாலையர் வீட்டுத் திண்ணையில் ஏறி உட்கார்ந்துகொண்டான்.

சரியாக ராஜகோபாலையர் வீட்டுக் கடிகாரம் எட் டரை அடித்தது. சேஷண்ணு தன் வீட்டு வாசற்படி ஏறினன்.

ஆனல் என்ன ஏமாற்றம்! வீடு வெளியில் பூட்டப் பட்டிருந்தது.

அப்படியே ஒரு விநாடி ஸ்தம்பித்து நின்முன், சேஷண்ணு. அவன் என்ன பண்ணுவது என்று யோசனை பண்ணலாமா என்று நினைப்பதற்குள், 'டக்டக்' என்று

கால்மெட்டி ஓசைப்படக் கல்பகம் வந்து அவசரம் அவசரமாகக் கதவைத் திறந்தாள்.

அவனுக்கு வந்த ஆத்திரத்தில் அவளை ஓங்கி ஓர் அறை விடவேண்டுமென்று நினைத்தான்.

அதற்குள் அவள் முந்திக்கொண்டு விட்டாள்: "நீங்க வந்து ரொம்ப நாழியாக் காத்திண்டிருக்கேளா!" என்று கேட்டாள். இதையும் அவன் எதிர்பார்க்கவில்லை.

"ஆமாம்-இல்லை-பத்து நிமிஷம் இருக்கும்" என்று தடுமாறிவிட்டு, "நீ எங்கே போயிருந்தாய்?" என்று கேட்டான் சாதாரணமாக.

"நான் முதலியார் ஸ்டோருக்குப் போயிருந்தேன். எங்க அத்தையாத்திலே அவ பொண் வந்திருக்கான்னு சொல்லி யனுப்பினா. பிரசவத்துக்கு வந்திருக்காளாம். இதான் மாசம்" என்று சொல்லிக்கொண்டே உள் வேலையைக் கவனிப்பதில் ஈடுபட்டாள்.

சேஷண்ணாவும், "யாரு? அலமேலுவா? யார் அழைச்சிண்டு வந்திருக்கா?...குப்பு வந்திருக்கானா? பார்த்து ரொம்ப நாளாச்சு...." என்று பேச்சிலே லயிக்கத் தொடங்கிவிட்டான். டாக்டர் ஹக்ஸ்லி, அமெரிக்கா எல்லாம் அவனுக்கு மறந்தே போய்விட்டன.

## 4

மறுபடியும் அவன் ஹக்ஸ்லியையும் அவருடைய அநுபவபூர்வமான அமெரிக்க யோசனைகளையும் நினைக்கும்போது பத்து நாட்கள் ஆகிவிட்டன.

இதற்கிடையில் இரண்டொரு நாள் அவன் பழைய முறையைக் கைக்கொண்டு பிரயோகம் செய்தான். ஆனால் அந்த இரண்டு மூன்று நாளிலும் பழையபடியே தோல்விதான். இவன் வருகிற சமயத்தில் அவளும்

வீட்டில் இருப்பதில்லை. அவனுக்கு அது வேதனையாய் இருந்தது. அதனால் பழையபடி ஆறு மணிக்கே ஆபீஸை விட்டதும் நேராக உழவு மாடு மாதிரி வீட்டுக்கு வந்து விடுவான்.

ஆனால் ஒரு வாரம் கழித்து நடந்த ஒரு சம்பவம் அவனுக்குப் பிரபல அமெரிக்க டாக்டரை ஞாபகப் படுத்தியது.

ஒன்றும் பிரமாதம் இல்லை. அவன் அன்று காலையில் ஆபீஸுக்குப் போகும்போது குளித்துவிட்டு ஈரத் துண்டை வழக்கம்போல் குழாயடியில் போடாமல் கதவின்மேல் போட்டுவிட்டுப் போய்விட்டான். அதனால் என்ன? அவள் அதைக் கொஞ்சம் தேடிப் பார்த்து எடுத்தால் என்ன குடிமுழுகிப் போய்விட்டது? வந்ததும் வராததுமாய், "இந்தத் துணியைத்தான் வெண்ணைத்தி மாதிரி தோச்சுப் போட வேண்டி இருக்கிறதென்றால் ஊர் முழுக்கப் போய்த் தேடவும் வேண்டியிருக்கு!" என்றாள்.

அவன், "என்ன சமாசாரம்?" என்றான் சாதாரணமாக.

"என்னவா? இன்னிக்கு உங்க துண்டைக் குளிச்சு விட்டு எங்கே போட்டிருந்தயள்?" என்றாள் கோபமாக.

"ஏன்? குழாயடியில்தான்."

"நிஜமாவா?"

இல்லாவிட்டால் வேறு எங்கே இருந்தது?"

"இந்தக் கதவுமேலே கிடந்து அழுகித்து!"

"அதனால் என்ன? நீ அதைத் தேடி எடுத்ததனாலே உன் கால் எத்தனை அங்குலம் தேஞ்சு போச்சு" என்று விட்டான்; அவ்வளவுதான். பழையபடி வார்த்தைக்கு

மேல் வார்த்தை, கேள்வி, பதில் வழக்கமான முடிவு; சேஷண்ணுவின் உண்ணுவிரதம்.

அதற்கு மறு நாள் ஞாயிற்றுக்கிழமை; ஆபீஸ் இல்லை. சேஷண்ணு வெகு தீவிரமாக யோசனை செய்து டாக்டர் ஹக்ஸ்லி அவர்களின் கடைசிப் பாணத்தைப் பிரயோகித்து விடுவதென்று தீர்மானித்துவிட்டான்.

நீ வேறொரு ஸ்திரீயைக் காதலிப்பதாக அவள் சந்தேகிக்கும்படி செய்.

காமாட்சி என்ற ஒரு பெண் தனக்கு எழுதியது போல் ஒரு கடிதம் இரண்டு நிமிஷத்தில் தயார் பண்ணினன். (டாக்டர் ஹக்ஸ்லிதான் இருபத்தேழு மாதிரிக் கடிதங்கள் கொடுத்திருக்கிறரே!) அந்தக் கடிதத்தை அவளுடைய பார்வையில் படும்படி வைக்கவேண்டும். பிறகு, தான் அங்கே இருக்கக்கூடாது.

கடிதத்தை எங்கே வைக்கிறது? இது பெரிய பிரச்னையாய் இருந்தது. பத்து நிமிஷம் அதைப்பற்றி யோசனை பண்ணினன்.

அவளுடைய டிரங்குப் பெட்டியின்மேல் வைத்தால்?—அவள் பெட்டியைத் திறக்காவிட்டால்—? சமையலறைக்குள் சர்க்கரை டின்னுக்கு அடியில் வைக்கலாம் என்று நினைத்தான். ஆனல் அப்படியே கும்மட்டி அடுப்புப் பற்றவைக்க எளிதாகக் கையில் அகப்பட்டு விடுமே?

என்ன என்னவோ யோசனை செய்துவிட்டுக் கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தான். தினம் மூன்று மணிக்கு அவள் சோப்பு டப்பாவை எடுப்பாள். ஆகையினல் அதற்கு அடியில் மடித்து வைத்துவிட்டால்—? அது தான் சரி என்று பட்டது அவனுக்கு.

உடனே மெதுவாகக் கையில் மடித்த 'காமாட்சியின் கடிதத்'துடன் கள்வன் மாதிரிக் கூடத்து அலமாரி

யில் இருந்த சோப்பு டப்பாவைத் தூக்கினான். அப்போது கல்பகம் உள்ளே சாப்பிட்டுக்கொண் டிருந்தாள். இவன் அலமாரியை நெருங்குவதும் அவள் அங்கிருந்தபடியே, "என்ன வேணும்?" என்று குரல் கொடுப்பதும் சரியாக இருந்தன. அவனுக்குக் கொஞ்சம் உடம்பு நடுங்கிற்று.

"ஒன்றுமில்லை—இந்தச் சாவி, டிரங்கு சாவி, இருக்கோன்னு பார்த்தேன்" என்றான் சமாளித்துக் கொண்டு.

"சாவி எங்கிட்டன்னா இருக்கு? எதுக்கு இப்போ? இதோ வறேன், இருங்கோ" என்றாள் அவள்.

அதற்குள் அவனும் காரியத்தை வெற்றிகரமாக முடித்துக்கொண்டு திரும்பிவிட்டான். உடனே அவள் வருவதற்குள்ளாகவே வெளியேறிவிட்டான்.

## 5

சேஷண்ணா ஆவலுடன் வீடு திரும்பியபொழுது மணி கிட்டத்தட்ட ஐந்து இருக்கும். நெஞ்சும் மார்பும் 'திக் திக்'கென்று அடித்துக்கொள்ள நேராக அலமாரியண்டை போனான். ஆனால் அங்கே சோப்பு டப்பாவைக் காணவில்லை. அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. அப்படியே குழாயண்டை போய்ப் பார்த்தான். அங்கே சுவரோரமாக இருந்தது சோப்புப் பெட்டி. அதைத் தூக்கினான். அப்படியே மடித்தபடியே அடியோடு அடியாய் ஒட்டிக் கிடந்தது அவனுடைய அபூர்வக் கடிதம்!

அவனுக்கு ஆத்திரம் பொங்கிக்கொண்டு வந்தது. அப்போதுதான் கல்பகத்தின் ஞாபகமும் வந்தது. அவளை அங்கே காணவில்லை. சமையலறையும் சாத்திக் கிடந்தது.

அப்போது வேலைக்காரி பின்கட்டிலிருந்து கையில் துடைப்பத்துடன் வந்தாள். அவனைப் பார்த்ததும்

அவள் சொன்னாள்: "அம்மா அத்தை வீட்டுக்குப் போயிருக்குதுங்க. ஆறு மணிக்குள்ளே வந்துடறேன்னு துங்க. உங்களை இருக்கச் சொல்லிச்சு.." என்று.

சேஷண்ணுவுக்குத் துக்கம் நெஞ்சை அடைத்துக் கொண்டு வந்தது. மளமளவென்று உள்ளே போய்ப் படுக்கையை எடுத்து விரித்துப் போட்டான். அப்போது, அவன் படுக்கையை விரிக்கக் குனியும்போது சுவரோரமாகக் கிடந்த வஸ்து அவனுடைய கவனத்தைக் கவர்ந்தது.

அதைப் போய்த் தூக்கினான். அதற்கு அடியில் ஒரு கடிதம் இருந்தது. அதைப் பிரித்து ஆவலுடன் படித்தான்.

"என் பிரியமான கல்பகத்துக்கு, உன்னைக் காணாமல் ஏங்கி வாடுகிறேன். நீ என்னிடம் எப்போது வருவாய்? உனக்காகவே நான் காத்துக்கொண் டிருக்கிறேன்."

அதில் கையெழுத்து இல்லை. ஆனால் எழுத்தைப் பார்த்தால் கோணல் மாணலாக இருந்தது.

அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. திகைத்து நின்றான். அப்போது அவனுடைய பார்வை கையிலிருந்த புஸ்தகத்தின்மேல் விழுந்தது. அதில் எழுதியிருந்த தலைப்பு அவனைத் திடுக்கிடச் செய்தது.

கணவனை வசியஞ்செய்ய நூற்றெட்டு யோசனைகள்.

அதற்கு அடியில் டாக்டர் ஹக்ஸ்லி, அமெரிக்க மனோதத்துவ நிபுணர் என்று இருந்தது!—அட பாவி!

சேஷண்ணுவுக்கு அழுவதா சிரிப்பதா என்று தெரியவில்லை. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். அந்த அமெரிக்க டாக்டர் ஹக்ஸ்லி என்கிற மனிதர் மட்டும் அவன் எதிரில் அப்போது வந்திருந்தாரானால் அவருடைய தலையின் கதி!

# ஒரு தேர்தல் கதை

## 1

"அப்பா!"

"ஏண்டா, கண்ணு!"

"நீ எங்கேப்பா போறே?"

"நான் கடைக்குப் போய் உனக்குப் பூ, பிஸ்கோத்து எல்லாம் வாங்கிண்டு வரப்போறேண்டா கண்ணு!"

இல்லே—பொய்!—நீ நாளைக்கு எங்கேப்பா போனே? நான் காணம் காணமுன்னு தேடினேனே?"

"ஊருக்குப் போனேண்டா கண்ணு! உனக்குப் பொம்மை வாங்கிண்டு வரப் போனேன்."

"இல்லேப்பா!—எனக்குத் தெரியும்!--நான் சொல்லட்டுமா?"

"எங்கே சொல்லு!"

"நீ வந்து காந்தி மீட்டிங்குக்குப் போனே—"

"உனக்கு யாருடா கண்ணு சொன்னு?"

"அம்மாதாம்ப்பா சொன்னு. அப்பா, அங்கே போலீஸ்காராள்ளாம், வந்து அடிப்பாளாமே? ஏம்பா அங்கே போறே?"

"கோபாலனுக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. சின்னக் குழந்தை, நான்கு வயசு இருக்கும். அதற்குப் புரியும்படியாக என்ன பதில் சொல்வது?

"குஞ்சுக்கண்ணு, நீ உள்ளே போம்மா. நான் கடைக்குப் போயிட்டு உனக்குப் பொம்மை, பிஸ் கோத்து எல்லாம் வாங்கிண்டு வறேன். நீ போப்பா."

"நான் மாட்டேம்ப்பா. நானும் உன்கூட வருவேன். அங்கே வந்து அந்தப் போலீஸ்காராள்ளாம் நான் அடிச்சுப்புடறேம்ப்பா" என்று தன்னுடைய மிருது வான கையை ஓங்கி வீசிக் காட்டியது குழந்தை.

"நீ அடிக்கலாண்டா, கண்ணு" என்று குழந்தை யைத் தூக்கி மார்போடு அணைத்து முத்தமிட்டுக் கொண்டான் கோபாலன். பிறகு கீழே இறக்கி விட்டு, "நீ உள்ளே போம்மா. அம்மா கூப்பிடறா பாரு. நான் இங்கேயே இருக்கேன். நீ போ" என்றான்.

"போப்பா, ஏய்க்கப் பாக்கறே?" என்று தன் னுடைய சின்ன விழியை உருட்டிப் புன்சிரிப்புடன் அவனைப் பார்த்தது. உடனே, "நானும் வறேன் அப்பா!" என்று வலது காலைப் பூமியில் உதைத்துக் கொண்டே குதித்தது.

கோபாலன் தன் வேலை அன்று பலிக்காதென்று கண்டுகொண்டு, தான் வெளியில் போவதற்காக அணிந்துகொண் டிருந்த சட்டையைக் கழற்றி வைத்தான்.

"குஞ்சுத்தங்கம், ஏண்டாப்பா அழறே?" என்று கேட்டுக்கொண்டே ருக்மிணி உள்ளேயிருந்து கூடத் திற்கு வந்தாள். குழந்தையைத் தூக்கி இடுப்பில் வைத்துக்கொண்டு, தன்னுடைய புடைவைத் தலைப் பினால் அதன் முகத்தைத் துடைத்துக்கொண்டே, "ஏம்ப்பா, நீ அழுதே?" என்று கொஞ்சுதலாகக் கேட்டாள்.

குழந்தை ஒன்றும் சொல்லவில்லை. உர்ரென்று முகத்தை வைத்துக்கொண்டு அப்பொழுதுதான்

சட்டையைக் கழற்றிவிட்டு ஊஞ்சலில் உட்கார்ந்து கொண்ட கோபாலனைப் பார்த்தது.

குழந்தையின் கோபத்தைக் கண்டு சற்றுப் பரிகாச மான புன்சிரிப்புடன் கோபாலனைப் பார்த்தாள் ருக்மிணி. உடனே குழந்தை திரும்புவதற்குள் முக பாவத்தை மாற்றிக்கொண்டு பாசாங்கு அக்கறையுடன், "ஏண்டா தங்கம், உன்னை அப்பா அடிச்சாரா? —ஏன் அழுதது என் கண்ணு!" என்றாள்.

குழந்தை தன்னுடைய 'பிகு'வை விடாமலே, "அப்பா பின்னோடே நானும் போகணும்!" என்று ராகம் போட்டது.

"நீ என்னடா பண்ணுவே அங்கே போய், கண்ணு? அப்பா கடைக்குப் போய் ஒனக்கு 'வில்க் கௌன்', பப்புட்டு, பிஸ்கோத்து. எல்லாம் வாங்கிண்டு வரப் போறா—"

"என்னம்மா பொய் சொல்லறே! அன்னிக்கி... நாளைக்கி...சொன்னியே...அப்பா காந்தி மீட்டிங்குக்குப் போறான்னு..."

சடக்கென்று ருக்மிணியின் முகம் மாறியது. குழந்தை சொன்னவுடனேயே தன்னை அறியாமலேயே கோபாலனுடைய முகத்தை நிமிர்ந்து பார்த்தாள். அதே சமயத்தில் கோபாலனும் அவளுடைய முகத் தைப் பார்த்தான். வாயை விட்டு ஒரு வார்த்தை பேசாமலே இருவருக்கும் ஒரு விநாடி சம்பாஷணை நடந்தது.

"வாம்மா, உள்ளே போய் இக்கம் விட்டுண்டு குளிப் போம்" என்று குழந்தையுடன் திரும்பினாள். "நான் வல்லேம்மா—மா—" என்று காலையும் கையையும் 'விண் விண்' என்று உதைத்துக்கொண்டே போயிற்று குழந்தை.

கோபாலன் சடக்கென்று நிமிர்ந்து, ருக்மிணி சமையலறைப்பக்கம் மறைவதைப் பார்த்தான். உடனே அவளை அழைக்க வேண்டுமென்று நினைத்தான். ஆனால் சட்டென்று எண்ணத்தை மாற்றிக்கொண்டு பேசாமல் உட்கார்ந்துவிட்டான்.

அவனுடைய மனசு என்ன என்னவோ யோசனையில் இறங்கியது. அன்று அவன் மிகவும் முக்கியமாக வெளியில் போகவேண்டுமென்று எண்ணிக் கிளம்பிய போது குழந்தை வந்து தடுத்துவிட்டது. ஆனால் அவன் செய்ய வேண்டுமென்று நினைத்த அவனுடைய கடமையை நிறுத்த முடியுமா? அதுவும் செய்ய வேண்டிய காலத்தில் எதையும் செய்யத் தவறிவிட்டால் என்ன பிரயோசனம்?

ருக்மிணி அவனுடைய கடமைக்குக் குறுக்கே நிற்பதாக நினைத்தான்.

ருக்மிணி அப்படியும் விஷயம் தெரியாத பெண் அல்ல. கல்யாணம் ஆனவுடனேயே, அவனுடைய போதனைகளை எல்லாம் அவள் பொறுமையுடன் கேட்டுக்கொண்டிருப்பாள். பிறகு அவனுக்குத் தேசிய வேலைகளில் ஊக்கம் கொடுத்துக்கொண்டுகூட வந்தாள்.

முதல் முதலில் அவன் சிறை செல்லுவதற்கு முன்னால், "உங்களுடைய உடம்பை மட்டும் நீங்கள் ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொண்டால் போதும். வேறு ஒன்றுக்கும் நான் கவலைப்படவில்லை" என்றுதான் சொன்னாள். தைரியமாகத்தான் இருந்தாள். அவள் கண்களில் பொட்டுக் கண்ணீர் கூட வரவில்லை.

அப்படி எல்லாம் இருந்தவள் இப்போது அடிக்கடி புகார் பண்ணுவது கோபாலனுக்கு ஆச்சரியமாக இருந்தது. அதுவும் இப்போது அடிதடி, சிறைவாசம்

ஒன்றும் இல்லை. வெறும் பிரசார வேலைதான். இதற்கு ஏன் இவ்வளவு தூரம் தடையாக நிற்க வேண்டும் அவள்?

குடும்ப வாழ்க்கைக்கும் ஒருவனுடைய லக்ஷ்யங்களுக்கும் விரோதம் உண்டா?

என்ன என்னவோ தத்துவ வேதாந்தங்களில் இறங்கி விட்டது அவன் மனசு. குறுக்கும் நெடுக்குமான யோசனைகள் தோன்றிக்கொண்டிருந்தனவே யன்றி ஒரு முடிவும் ஏற்படவில்லை.

அரைமணி நேரம் இப்படியே மோவாய்க்கட்டையைத் தாங்கிய கையுடன் உட்கார்ந்திருந்தான் கோபாலன்; பிறகு எழுந்திருந்து சமையலறைப் பக்கம் ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தான்.

முற்றத்தின் ஓரத்தில் உட்கார்ந்துகொண்டு குழந்தை காலைத் தொங்கப்போட்டு ஆட்டிக்கொண்டே, 'மாட்டேன் மாட்டேன்' என்ற ராகத்துடன் தலையை ஆட்டிக்கொண்டிருந்தது. ருக்மிணி, "இதோ, இதை மாத்திரம். சமத்தோன்னோ! இந்தப் பாரு, காக்கா கதை சொல்லட்டுமா?" என்று அதன் முகத்தைத் திருப்பி வற்புறுத்திச் சாதம் ஊட்டிக்கொண்டிருந்தாள்.

குழந்தையாவது ருக்மிணியாவது இந்தப் பக்கம் திரும்புவதற்குள் வெளியே போய்விட வேண்டுமென்று கோபாலன் நகர்ந்து, சட்டையை எடுத்துப் போட்டுக் கொண்டு வெளியே போய்விட்டான்.

## 2

மாலை ஐந்து மணி இருக்கும். ருக்மிணிக்குப் பொழுது போகவில்லை. அன்று என்னவோ வேலை

இல்லைபோல் இருந்தது. மிகவும் சோம்பலாக என்ன செய்வதென்று தெரியாமல் உட்கார்ந்திருந்தாள். அப்பொழுது ஞாபகம் வந்தது, தோட்டத்திலிருந்து காலையில் மல்லிகைப் பூப் பறித்து வைத்தது. உடனே அதை எடுத்து வந்து சாவகாசமாகத் தொடுக்க ஆரம்பித்தாள். அப்பொழுது அவளுடைய மனம் கோபாலனைப்பற்றி நினைக்க ஆரம்பித்தது. செய்வதற்கு ஒன்றும் வேலை இல்லாவிட்டால் மனத்திற்குச் சுறுசுறுப்பு ஏற்பட்டுவிடுகிறது.

கோபாலன் வீட்டுக்கு வந்து அன்று நான்கு நாட்கள் ஆகின்றன. அவன் இப்படி அடிக்கடி வெளியில் போய்விடுவது அவளுக்குப் பிடிக்கவே இல்லை. சில சமயம் சேர்ந்தாற் போல ஒரு வாரத்துக்குக்கூட வீட்டுக்கு வரமாட்டான். 'பிரசாரமாம், என்ன பிரசாரம்! காங்கிரஸுக்கு உழைக்கிறாராம்! எத்தனை நாள்தான் உழைக்கிறது!' என்று நினைத்தாள். முன்பு அப்படித்தான் அவளை விட்டுவிட்டு ஒரு வருஷம் ஜெயிலுக்குப் போய்விட்டான். அப்பொழுது அவள் கர்ப்பமாக இருந்தாள். அப்பொழுது அவள் ஒன்றும் சொல்லவில்லை. 'அவர் போகவேண்டுமென்று தீர்மானமாக நிற்கும்போது அவரைத் தடுத்து என்ன பிரயோசனம்?' என்று நினைத்துப் பேசாமல் இருந்துவிட்டாள். ஆனால் அவள் மனசு மட்டும் உள்ளூறக் கொதித்துக்கொண்டிருந்தது.

அதுதான் ஆச்சு. ஜெயிலிலிருந்து வெளிவந்துவிட்டான். அவன் வெளிவரும் அன்று அவளுடைய உற்சாகத்தையும் ஆனந்தத்தையும் சொல்ல முடியாது. அதோடு கஷ்டமெல்லாம் தீர்ந்துவிட்டது என்று எண்ணினாள். ஆனால் மறுபடியும் இப்போது, 'பழைய குருடி கதவைத் திறடி' என்று அவன் வீட்டை விட்டு நாள் கணக்காய் வெளியில் போக ஆரம்பிக்கவே அவளால் சகிக்க முடியவில்லை. ஜாடை மாடையாய் அடிக்

கடி சொல்லியும் பார்த்தாள். ஒன்றும் பலன இல்லை. ஆனால் இந்தச் சமயத்தில் குழந்தை குஞ்சு மட்டும் இல்லாதிருந்தால் அவளுக்கு நிச்சயமாகப் பைத்தியம் பிடித்துவிடும். அவளுடைய உயிரெல்லாம் குழந்தை தான். அதனுடைய மழலையைக் கேட்டுக் கேட்டு ஆனந்த மடைந்துகொண் டிருப்பாள். அப்போதுகூட ஒவ்வொரு சமயத்தில் இதைத் தன்னுடன் இருந்து அநுபவிக்க 'அவரும்' இல்லையே என்று ஏங்கிப் பெரு மூச்சு விடுவாள்.

குழந்தை ஞாபகம் வந்ததும் கூடத்தில் விளையாடிக் கொண்டிருந்த குழந்தை எங்கே என்று எட்டிப் பார்த் தாள். அதைக் காணவில்லை.

"குஞ்சுத் தங்கம்!" என்று கூப்பிட்டாள்.

"ஏம்மா!" என்றது குழந்தை. முற்றத்தில் அண்டாவிலிருந்த ஜலத்தில் அளைந்து விளையாடிக் கொண்டிருந்தது.

"இங்கே வாடா தங்கம்!" என்றாள்.

குழந்தை கை காலெல்லாம் ஈரம் சொட்ட ஓடி வந்தது.

"என்னடா தங்கம், இப்படி ஜலத்தில் அளையறே! உடம்புக்கு வந்துட்டா என்ன பண்ணுவேன் நான்?" என்று சொல்லிக்கொண்டே, 'கல கல'வென்று சிரித் துக்கொண்டு தன்மேல் வந்து விழுந்த குழந்தையைப் புடைவைத் தலைப்பினால் துடைத்தாள்.

அப்பொழுது குழந்தையின் தேகத்தில் பட்ட அவளுடைய கை, உடம்பு கதகதவென்று இருப்பதாக உணர்ந்தது. அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. உடனே நெற்றியில் கையை வைத்துப் பார்த்தாள். நெற்றி முழுவதும் நன்றாகச் சுட்டது.

"என்னடா தங்கம் இப்படிச் சுடுகிறது? அப்பவே சொன்னேனே, ஜலத்துகிட்டப் போகாதே என்று" என்றாள் கவலையுடன்.

உடனே குழந்தை போட்டிருந்த கவுனைக் கழற்றி விட்டு ஓர் உலர்ந்த சட்டையைப் போட்டு அதைப் படுக்கையில் படுக்க வைத்தாள். அதன் தலைமாட்டில் உட்கார்ந்துகொண்டு நிமிஷத்துக்கு ஒரு தரம் அதன் தேகத்தைத் தொட்டுப் பார்த்துக்கொண்டே இருந்தாள். பார்க்கப் பார்க்க அவளுடைய கவலை அதிகரித்தது. உடம்பு நெருப்பாய்ச் சுட ஆரம்பித்துவிட்டது. குழந்தையின் முகம் பளபளவென்று மின்னிற்று. அதன் கண்கள் சிவப்பேறி ஜொலித்தன. அதன் முகத்தையே உற்றுப் பார்த்துக்கொண் டிருந்தாள். கொஞ்ச நேரத் துக்கு ஒரு தரம் குழந்தை தாபம் தாங்காமல் அரற்றும் போது, "உனக்கு ஒண்ணுமில்லேடா தங்கம்" என்று அதைச் சமாதானப்படுத்தும் பாவனையில் தன்னையும் சமாதானம் செய்துகொண்டாள்.

அப்பொழுது வேலைக்காரி வந்தாள். அவளைப் பார்த்து, "போய்க் கீழவீட்டு மீனாப்பாட்டியை அழைச் சிண்டு வா" என்றாள். மீனாப்பாட்டி அந்த ஊருக்கே சமஸ்தான வைத்தியர் மாதிரி. யார் வீட்டில் குழந்தை களுக்குத் தலை வலிக்கிறதென்றாலும் மீனாப்பாட்டியைத் தான் கூப்பிடுவார்கள். அவளுக்குக் குழந்தையே கிடையாதென்றாலும் குழந்தை வைத்தியத்தில் அபார அநுபவம் உண்டு. அவள் கையால் ஒரு பற்றுப்போட் டால் போதும், எந்த நோயும் பறந்துவிடும் என்பது ஊர்ப் பெண்களின் பொதுவான திட நம்பிக்கை.

மீனாப்பாட்டி வந்ததும் குழந்தையைப் பார்த்தாள். "இதென்னடி பிரமாதம்! இதொண்ணும் இல்லை, சூடு; அவ்வளவுதான். கொஞ்சம் சுக்கைச் சந்தனக் கல்லிலே வச்சு நசுக்கி ஒரு பத்துப் போடு. ரெண்டு வெத்திலையும்

ஓமமும் வச்சு அரைச்சு ஒரு சொரசம் கொடு. காலம்பரப் பளிச்சுனு விட்டுப் போயிடும் ஜுரம்'' என்றாள்.

அந்தச் சாமான்களை எடுத்துவர உள்ளே எழுந்து போனாள் ருக்மிணி. ''உங்கள் கையாலேயே போட்டுடுங்கள் பாட்டி'' என்று சுக்கைக் கொண்டுவந்து பக்கத்தில் வைத்தாள்.

பாட்டி அதை எடுத்துச் சந்தனக் கல்லில் வைத்து நசுக்கிக்கொண்டே, ''ஏண்டி, உன் ஆம்படையான் எங்கடி காணவே காணம்?'' என்று கேட்டாள்.

அவள் யதார்த்தமாகவே கேட்ட போதிலும் ருக்மிணிக்குப் புண்ணைக் கிளறிவிட்டாற்போல் இருந்தது, அந்தக் கேள்வி. அவள் என்ன பதில் சொல்வாள்!

ருக்மிணியின் மனத்தில் அடைத்துக் கிடந்த அணையைத் திறந்துவிட்டதுபோல் யோசனை வெள்ளம் பெருக்கெடுத்தது. பித்துப் பிடித்தவள்போல் உட்கார்ந்திருந்தாள்.

பாட்டி பற்றை அரைத்துக் கண்ணை மூடிக்கொண்டு கிடக்கும் குழந்தையின் நெற்றியில் தடவிவிட்டு, ''நான் போயிட்டு வறேண்டி'' என்று சொல்லிவிட்டுப் போனதையும் அவள் கவனிக்கவில்லை.

''அம்மா!'' என்ற குழந்தையின் ஈனக் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டுக் குழந்தையின் பக்கம் சென்றாள்.

''என்னடாப்பா வேணும் உனக்கு?'' என்றாள் ஆர்வத்துடன்.

''அப்பா வந்துட்டாளாம்மா?'' என்றது குழந்தை.

ருக்மிணியின் கண்களில் நீர் பெருகியது. புடைவைத் தலைப்பினால் கண்ணைத் துடைத்துக்கொண்டாள். உள்

ளத்திலே பொங்கி வரும் வெள்ளத்தைத் துடைத்து விட முடியுமா?

ஆயிரம் மடங்கு அதிகரித்த அன்புடனும் ஆர்வத்துடனும், "இன்னிக்கி வந்துடுவாடா தங்கம். நீ பேசாதே தூங்குடாப்பா" என்று குழந்தையின் தழலாய்க் கொதிக்கும் கன்னத்தில் ஒரு முத்தமிட்டாள். குழந்தையின் கன்னத்தைவிடப் பன்மடங்கு அதிகமாய்க் கொதித்தது அவள் உள்ளம்.

## 3

அன்றிரவு சுமார் ஒன்பது மணி இருக்கும், கோபாலன் வீட்டுக்கு வரும்போது. அன்று அவன் வர வேண்டுமென்று ருக்மிணி விரும்பினாளாயினும் அவனை எதிர்பார்க்கவில்லை. ஆகவே சாதத்தில் நீர் போட்டு விட்டு, சில்லறை வேலைகளை முடித்துக்கொண்டு படுத்துக் கொள்ளத் தயாராயிருந்தாள்.

கோபாலன் கதவை இடித்ததும் அவள் போய்க் கதவைத் திறந்துவிட்டு, அவனைக் கண்டதும் மௌனமாக நின்றாள்.

கோபாலன், "சாதம் இருக்கிறதா?" என்று அவசரம் அவசரமாகக் கேட்டுக்கொண்டு அவளைத் தாண்டி உள்ளே நுழைந்தான். கதவைத் தாழிட்டுவிட்டு அவன் கூடவே ருக்மிணி ஒன்றும் பேசாமல் வந்தாள். கூடத்தில் நுழைந்தவன் குழந்தையின் பக்கத்தில் வந்ததும் நின்று விட்டான். நெற்றியில் பற்றுடன் போர்வையைப் போர்த்துக்கொண்டு வதங்கிக் கிடக்கும் குழந்தையையும், பக்கத்தில் வைத்திருக்கும் கஞ்சிப் பாத்திரம், வெந்நீர் 'பிளாஸ்க்' முதலியவற்றையும் கண்டதும் கோபாலன், குழந்தைக்கு உடம்பு சரியாயில்லை என்பதை உணர்ந்துகொண்டான்.

"ருக்மிணி, குழந்தைக்கென்ன? இப்படிக் கிடக்கிறதே?" என்று ஆவலுடன் கேட்டுக்கொண்டே, குனிந்து குழந்தையின் நெற்றியில் கையை வைத்துப் பார்த்தான்.

ருக்மிணி மெதுவாக, உணர்வற்ற குரலில், "என்னவோ, உடம்பு கொதிக்கிறது. சாயந்தரம் முதல் கண்ணை முழிக்காமல் கிடக்கு" என்றாள்.

சட்டென்று அவளை நிமிர்ந்து பார்த்தான் கோபாலன். பிரிந்து கலைந்துபோய்ப் பறக்கும் அவளுடைய தலையும், சுரந்து சிவந்த அவளுடைய முகமும் அவனுக்கு எவ்வளவோ சொல்லின. அப்படியே யோசனையுடன் உட்கார்ந்துவிட்டான்.

"சாதம் ஜலம் போட்டுட்டேன். நீங்கள் வருவீயள்னு தெரியாது. அடுப்பை மூட்டிச் சாதம் வடிச்சுடட்டுமா? குழம்பு ரஸம் எல்லாம் அப்படியே இருக்கு" என்றாள ருக்மிணி.

கோபாலன், "வாண்டாம் வாண்டாம். ஜலம் போட்டா என்ன, ஆகாதா? இங்கே பக்கத்திலே வெள்ளத்தூருக்கு வந்தேன். அப்படியே ஆத்துக்கு வந்துட்டுப் பார்த்துவிட்டு, சாப்பிட்டுட்டுப் போயிடலாம்னு வந்தேன்..வண்டிகூட ரோட்டிலேயே நிற்கிறது.." என்றான் இழுச்சாற்போல்.

"அப்போ, திருப்பியும் இப்பவே போகணுமா?"

"ஆமாம்; இன்னிக்கிப் போகாட்டா இவ்வளவு நாள் நான் செஞ்ச வேலை அவ்வளவும் வியர்த்தம்."

"இப்படிக் குழந்தை கண்ணை முழிக்காமெ கிடக்கும்போது என்னமாப் போறது?"

கோபாலன் மௌனமாக இருந்தான். இரண்டு நிமிஷமாயின. பிறகு தனக்குள்ளாகவே பேசிக்கொள்பவன் போல மெதுவாகச் சொன்னான். "இன்னிக்கித்

தான் என்னுடைய வேலையெல்லாம். இன்னிக்கி நான் போகாவிட்டால் எதிரி கோட்டையைப் பிடித்து விடுவான்....''

வெள்ளத்தூர் ஒரு பெரிய ஊர். அங்கே சுமார் ஆயிரம் ஓட்டர்கள் உண்டு. செந்தலைக்குடியிலிருந்து மூன்று மைல் இருக்கிறது. அந்தப் பக்கத்திலேயே கோபாலனுக்கு நல்ல செல்வாக்கு. அதுவும் அவன் ஜில்லா போர்டு அங்கத்தினனாக இருந்ததிலிருந்து அவனுடைய செல்வாக்குப் பன்மடங்காக வளர்ந்துவிட்டது. 'செந்தலைக்குடி ஐயா' என்றால் அந்தப் பக்கத்தில் ரொம்பத் தாழ்ந்த குடியானவனுக்கும் தெரியும். அவன் கீறின கோட்டை யாரும் மீற மாட்டார்கள். அப்படி இருந்தும் அந்தத் தொகுதியில் காங்கிரஸ் கட்சி அபேட்சகருக்குப் போட்டியாக நிற்பவர் அன்று சாயங்காலந் தான் வெள்ளத்தூருக்கு வந்திருக்கிறார் என்ற செய்தி வந்தது. அவர் நல்ல பணக்காரர். அவருடைய நம்பிக்கை யெல்லாம் பணத்தின் மேல்தான். ஆகவே அவர் அன்று சாயங்காலம் வெள்ளத்தூரிலுள்ள வாக்காளர்களில் பாதிக்கு மேற்பட்டோரை 'ரூபாய் வீசி' மாற்றி விட்டார் என்பதைக் கேள்விப்பட்டதும், இருபது மைலுக்கு அப்பால் இருந்த கோபாலன் பறந்து கொண்டு ஓடிவந்தான். வரும் வழியில் அப்படியே வீட்டுக்கும் வந்துவிட்டுப் போகலாமென்று வந்தான். இப்பொழுது அவன் மனம் குழம்பத் தொடங்கியது. குழந்தை இப்படிக் கிடக்கையில் போவதற்கும் தைரியம் இல்லை. ஆனால் போகாவிட்டாலோ—அவன் எப்படியும் போய் இன்று ராத்திரிக்குள் அவனுக்குக் கீழ்ப் படிந்துள்ள ஊர் நாட்டாண்மைக்காரர்களைப் பார்த்தாக வேண்டும். கடைசியில், "ருக்மிணி, நான் போயிட்டு விடியக்காலம் வந்து விடுகிறேன்'' என்றான். பிறகு, "சரி, முதலில் சாப்பிடுவோம் வா'' என்று எழுந்து கால் கை சுத்தம் செய்ய முற்றத்தில் இறங்கினான்.

ருக்மிணி பேசாமல் உள்ளே போய் இலையை எடுத்துப் போட்டு ஜலம் எடுத்து வைத்தாள். கோபாலன் வந்து இலையின்கீழ் உட்கார்ந்துகொண்டான்.

சாதத்தை எடுத்து வைத்து மோரை விட்டாள்.

பிறகு அவனைக் கேட்டாள்; தன் மனத்தை விட்டுத் தைரியமாகத்தான் கேட்டாள்:

"உங்களுக்குத்தானா இந்த ஊர் வேலையெல்லாம்?"

அந்தக் கேள்வியைக் கேட்டதும் முதலில் ஆச்சரியமடைந்தான் கோபாலன். உடனே புன்சிரிப்புடன், "ஏன், யாராவது ஒருவர் செய்துதானே ஆகவேண்டும்?" என்றான்.

"அப்பவும் அப்படித்தான் ஒரு வருஷம் ஜெயிலுக்கு...அந்த ஒரு வருஷமும்..."

"ஏன்? நீதான் என்னைப் போகச் சொன்னாயே? நான்தான் உன்னைக் கேட்டேனே?"

"நீங்கள் பிடிவாதமாகச் சொல்லும்போது நான் என்ன சொல்ல முடியும்? நீங்க ஜெயிலுக்குப் போனதிலே எனக்குச் சம்மதமா?...அப்போ அதாச்சு. இப்போ பழையபடி பிரசாரம், பிரசாரம்! உங்க காங்கிரஸ்காராளுக்கெல்லாம் வேறே வேலையே கிடையாதா?"

அவளுடைய குரலிலே இத்தனை காலமாக அடக்கி வைத்திருந்த ஆத்திரமெல்லாம் ஒருங்கே தொனித்தது.

கோபாலன் மெதுவாகச் சிரித்துக்கொண்டே, "என்ன ருக்மிணி, நீகூட என்ன, விஷயம் தெரியாதவளா?...சுயராஜ்யம் வரும் வரையில் காங்கிரஸ்காரர்களுக்கு ஓழிவு உண்டா?...எல்லாம் நாம் நன்னா இருக்கத்தானே.."

"அதற்குள்ளே நம்ம இருக்கிற இடம் புல் முளைச்சுப் போயிடும்."

"நம்ம இல்லாவிட்டால், நம் குழந்தைகளுக்காக... இதோ பாரு, காங்கிரஸ் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து இருபத்தோராம் வருஷத்திலே..." என்று தொடங்கியவன், அவளுடைய முகத்தை நிமிர்ந்து பார்த்துவிட்டு, அவனுடைய அந்தப் பிரசங்கத்தை அவள் அப்போது அவ்வளவு தூரம் ரஸிக்கத் தயாராயில்லை என்பதை உணர்ந்து நிறுத்திக்கொண்டான்.

சாப்பிட்டானதும் எழுந்து கை கழுவிவிட்டு, "ருக்மிணி, நான் போயிட்டு விடியக்காலம் வந்துவிடுகிறேன். வரும்போதே டாக்டரையும் கூட்டிக்கொண்டு வருகிறேன். நீ ஒன்றுக்கும் பயப்படாதே" என்று குழந்தையின் பக்கத்தில் வந்து நின்று குனிந்து பார்த்தான். குழந்தையின் முகம் பளபளவென்று மின்னிற்று. கண்கள் மூடியிருந்தன. 'கர் கர்' என்ற சத்தத்துடன் சுவாசம் வந்தது.

"நான் உங்களைத் தடுக்கவில்லை..." என்று கசப்புடன் சொல்லிக்கொண்டே சமையலறையிலிருந்து வெளியே வந்தாள் ருக்மிணி.

அதற்குள் அவன் போய்விட்டான்.

## 4

குதிரைவண்டி, 'கட கட' வென்ற சத்தத்துடன் வெள்ளத்துரை நோக்கிப் பறந்துகொண்டிருக்கிறது. வண்டியின் அச்சில் மாட்டியிருந்த இரும்பு வளையங்களின், 'கண கண' ஓசையும், குதிரையின், 'டக் டக்' என்ற காலடிச் சத்தமும் மனத்திற்கு வேதனையைத் தந்தன.

கோபாலன் தைரியமாக வீட்டை விட்டு வந்துவிட்டானாயினும் அவனுடைய நினைப்பு முழுவதும்

குழந்தையிடமே இருந்தது. குழந்தைக்கு ஜுரம் அதிக மாகி விட்டால் என்ன செய்வது? ஒருவேளை....

அவனுடைய மனசு என்ன என்னவோ எண்ணி யது. உடனே வண்டியைத் திருப்பிவிடலாமா என்று நினைத்தான். ஆனால் ஐந்நூறு ஓட்டுக்கு மேல் போய் விட்டால்—? அந்த ஊர்க்காரர்கள் அவனுக்குத் துரோ கம் செய்யமாட்டார்கள் என்பது அவனுக்கு நிச்சய மாகத் தெரியும். இருந்தாலும் எப்படி நம்புவது? பணத்தை யார்தாம் வேண்டாம் என்று சொல்வார்கள்? இன்னும் தேர்தலுக்கு அதிக நாளும் இல்லை.

அவனுடைய மனசு ஒரு நிதானத்தில் இல்லை. குழந்தையின் முகம் அவன் கண்ணெதிரே நின்றது. அவனுடைய, 'செல்லக் குஞ்சு', "அப்பா, நீ எங்கேப்பா போனே?" என்று கேட்பதுபோலத் தோன்றிற்று அவனுக்கு. மறு கணம் குழந்தையின் மூடிய கண்-தணல் பொறிக்கும் முகம்! ஓடும் வண்டியிலிருந்து குதித்து விடலாமா என்று தோன்றிற்று.

கவலை தேங்கிய ருக்மிணியின் முகம் அவனைப் பார்த்துக் கெஞ்சுவதுபோல இருந்தது. அவன் கற் பனையிலே என்ன என்னவோ தோன்றிற்று: குழந்தை படுத்த படுக்கையாகக் கிடக்கிறது. அதனுடைய விழிகள் மேலேறிச் செருகிவிட்டன. படுக்கையைச் சுற்றி ஒரே கும்பலாக இருக்கிறது. அவனால் வேதனை தாங்க முடிய வில்லை. குழந்தை! குழந்தை!! குழந்தை!!!

திடீரென்று, "குப்பா!" என்றான் வண்டிக்காரனை நோக்கி.

"ஏங்க, எசமான்."

"இன்னும் எவ்வளவு தூரம் இருக்கிறது?"

"ஆச்சுங்க, ஒரு பர்லாங்கு இருக்கும்."

"சரி, வண்டியைத் திருப்பி நம்ம வீட்டுக்கு விடு, சீக்கிரம்!"

குப்பன் திகைத்துவிட்டான் முதலில். உடனே, "சரிங்க எசமான்" என்று வண்டியைத் திருப்பி, குதிரை விலாவில் சவுக்கினால் சொடுக்கி லகானைச் சுண்டினான்.

குதிரை பறந்தது.

## 5

கோபாலன், வீட்டு வாசலை அடைந்து வண்டியை விட்டு இறங்கியபோது மணி பத்தரை இருக்கும்.

பரபரவென்று படியேறியவன் ஜன்னலண்டை வந்ததும் சட்டென்று நின்றான். ஜன்னல் வழியாகக் கூடத்தில் எரியும் மங்கலான 'பெட்ரூம்' விளக்கு வெளிச்சத்திலே, ருக்மிணி குழந்தையின் பக்கத்தில், அதன் மேல் ஒரு கையைப் போட்டு அணைத்துக் கொண்டு படுத்திருப்பது தெரிந்தது. குழந்தையைப் பார்த்தான். அது தன் மேலே இருந்த போர்வையை யெல்லாம் கால்மாட்டில் உதைத்துத் தள்ளிவிட்டிருந்தது. அதன் முகத்தில் அவன் ராத்திரி போகு முன் இருந்ததைப்போல் அவ்வளவு பளபளப்பு இல்லை. அதில் அவனுக்குக் கொஞ்சம் திருப்தி. அதன் முகத்திலே ஒரு புன்னகை! தூக்கத்திலே பிதற்றுகிறது குழந்தை.

"அப்பா, நீ—எப்போப்பா— வந்தே?"

அதைப் பார்த்துக்கொண்டே கற்சிலை போல நின்றான் கோபாலன்.

"சாமி, வெள்ளத்தூர் ஐயா கிட்ட இருந்து ஆளு வந்திருக்குங்க. உங்களை அவசரப்பட்டுக்கிட்டு வர வேண்டாம்னு சொல்லச் சொன்னாருங்களாம்" என்று வண்டிக்காரன் கூவியதுகூட அவன் காதில் விழவில்லை.

# மிஸஸ் விசுவநாதன்

## 1

கோமதி அதிகக் கூட்டம் இல்லாத வண்டியில் ஏறி உட்கார்ந்துகொண்டாள். பக்கத்தில் பெட்டியையும் படுக்கையையும் கொண்டுவந்து வைத்தான் போர்ட்டர். அவன் கூடவே வந்த குமாஸ்தா, "இந்தாருங்கள் அம்மா" என்று டிக்கட்டை அவளிடம் கொடுத்துவிட்டு, "ஜாக்கிரதையாக வைத்துக்கொள்ளுங்கள்" என்று சொல்லிக்கொண்டே திரும்பினான்.

மணி அடித்தது. பிறகு எதையோ நினைத்துக் கொண்டவன்போல், "எஜமான் பார்ட்டியிலிருந்து வரவில்லை. எனக்குப் 'போன்' பண்ணி உங்களை அனுப்பச் சொன்னார்" என்று திரும்பிவந்து சொன்னான்.

கோமதி ஒரு பெருமூச்சு விட்டாள். பிளாட்பாரத்திலுள்ள கடிகாரத்தை நிமிர்ந்து பார்த்தாள். சரியாக ஒன்பது மணி. மற்றொரு முறை மணி அடித்தது. வண்டி மெதுவாக நகர்ந்தது.

"நான் போய் வரவா?" என்றான் குமாஸ்தா; "ஜாக்கிரதையாகப் போங்கள்."

"ஆஹா!"

கொஞ்சம் கொஞ்சமாக அதிகரித்த வேகத்துடன் வண்டி பிளாட்பாரத்தைக் கடந்தது. 'ஸோடா வெற்றிலை பாக்கு!', 'பேப்பர் ஸார், பேப்பர்' முதலிய பிளாட்பார விற்பனைக் குரல்கள் வரவரத் தேய்ந்து கொண்டே வந்தன.

கோமதி கையிலிருந்த டிக்கட்டைப் பார்த்தாள். 'தஞ்சாவூர் ஜங்.' தஞ்சாவூருக்குக் காலை ஆறு மணிக்கெல்லாம் போய்விடும். உடனே கால்மணிக்கெல்லாம் வீட்டுக்குப் போய்விடலாம். அவளுக்குத் தஞ்சாவூரில் இருக்கும் தன் தமக்கை, அவளுடைய வீடு, குழந்தைகள் ஆகிய ஞாபகங்கள் எல்லாம் வந்தன. சரோஜாவுக்கு-தமக்கையின் மூத்த குழந்தை-இப்போது பதினொரு வயசாக இருக்கும். ஞாபகம் இருக்குமோ என்னவோ? சந்துருவுக்கு ஏழு வயசோ எட்டு வயசோ ஆகியிருக்கும்-இப்படி ஒன்றன்பின் ஒன்றாக நினைவுகள் அவளுடைய மனத்தில் ஓடின.

பக்கத்து வண்டியில் யாரோ உரத்த குரலில் ராக ஆலாபனம் செய்துகொண்டிருந்தான். அவளுக்கு அது தலைவேதனையாக இருந்தது.

வெளியே எட்டிப் பார்த்தாள். ஒரே அந்தகாரமான இருள். வெளியில், வண்டிக்குள் இருக்கும் வெளிச்சத்தின் வியாபகம் மட்டும் ஒரே தொடர்ச்சியான வெள்ளையாகத் தெரிந்தது.

இரு பக்கத்திலும் கண்ணைக் காட்டி அழைப்பதைப் போல், பச்சை விளக்குடனும் சிவப்பு விளக்குடனும், பளிச்சுப் பளிச்சென்று மின்னின எலெக்ட்ரிக் ரெயில் ஸ்டேஷன்களை எல்லாம் லக்ஷ்யம் செய்யாது வெகு வேகமாக ஓடிக்கொண்டிருந்தது போட்மெயில்.

அடுத்தாற்போல் இரண்டு பெஞ்சிகளுக்கு நடுவில் கீழே கம்பளியை விரித்துக்கொண்டு ஒரு மூட்டையைத் தலையணையாக உபயோகித்துக்கொண்டு தூங்கினாள் ஒரு கிழவி. அவள் விட்ட குறட்டையின் சப்தம் மகா கோரமாக இருந்தது.

கோமதிக்குத் தூக்கம் வரவில்லை. படுக்கையின் மேல் சாய்ந்துகொண்டு பார்த்தாள். வெளியிலிருந்து ஜன்னல் வழியாகக் குளிர்ந்த காற்று வீசியது. உடனே

இரண்டு ஜன்னல்களையும் மூடிவிட்டு மறுபடியும் சாய்ந்துகொண்டாள். கண்ணை மூடிக்கொண்டு தூங்க முயன்றாள் தூக்கம் வந்தால்தானே? கண்ணை மூடிக் கொண்டு விட்டால் மனத்தையும் மூடிவிட முடியுமா? அதுபாட்டில் என்னவோ யோசனை செய்துகொண்டே இருக்கிறது. அதுவும் ராத்திரி வேளையில் தனியாக ரெயில பிரயாணம் செய்யும்போது கற்பனைக்குச் சுயாட்சிபோல் இருக்கிறது; தன் இஷ்டம் போல், தங்கு தடையின்றிக் கட்டவிழ்த்துவிட்ட குதிரைபோல் கிளம்பிவிடுகிறது!

அவள் தன்னுடைய மனத்தைக் கட்டுப்படுத்த முயன்றாள். முடியவில்லை. திரும்பத் திரும்ப ஒரே இடத் தில் போய் நின்றது. 'அட சனியன்!' என்று எழுந்து உட்கார்ந்துகொண்டு, ஜன்னலைத் தூக்கிவிட்டு வெளியே எட்டிப் பார்த்துக்கொண்டே வந்தாள். முகத்தில் குளிர்ந்த காற்று வீசுவது சுகமாக இருந்தது.

## 2

விசுவநாதன் கோமதியிடம் மிகவும் பிரியமாகத் தான் இருந்தான். அவன்மேல் புகார் சொல்லவே இடமில்லை. வீட்டில் அவளுக்குச் சர்வ சுதந்தரம்; அவள் இஷ்டம்போல் என்ன வேண்டுமானாலும் செய்ய லாம்.

வேலைக்காரனை மாற்ற வேண்டும்; ஹால் சுவர் முழுவதும் சுவாமி படங்களாக மாட்ட வேண்டும்; பஞ்சாபிலிருந்து உயர்ந்த ரோஜாச் செடி நான்கு தரு வித்து மாடியில் வைக்கவேண்டும்-எல்லாவற்றிற்கும், 'சரி, உடனே செய்துவிடுவோம்' என்ற பதில்தான். உடனே வேண்டிய பணத்துக்குக் கையில் செக் எழுதிக் கொடுத்து விடுவான்.

மாதத்தில் லக்ஷக்கணக்கில் வியாபாரம் செய்யும் ஒரு ஜெர்மானிய மருந்துக் கம்பெனியின் மானேஜர் உத்தியோகம் விசுவநாதனுக்கு. மாதம் ஆயிரத்தைந்நூறு ரூபாய் சம்பளம். இதைத் தவிர மோட்டார் அலவன்ஸ், இந்த அலவன்ஸ், அந்த அலவன்ஸ—வகையில் ஐந்நூறு, அறுநூறு ரூபாய். ஆனால் எல்லாம் அவனுக்குச் செலவுக்குச் சரியாக இருந்தது. 'வெள்ளைக்காரனைப் பார். எவ்வளவு அழகாக வாழ்க்கை நடத்துகிறான்! நம்ம ஜனங்களுக்கு அந்த மாதிரி இருக்க எப்போது தெரியப் போகிறதோ!' என்று அவன் அடிக்கடி சொல்லுவான்.

விசுவநாதனுக்கு மூடக் கொள்கைகளிலும், பழைய அசட்டுச் சம்பிரதாயங்களிலும் நம்பிக்கையே இல்லை. உபயோகமில்லாத பழைய கொள்கைகளையெல்லாம் உதறி எறிந்தால்தான் நமது நாடு நாகரிகமடைய முடியும் என்பதுதான் அவனுடைய நம்பிக்கை.

கோமதி கிராமவாசத்துப் பெண். ஆகவே விசுவநாதனுடைய 'ஹாட் சூட்' தோரணைகளும், அளவுக்கு மீறின ஆங்கில வார்த்தைகள் கலந்த அவனுடைய சம்பாஷணையும் முதலில் அவளுக்கு வியப்புக் கலந்த கவர்ச்சியைத் தந்தன. அழகாகக் கரை போடாத சில்க் புடைவையை நாகரிகமாக உடுத்துக்கொண்டு, பளபளவென்று அவன்கூட மோட்டாரில் போகும் போதெல்லாம் அவளுக்குத் தன்னையும் மீறிய பெருமையும் ஆனந்தமும் எழும். கிராமத்திலுள்ள தன்னையொத்த பெண்களுக்கெல்லாம் கிடைக்காத பெரும் பாக்கியம் தனக்குக் கிடைத்துவிட்டது என்ற உற்சாகத்தில் முகம் மலரும்.

விசுவநாதனும் மனைவி விஷயத்தில் தான் அதிருஷ்டசாலி என்று சந்தோஷப்பட்டுக்கொண்டான். அவள் வந்து ஆறு மாதத்திற்குள் பத்திரிகை படிக்கும்

வரைக்கும் ஆங்கிலம் கற்றுக்கொண்டு விட்டாள். நன்ருகப் பேசவும் கற்றுக்கொண்டு விட்டாள்.

விசுவநாதன் தன் மனைவியைப் பார்ட்டிகளுக்கெல்லாம் அழைத்துக்கொண்டு போவான். முதலில் கோமதி கொஞ்சம் சங்கோசப்பட்டாள். ஆனால் வர வர எல்லாம் சகஜமாய்ப் போய்விட்டது.

"இதுதான் மிஸஸ் விசுவநாதன்" என்று அவன் அவளைப் பெரிய மனித நண்பர்களிடம் அறிமுகப்படுத்தும்போதெல்லாம் அவள் உள்ளம் பூரிப்படையும்.

இந்த மாதிரியான ஒரு கணவன் வாய்க்கப் போகிருனென்று அவள் கனவிலும் எண்ணியதில்லை. வீட்டில் 'இம்' மென்ருல் தாங்குவதற்கு வேலைக்காரர்கள் காத்துக்கொண் டிருக்கிருர்கள். தினம் எழுந்ததும் சுடச் சுடக் காபி முகத்தில் விழிக்க வேண்டியது. பிறகு ஸ்நானம் செய்து 'டிரஸ்' பண்ணிக்கொள்ள வேண்டியது. பிறகு அரைமணி நேரம் பத்திரிகை படிக்க வேண்டியது. அதற்குள் விசுவநாதன் 'டிரஸ்' பண்ணிக் கொண்டு வந்துவிடுவான். வாசலில் மோட்டாரும் தயாராக வந்து நிற்கும். இருவரும் ஏறிக்கொண்டு நண்பர்கள் வீட்டுக்குப் போக வேண்டியது.—தினசரி நண்பர்கள் எவரிடமிருந்தாவது அழைப்பு வந்து கொண்டேதான் இருக்கும்.—அங்கே அவளை விட்டு விசுவநாதன் ஆபீசுக்குப் போய்விடுவான். பிறகு கார் வந்ததும் அதில் ஏறிக்கொண்டு வீட்டிற்குப் போவாள். போய்ச் சாப்பாடானதும் இரண்டு மணி சாவகாசம் தூக்கம். தூக்கம் இல்லாவிட்டால் ஏதாவது நாவலைப் படிப்பாள்; ஊரிலுள்ள 'லைப்ரரி'கள் நான்கிலும், 'இரு' விசுவநாதன்களும் அங்கத்தினர்கள். பிற்பகல் 2 மணிக்கு டீ. பிறகு லேடீஸ் கிளப்பிற்குப் போகவேண்டியது. கிளப்பிலிருந்து நான்கு மணிக்கு ஆபீசுக்குப் போய்

விசுவநாதனை அழைத்துக்கொண்டு வந்து அவனை அவனுடைய டென்னிஸ் கிளப்பில் கொண்டுபோய் விடுவாள். அதன் பிறகு நண்பர்களுடன் சினிமாவோ சங்கீதக் கச்சேரியோ போய்விடுவாள். சில சமயம் எப்போதாவது விசுவநாதனும் அவளுடன் மாலையில் வருவான். அநேகமாக அது நேருவதே இல்லை. இரவு அவள் வரும்போது முன்னடியே வந்திருந்தால் விசுவநாதன் படுக்கைக்குப் போய்விடுவான். சில நாள் இவள் வந்து வெகுநேரம் கழித்துத்தான் வருவான். அவனுக்கும் எவ்வளவோ பார்ட்டிகளுக்குப் போகவேண்டி யிருக்கும்.

இப்படியாக, கோமதியின் வாழ்க்கை ஒரு புதுச் சொப்பனம் போல், ஒரு தனி உலகம்போல் கழிந்தது.

## 3

இரண்டு வருஷங்கள் கழிந்தன. கோமதிக்கு அந்த யந்திரம் போன்ற நாகரிக வாழ்க்கையில் அலுப்பு ஏற்பட்டுவிட்டது.

ஒரு நாள் மாலை நாலரை மணி இருக்கும். அன்று முழுவதும் கோமதி வெளியில் எங்கும் போகவில்லை. தலையை வலிக்கிறதென்று வீட்டிலேயே இருந்து விட்டாள். அன்று அவளுக்கு மனசு என்னவோபோல் இருந்தது. அதற்கு ஏற்றாற்போல் அவள் நான்கு நாட்களாக விசுவநாதனைப் பார்க்கவே இல்லை. அவன் வீட்டுக்கு வரவே இல்லை. அவனுக்கு மூச்சு விடக்கூட நேரம் இல்லை. அசாத்திய ஜோலி. கம்பெனியின் துரை சீமையிலிருந்து வந்திருந்தார். நான்கு நாட்களாக அவருடனேயே சுற்றிக்கொண் டிருந்தான். அதையும் தவிர அவர்களுடைய 'ரிக்ரியேஷன் கிளப்பின்' வருஷக் கொண்டாட்டம்; அன்று முதல் நாள்.

கோமதிக்குப் பொழுது போகவில்லை. புஸ்தகத்தை எடுத்து வைத்துக்கொண்டு படிக்க முயன்றாள். படிப்பு

ஓடவில்லை. 'கொர்'ரென்று சத்தமிட்டுச் சுழன்று கொண்டிருந்த எலெக்ட்ரிக் பங்காவை நிறுத்தினாள். பக் கத்து அறையில் போய், சோபாவில் சாய்ந்துகொண் டாள். அப்போது ஒரு பியூன் உள்ளே நுழைந்தான்.

"ஜட்ஜி அம்மா வாசலில் காரில் வந்திருக்காங்க. உங்களைக் கிளப்புக்கு வரீங்களா என்று கேட்கச் சொன் னாங்க" என்றான் அவன்.

"தலையை வலிக்கிறதாம்; வரவில்லையாம் என்று சொல்லு" என்றாள்.

அதற்குள் ஜட்ஜ் அம்மாளின் குரல் கேட்டது.

"ஹலோ விசுவநாதன்! கிளப்புக்கு வல்லியா?"

கோமதி எழுந்து ஜன்னலண்டை போய் நின்று கொண்டு, "எக்ஸ்யூஸ், மி, சாத்தன்! ரொம்ப ஹெடேக்" என்று சொன்னாள்.

உடனே மோட்டார் புறப்பட்டது.

அந்த அறையை விட்டு வெளியே வந்தாள் கோமதி. அப்போதுதான் ஒரு தந்திச் சேவகன் ஒரு தந்தியைக் கொண்டு வந்து நீட்டினான்.

அதைப் பிரித்துப் பார்த்ததும் அவளுக்குத் திடுக் கிட்டது. அது அவளுடைய சொந்த ஊரிலிருந்து வந்தது. அவளுடைய தாய்க்குத் தேக அசௌக்கியம். உடனே அவளையும் புருஷனையும் புறப்பட்டு வரும்படி எழுதியிருந்தது. தந்தியில், 'உடம்பு அதிகமாக இருக் கிறது' என்றுதான் இருந்தது. ஆனால் அதன் அர்த்தம் அவளுக்கு நன்றாகத் தெரியும். தாய் வயசானவள். ஏற்கனவே படுத்த படுக்கையாகக் கிடந்தாள். அதனால் அவள் போவதற்குள் பிராணன் போயிருக்கும் என்பது அவளுக்கு நன்றாகத் தெரியும். ஆனாலும் உடனே போய்ப் பார்த்தால் ஒருவேளை 'முகமுழி' கிடைக் காதா என்ற ஆசை.

கிராமம் அங்கிருந்து இருநூறு மைல் இருக்கிறது. உடனே மோட்டாரில் புறப்பட்டால் விடிவதற்குள் போய்ச் சேரலாம். ஆனால் விசுவநாதனைக் காண வில்லையே!"

கோமதி அவசரமாகக் குமாஸ்தாவை அழைத்து, "எங்கிருந்தாலும் எஜமானைப் பார்த்து உடனே வரச் சொல்லும். ரொம்ப அவசரம்" என்றாள்.

சரி என்று போனான் குமாஸ்தா. அரைமணி நேரம் ஆயிற்று. கோமதிக்கு நெருப்பின்மேல் இருப்பதுபோல் இருந்தது. உடனே ஊருக்குப் போக வேண்டுமென்று துடித்தாள்.

குமாஸ்தா திரும்பி வந்தான். "எஜமான் ஆபீசில் தான் இருக்கிறார். ரொம்ப வேலையாக இருக்கிறாராம். நான் அவரைப் பார்க்கக்கூட முடியவில்லை" என்று சொன்னான்.

கோமதிக்குக் கோபம் கோபமாக வந்தது. என்ன பண்ணுவது? உடனே புறப்பட்டு ஆபீசுக்குப் போக நினைத்தாள். ஆனால் மோட்டார் இல்லை. உடனே 'போனை' எடுத்துக் கூப்பிட்டாள். ஆபீசில் யாரோ குமாஸ்தா பதில் சொன்னான். "உடனே உங்கள் மானேஜரைக் கூப்பிடுங்கள். ரொம்ப அவசரம்" என்றாள். இரண்டு நிமிஷம் ஆயின.

"ஹல்லோ!" என்றான் விசுவநாதன். "—டார்லிங், நீயா? ரொம்ப அவசரமாக இருக்கிறேன். எக்ஸ்யூஸ்-மி. இன்று சாயந்தரம் ஆறு மணிக்கு வீட்டுக்கு வருகிறேன். துரையும் வருகிறார்."

அவ்வளவுதான். போன் அடைக்கப்பட்டது. கோமதிக்குப் பிரமாதமான கோபம் வந்தது. முகம் சிவந்து திணறிற்று. அப்படியே போனைக் கீழே போட்டுவிட்டுத் தன் அறைக்குள் போய்ப் படுக்கையில்

சாய்ந்துவிட்டாள். தன்னுடைய வாழ்க்கையை, புருஷனை, வெறுத்துக் கசந்துகொண்டாள்.

திடீரென்று எழுந்து உட்கார்ந்துகொண்டாள். அவள் முகம் வீங்கியிருந்தது. கன்னங்களில் கண்ணீர் ஓடிக் காய்ந்திருந்தது. குமாஸ்தாவைக் கூப்பிட்டாள்.

"போய் ஒரு 'டாக்ஸி' கொண்டு வாரும்'' என்றாள்.

'டாக்ஸி வந்தது. அதில் ஏறி உட்கார்ந்தாள். மோட்டார் ஆபீசை நோக்கி விரைந்து சென்றது.

எதிரே டிரைவருக்குப் பக்கத்திலுள்ள கண்ணாடியில் அவள் முகம் தெரிந்தது. தலை கலைந்திருந்தது. முகம் அழுக்கடைந்திருந்தது. இந்த மாதிரி 'அநாகரிகமாக' நாசூக்கு இல்லாமல் அவள் வெளியே கிளம்பினதே இல்லை. ஆனால் இதையெல்லாம் அவள் நினைக்கவே இல்லை. அவள் மனம் துக்கத்தாலும் கோபத்தாலும் சோர்ந்து களைத்திருந்தது.

ஆபீசை அடைந்ததும் கோமதி மானேஜர் அறைக்குள் நுழைந்தாள். அவளைக் கண்டதும் விசுவநாதன் முதலில் திடுக்கிட்டான். பிறகு சமாளித்துக்கொண்டு, "வா'' என்று சொல்லிவிட்டுப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த துரையிடம், "இவள்தான் மிஸஸ் விசுவநாதன்'' என்று அறிமுகப்படுத்திக்கொண்டே அவளைப் பார்த்து, "நாங்கள் அங்கே புறப்பட இருந்தோம்'' என்றான் ஆங்கிலத்தில்.

துரையும் கரடு முரடான ஜர்மானிய உச்சரிப்புக் கலந்த ஆங்கிலத்தில், "ஹலோ, ஹவ் டு யு—யு—ஆர் சார்மிங்'' என்றான்.

கோமதிக்கு ஒரே வெறுப்பாகத் தோன்றியது. இருந்தாலும் வலுக்கட்டாயமாக வரவழைத்துக்கொண்ட புன்னகையுடன் உட்கார்ந்தாள். இப்படியாக அரை

மணி ஆயிற்று. அந்தத் துரை என்ன எல்லாமோ பேசிக்கொண்டே இருந்தான். அவள் காதில் அதெல்லாம் விழவில்லை. எல்லாரும் டீ சாப்பிட்டார்கள். கோமதியும் சாப்பிடுவதாகப் பாவனை பண்ணினாள். அவளுடைய நினைவெல்லாம் ஊரில் இருந்தது.

கடைசியில் முக்கால் மணி நேரம் கழித்து அவளுக்கு விசுவநாதனுடன் தனித்துப் பேசச் சந்தர்ப்பம் கிடைத்தது. மெதுவாக அவனிடம் விஷயத்தைச் சொன்னாள். ஆனால் விசுவநாதன் சர்வசாதாரணமாக, "அதற்கென்ன, நீ போகவேண்டும் என்ற அவசியம் இல்லையே. ஒரு நூறு ரூபாய் போதுமா? நாளைக்குத் தந்தி மணியார்டர் பண்ணி விடலாம்" என்றான்.

கோமதிக்கு இடி விழுந்ததுபோல் இருந்தது. உடனே அங்கிருந்து கிளம்பிவிட்டாள்.

அன்று விடியற்காலை அவள் மட்டும் ஊருக்குப் பிரயாணமானாள்.

## 4

அன்று முதல் அவளுக்கு அந்த 'நாகரிக' வாழ்க்கையில் ஏற்பட்ட வெறுப்பு வளர்ந்து வந்தது.

அவள் அடிக்கடி வெளியில் போவதை நிறுத்திவிட்டாள். அவளுடைய மாறுதலை முதலில் விசுவநாதன் கவனிக்கவில்லை. ஒரு நாள் கவர்னருக்குப் பார்ட்டி கொடுத்தபோது அவளையும் அழைத்தான். அவள் வரவில்லை என்று சொல்லிவிட்டாள். விசுவநாதனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

"ஏன்?" என்று கேட்டான்.

"எனக்குப் பிடிக்கவில்லை. அவ்வளவுதான்."

"என்ன இது கோமு? பிடிக்கவில்லையா—!"

"ஆமாம், நான் வரப்போவதில்லை."

"இதென்ன இப்படிப் பைத்தியமாகிவிட்டாய்? நீ கெட்டிக்காரி என்றல்லவா சந்தோஷப்பட்டுக்கொண் டிருந்தேன்?—சரி, புறப்படு கோமு" என்றான்.

ஆனால் கோமதி ஒன்றும் பதில் சொல்லாமல் உள்ளே போய்விட்டாள். அவளை அவன், 'கோமு' என்று பெயரைச் சொல்லி அதிகமாக அழைத்ததே இல்லை. அப்படி நெருங்கிப் பேச அவனுக்குச் சாவகாசம் ஏது? எப்போதும், அநேகமாக முக்கால்வாசி நாட்களில் அவ ளுடன் அவன் சேர்ந்துதான் இருக்கிறான். இருந்தாலும் அவன் எங்கோ எட்டி இருப்பதாகவே தான் அவளுக் குத் தோன்றிற்று. பக்கத்தில் யாராவது இருப்பார்கள். 'இதுதான் மிஸஸ் விசுவநாதன்' என்று அவன் அறி முகம் செய்துகொண்டிருப்பான்.

'மிஸஸ் விசுவநாதன்!'—அந்த வார்த்தையைக் கேட்டாலே அவளுக்கு வெறுப்பு ஏற்பட்டது. அந்த வார்த்தையைக் கேட்டுக் கேட்டு அவளுடைய காது புளித்துப் போயிருந்தது. எப்போதாவது ஒரு தடவை அவன், 'கோமு' என்று அழைத்தால் அவள் மனம் ஆனந்தமடையும். மறுபடியும் ஒரு தடவை அப்படிக் கூப்பிடமாட்டானா என்று ஏங்கும்.

## 5

அன்று முதல்நாள் தஞ்சாவூரில் தன் தமக்கை யின் குழந்தைக்கு அப்தபூர்த்தி என்று கடிதம் வந்த தும், அவள் அதற்கு எப்படியாவது போகவேண்டும் என்று தீர்மானம் செய்துகொண்டாள்.

இதற்கு முன் எத்தனையோ விசேஷங்களுக்கு அழைப்பும், கல்யாணங்களுக்குப் பத்திரிகைகளும் வந் திருக்கின்றன. அவற்றிற்கு ஒன்றுக்காவது அவள்

போனதில்லை. எல்லாவற்றிற்கும் ஒரு பத்து ரூபாய், இருபது ரூபாய் மணியார்டர்; அவ்வளவுதான். ஆனால் இந்த அப்தபூர்த்திக் கல்யாணத்துக்கு அவள் போக வேண்டுமென்று நினைத்தாள். அது மிகவும் சாதாரண மான கல்யாணம் என்பது அவளுக்குத் தெரியும். இருந் தாலும் தன்னுடைய இந்த யந்திர வாழ்க்கையை விட்டுப் பத்து நாள் வேறு எங்காவது போயிருக்க வேண்டும் என்று தோன்றிற்று அவளுக்கு.

மறு நாள் காலையில் விசுவநாதன் ஆபீசுக்குப் புறப் படும்போது, "நான் இன்று தஞ்சாவூருக்குப் போகி றேன்" என்றாள்.

"அங்கே என்ன?" என்றான் விசுவநாதன் ஆச்சரி யத்துடன்.

"என்னவோ, போகவேண்டும்போல் இருக்கிறது. அவ்வளவுதான். அதோடு அங்கே எங்க அக்கா குழந் தைக்கு அப்த பூர்த்தியாம். அதற்கும் போனாப்போல் இருக்கும். அக்காளைப் பார்த்து ரொம்ப நாளாச்சு."

"அதுக்கு இப்பத்தானா? அப்தபூர்த்திக்கு இங் கிருந்து யாராவது போவாளா? என்னவோ உனக்கு வர வரப் பைத்தியமாகத் தோன்றுகிறது. சரி, வேண்டு மானால் போ. நான் சாயந்தரம் வந்தால் ஸ்டேஷனில் வந்து பார்க்கிறேன்" என்று சொல்லிக்கொண்டே போய், விசுவநாதன் மோட்டாரில் ஏறிக்கொண்டான்.

அன்றிரவு போட்மெயிலில் கோமதி தஞ்சாவூருக் குப் பிரயாணமானாள்.

## ௬

சரியாக ஆறரை மணிக்கெல்லாம் கோமதி வீடு போய்ச் சேர்ந்தாள். வண்டிக்காரன் பெட்டியையும் படுக்கையையும் கூடத்திலே கொண்டுவந்து வைத்து

விட்டுத் திரும்பினான். கோமதி அவன் கையில் சில்லறை யைக் கொடுத்துவிட்டு உள்ளே நுழைந்தாள்.

கூடத்தில் அழுக்கடைந்த பாவாடையைக் கட்டிக் கொண்டு, சுவரை நோண்டிக்கொண்டிருந்த ஒரு குழந்தை பயத்துடன் கோமதியை வெறிக்கப் பார்த்தது.

சமையலறையிலிருந்து அவளுடைய தமக்கை புருஷனுடைய குரல் உச்சஸ்வரத்தில் கேட்டது:

"அடியே, ரங்கம்! எங்கடி வச்சே, இந்தப் பஞ்ச பாத்திரத்தை! மூதேவி! வச்சது வச்ச இடத்திலே இருக்கிறதில்லை...."

அப்படியே பிரமித்து நின்றுவிட்ட கோமதி பெரு மூச்சு விட்டாள். அவளுடைய நெஞ்சிலே அடைத்துக் கிடந்த ஏக்கம் அத்தனையையும் அந்தப் பெருமூச்சு வெளியிட்டது. அவளுடைய கண்களில் நீர் துளித்தது.

"ஏன் இப்படிக் கதறியள்!" என்று கேட்டுக் கொண்டே இடுப்பில் குடத்துடன் கொல்லைப்புறத்தி லிருந்து உள்ளே வந்தாள் கோமதியின் தமக்கை. இவளைக் கண்டதும் நின்று, "கோமதியா? வாடி, வா!" என்று ஆச்சரியமும் சந்தோஷமும் கலந்து சொல்லிக் கொண்டே குடத்தைக் கீழே வைத்துவிட்டு வந்தாள். தமக்கையின் புருஷனும், "யாரு, கோமதியா! வா, வா, வா" என்று சொல்லிக்கொண்டே வெளியே வந்தார்.

# இழந்த கண்

## 1

நல்ல கம்பிபோல் இழையும் சாரீரம். அதிலே அலைமேல் அலை மோதுவதுபோன்ற ஒரு சலசலப்பு; ஆவியைக் கவர்ந்து இழுத்து உருக்கி ஐக்கியப்படுத்திக் கொள்ளும் இனிமை.

"ஆழாழி கரையின்றி நிற்கவிலை யோகோடிய
ஆலம்அமு தாகவிலையோ?"

கண்கள் மூடியிருக்கின்றன. அந்த வார்த்தைகளில் தோன்றிய உருக்கம், இருதயத்திலேயிருந்து இனிமையை வாரி வீசுவதுபோன்று இருந்தது. சரசர வென்று உருளும் அந்தத் தொண்டையாகிய ஊற்றிலிருந்து அமிர்த வெள்ளம் தானாகப் பொங்கிப் பொழிவதுபோன்று இருந்தது; கேட்போர் நெஞ்சை மயக்கி இன்ப வெள்ளத்தில் ஆழ்த்தி, அதோடு இரண்டறக் கலந்து போகும்படி செய்தது.

அந்தப் பாழ் மண்டபத்திலே மெய்ம்மறந்து பாடிக் கொண்டிருக்கிறார் பாடகர். அஸ்தமிக்கப்போகும் மாலைக் கதிரவனின் செங்கதிரொன்று பொலிவுடன் திகழும் அவருடைய முகவிலாசத்தில் பட்டு, அதன் சோபையை அதிகரித்துக் காட்டியது.

அப்பொழுது மண்டபத்தருகே ஒரு மோட்டார் கார் வந்து நின்றது. அதிலிருந்து ஒரு கனவான் இறங்கினார். அவருடன்கூட இன்னொருவரும் இறங்கினார். இருவரும் நேராகப் பாடகரை நோக்கி வந்தார்கள்.

முதலில் வந்த கனவான் பேசத் தொடங்கினார்: "சுவாமி, சுவாமி!" என்றார் பாடகர் பக்கத்தில் வந்து.

சடக்கென்று கீதம் நின்றது. பாடகர் திடுக்கிட்டு நிமிர்ந்து, "என்னையா?" என்றார்.

"ஆமாம், தங்களைத்தான் தேடி வந்தேன்" என்றார் கனவான்.

"என்னையா? அல்பனாகிய என்னைத் தேடி வர வாவது!"

அவருடைய கண்கள் மூடியே இருந்தன. மேலும் ஆச்சரியத்துடனும் பரபரப்புடனும் சொல்லலானார்:

"நானோ குருடன். தாங்களோ பெரிய மனிதராகத் தோன்றுகிறது. அடியேனைத் தேடித் தாங்கள் வரக் காரணம் என்ன?"

"சுவாமி, உங்களால் ஒரு காரியம் ஆகவேண்டி யிருக்கிறது. அதனால் உங்களுக்கும் சௌகரியம்."

"என்ன—?"

"நாங்கள் சினிமாப் படம் பிடிக்கிறவர்கள்; அதாவது நாடகம் ஆடி அதைப் படம் பிடித்துத் திரையில் காட்டுவது. என் பெயர் சுந்தரமூர்த்தி. என் பக்கத்தில் இருப்பவர் என் நண்பர். நாங்கள் இருவரும் எங்கள் படம் ஒன்றுக்குத் தகுதியான ஆள் இல்லாமல் ஊரூராய்த் தேடி அலைந்து வருகிறோம். அடுத்த ஊரில் தங்களைப்பற்றிக் கேள்விப்பட்டோம். தங்களை நேரில் பார்த்தபின்..."

பாடகர் முகம் சுருங்கியது.

"ஐயன்மீர், நான் ஒரு பொட்டையன்! நாடகத்தில் நான் என்ன பண்ண முடியும்?" என்று ஓர் எளனச் சிரிப்போடு கேட்டார்.

"சுவாமி, நீங்கள் என்ன பண்ண முடியும் என்பது எங்களுக்குத் தெரியும். உங்கள் அற்புத கானத்தை இப்போதுதான் கேட்டோம். மற்றதை நாங்கள் பார்த்

துக்கொள்ளுகிறோம். தாங்கள் எங்கள்கூட வந்தால் போதும். அன்றியும் தங்களுக்கு வருமானம் பெருக..."

"ஐயா, எனக்கு வருமானம் ஏதுக்கு? இரண்டு பழம், ஆழாக்குப் பால் - இதுதான் எனக்கு நித்திய ஆகாரம். இது தானாகக் கிடைத்தால் சாப்பிடுவேன். இல்லாவிட்டால் அருகில் ஓடை இருக்கிறது; கை இருக்கிறது. என்னுடைய வாழ்வு நாளெல்லாம் போய் விட்டது. இன்னும் சொல்ப காலம்; இப்படியே பாடிக் கழித்துவிடுவேன்."

"சுவாமி, தாங்கள் நான் சொல்வதை உணரவில்லை. உங்களுக்கு இவ்வித அபூர்வ சக்தியை வைத்துக் கொண்டு ஆயிரக்கணக்கில் சம்பாதிக்கச் சந்தர்ப்பம் இருக்கும்போது..."

அந்தகருடைய முகம் சிவந்தது. நரம்புகள் புடைத்தன. "என்ன! ஆண்டவன் எனக்கு அளித்திருக்கும் சக்தியைக் கேவலம் காசுக்கு அடிமைப்படுத்தச் சொல்கிறீர்களா?"

சற்றுநேரம் மௌனமாக இருந்தார். பிறகு சொன்னார் கொஞ்சம் மிருதுவான குரலில்: "அப்பனே! ஆண்டவன் எனக்குக் கொடுத்திருக்கும் சக்தியை அவனை வழிபடுவதற்கேதான் உபயோகப்படுத்துவேன். ஒரு காலம் இருந்தது; அப்போது கேவலம் ஜீவனோபாயமாகக் கருதினேன் இந்த அபூர்வ சக்தியை. அதற்கு மூலகாரணமாக இருந்த வஸ்துவை ஆண்டவன் எடுத்துக்கொண்டு விட்டார். அதிலிருந்து நானும் பாடம் கற்றுக்கொண்டேன். இனியும் அந்தப் பிழையைச் செய்யமாட்டேன். ஒரு தரம் செய்தேன்.."

அவர் ஏதோ யோசனையில் ஆழ்ந்தது போன்று மெதுவாகப் பேச்சை நிறுத்திவிட்டார். பார்வையற்ற அவர் கண்களில் நீர் நிறைந்தது.

இவ்வளவு நேரம் பின்னால் நின்றிருந்த சுந்தர மூர்த்தியின் நண்பர் பக்கத்தில் வந்து உட்கார்ந்தார். மெதுவாகப் பேசலானார்:

"சுவாமி, தங்களுடைய மனத்தில் ஏதோ பெருந் துக்கம் வருத்துவதாகத் தோன்றுகிறது. எங்களிடம் சொல்லலாமானால், நாங்கள் அதை எங்களால் முடிந்த வரையில் நிவர்த்திக்க வழி தேடுகிறோம்."

"ஐயா, அதை நிவர்த்திக்க ஆண்டவனால்தான் முடியும். வேறு யாராலும் முடியாது. இருந்தாலும் தாங்கள் ஏழைமீது இரக்கம் கொண்டு கேட்பதால் சொல்லுகிறேன். - ஆனால் தாங்கள் போக வேண்டாமா? எனக்காக இங்கேயே..."

"இல்லை, இல்லை. தாங்கள் சொல்லுங்கள்.."

பாடகர் சொல்லத் தொடங்கினார்:

"ஐயா, சிறு வயசிலிருந்தே எனக்கு இந்தக் கான சக்தி உண்டு. எங்கள் வம்ச பரம்பரையாக வந்த சொத்து இது. ஆனால் இதைப் பிழைப்புக்காக இது வரையில் எங்கள் வம்சத்தில் யாரும் அடகு வைத்ததில்லை. முதல் முதலில் நான்தான் அப்படிச் செய்தேன். அதுதான் அநுபவிக்கிறேன்.

"காலக்கிரமத்தில் நான் இதை வளர்த்துவந்தேன். நாள் முழுவதும் சாரீரத்தைச் சாதகம் பண்ணுவதிலேயே செலவழிப்பேன். புதிதாக யாரேனும் வித்துவான்கள் பாடினால் அதை அப்படியே வீட்டில் வந்ததும் சாதகம் செய்வேன். ஆகவே வயசு வந்ததும் எனக்குப் பிழைப்பதற்கு இதையன்றி வேறு வழி இல்லாமற் போய்விட்டது. வேறு ஒரு தொழிலும் தெரியாது. என்ன பண்ணுவது?

"இப்படியாக நான் ஒரு சிறு சங்கீதப் பள்ளிக்கூடம் ஸ்தாபித்தேன். ஏதோ அதில் வந்த வரும்படி

எனக்கும் என் மனைவிக்கும் போதுமானதாக இருந்தது.

"அப்போது எனக்கு முப்பது வயசு. ஒரு பெண் குழந்தை பிறந்தது. எனக்கு ஒரே ஆசைதான். வம்ச பரம்பரையாக வந்த தெய்விக சக்தி மங்கிவிடக்கூடாது என்பதுதான். அது மாத்திரம் என்ன, புலிப் பரம்பரையில் பிறந்து விட்டுப் பூனையாகி விடுமா? பத்து வயசு ஆவதற்குள் எனக்குத் தெரிந்த வித்வத் முழுவதையும் கற்றுக்கொண்டுவிட்டது. ஆகா! என்ன சாரீரம்? என்ன இனிமை! என்ன குழைவு!—என்னைப் புகழ்கிறீர்களே, ஐயா? அதைக் கேட்டிருந்தால் நீங்கள் என்ன சொல்வீர்கள்?—இனியும் கேட்கப் போகிறேனா! சீதா!"

பெரியவர் கதையை நிறுத்தினார். தம்மை மறந்து எங்கேயோ பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தார். அவருடைய மனவேதனை கண்ணீராய் வழிந்தோடியது.

எதிரில் இருந்த இருவரும், அந்த அந்தகரின் துக்கத்தில் தங்களையும் மறந்து கல்லாய் உட்கார்ந்திருந்தனர்.

பெரியவர் தாமாகவே மறுபடியும் ஆரம்பித்தார்:

"அப்போதுதான் என் பொல்லாக் காலம் வந்தது. என் மனைவிக்கு வைசூரி கண்டது. அதன் அடையாளங்கள் தோன்றும்போதே நான் என் செல்வத்தை, இனிய குயிலியை, அடுத்த வீட்டிற்கு அனுப்பிவிட்டேன். என் மனைவி பதினைந்து நாட்கள் கிடந்தாள். பதினாறுவது நாள் வைசூரி அவளைக் கொண்டுபோய் விட்டது.

"ஆனால் என் பொல்லாக் காலம் அதோடு நிற்கவில்லை. என்னையும் வைசூரி பிடித்துக்கொண்டது. பத்து நாள் ஆயின. நாளுக்கு நாள் அதிகரித்ததே ஒழிய, கொஞ்சமாவது இறங்கும் அடையாளமே இல்லை.

அப்பொழுதெல்லாம் என் மனம் என்ன பாடு பட்டது தெரியுமா? என் கண்மணியை, சீதாவைப் பார்க்க வேண்டுமென்று ஆவல் துடித்தது. ஆனால் பயம். இறந்துவிடப்போகிறேன் என்றே நினைத்தேன். ஆனாலும் சீதாவை அழைத்து வரச் சொல்ல மனம் இசையவில்லை. வாய் மட்டும் அறுபது நாழிகையும் புலம்புகிறது: 'சீதா! சீதா!' என்று.

"ஐயோ! நான் அப்போது பட்ட கஷ்டத்தை, நரக வேதனையை உங்களுக்கு எப்படிச் சொல்லுவேன்!....

"இப்படியே புலம்பிப் புலம்பி நான் நினைவிழந்தேன். கடைசியில் எனக்கு நினைவு வந்தபோது தர்ம ஆஸ்பத்திரியில் கிடப்பதாக அறிந்துகொண்டேன். நான் வந்து இரண்டு மாதமாகிவிட்டதென்றும் தெரிந்தது.

"என்னுடைய முதல் நினைவு என்ன என்று நினைக்கிறீர்கள்?..... ஆனால், சீதா இல்லை. அவளோடு என் கண்களின் பார்வையும் மறைந்துவிட்டது. சீதா எங்கே?—என் கேள்விக்குப் பதில் சொல்வார் யாரும் இல்லை. எனக்கு இன்னும் சித்தம் சரியாகவில்லை என்றே எல்லோரும் நினைத்தார்கள். டாக்டர் வந்ததும் அவரைக் கெஞ்சினேன். என் சீதாவைப்பற்றி விசாரிக்கும்படி கேட்டேன். இன்னும் பதினைந்து நாளில் நான் வெளியே அனுப்பப்படுவேன் என்றும் அப்போது போய்ப் பார்த்துக்கொள்ளும்படியும் அவர் சொன்னார்.

"பதினைந்து நாள் ஆயின. நான் வெளியே அனுப்பப்பட்டேன். எப்படி? கண்ணிழந்த பரதேசியாய்த் தெருவில் தள்ளப்பட்டேன். எப்படியோ பிராணனை விட்டுக்கொண்டு வீட்டைப் போய் அடைந்தேன். ஆனால் அங்கே காலி வீடுதான் இருந்தது.

"சீதா எங்கே? சீதா எங்கே? — அடுத்த வீட்டில் உள்ளவர்களெல்லாரும் எங்கோ வெளியூருக்கு

மாற்றலாய்ப் போய்விட்டார்களென்று மிகவும் சிரமப் பட்டு விசாரித்ததன்மேல் அறிந்துகொண்டேன். எந்த ஊருக்குப் போனார்களென்று சொல்பவர்கள் யாரும் இல்லை. சீதா எங்கே போனாள்? இதே எனக்குப் பைத்தியமாய்விட்டது. எங்கே போய்த் தேடுவது, ஒரு குருடன்?

"அன்று முதல் இன்று வரையில் நான் இன்னும் தேடிக்கொண்டுதான் இருக்கிறேன், என் உயிர்ச் செல்வத்தை! பத்து வருஷங்கள் ஆகின்றன. ஊரூராய் மாறிக்கொண்டே சுற்றுகிறேன். நான் பட்ட கஷ்டங் களோ கணக்கில் அடங்கா. இருந்தாலும் என் கண் மணியை என்றாவது ஒரு நாள் காண்பேன் என்ற நம்பிக்கையில்தான் என் உயிர் நிற்கிறது. ஐயன்மீர், என் வித்துவத்தை விருத்தியாகக் கொண்டதால்தான் என் கண்மணியைப் பறிகொடுத்தேன்! இன்னமும் ஒரு தடவை நீங்கள் பணயம் வைக்கச் சொல்கிறீர்கள்! இது நியாயமா?.."

வரவர ஸ்வரம் குறைந்தது. சமாதியில் இருப்பவர் போல் உட்கார்ந்திருந்தார் பெரியவர். காட்டாற்றைப் போல் கன்னத்தினூடே ஓடியிருந்த கண்ணீர் பளபள வென்று மின்னிற்று. என்ன என்ன கனவுகளைக் கண் டனவோ அவருடைய பார்வையற்ற கண்கள்!

கால் நாழிகை ஆயிற்று. இவ்வளவு நேரம் இந்தச் சோகம் நிரம்பிய சரிதத்தை இரக்கம் பொங்கிய உள்ளத் துடன் கேட்டு ஸ்தம்பித்து உட்கார்ந்திருந்த இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டனர்.

சுந்தரமூர்த்தியின் நண்பர் பேசத் தொடங்கினார். அவருடைய குரலில் ஒருவித அநுதாபமும் இரக்கமும் தொனித்தன. அதோடு பெரியவரிடம் ஒருவித மதிப்பும் தோன்றியது.

"சுவாமி, தங்களுடைய நிலைமையை நாங்கள் அறிந்துகொண்டோம். நாங்கள் முதலில் பேசிய விதம் தங்களுக்கு ஏதேனும் வருத்தத்தைக் கொடுத்திருக்குமாயின் அதற்காகத் தங்கள் மன்னிப்பைக் கோருகிறோம். தங்களை அடிமைப்படுத்தவோ, தங்களுடைய அற்புதமான சக்தியை விலைக்கு வாங்கிவிடவோ எங்களுக்கு நோக்கமில்லை. தங்களுடைய சக்தியை வீணாக்காமல், எல்லோரும் அநுபவிக்கச் சந்தர்ப்பம் அளிக்க வேண்டும் என்றுதான் நாங்கள் விரும்புகிறோம். அதற்காக..."

"போதும், போதும். நிறுத்துங்கள்....."

"சுவாமி, பொறுத்தருள வேண்டும். நான் சொல்ல வந்தது என்னவென்றால், தங்களுக்கு நாங்கள் ஒரு சேவை செய்கிறோம். தங்களுடைய அருமை மகளைக் கண்டு பிடிக்க...."

"என்ன! என்ன! என் கண்மணியையா!.."

அவருடைய குரலில் தொனித்த ஆர்வமும் ஆவலும் அவர்களைத் திடுக்கிடச் செய்தன.

மறுபடியும் சற்று நிதானமாகப் பேசலானார்.

"ஐயா, என் மகளையா நீங்கள் கண்டுபிடிக்க முடியும்? கேலி செய்கிறீர்களா? அல்லது....."

"சுவாமீ, சுவாமீ, அவ்விதம் நினைக்காதீர்கள்; நாங்கள் நிச்சயமாகக் கண்டுபிடித்துத் தருகிறோம்" என்று இருவரும் ஏககாலத்தில் கூவினார்கள்.

பெரியவர் சற்று யோசிக்கலானார். பிறகு, "எவ்வளவு காலத்தில் கண்டுபிடிப்பீர்கள்?" என்று கேட்டார்.

"நாளைக்கே அங்கங்கே ஆள் அனுப்புகிறோம். நீங்கள் முழு விவரத்தை மட்டும் தெரிவியுங்கள். இன்னும் இரண்டு மாதத்துக்குள் கண்டிப்பாக, உயி

ருடன் இருந்தால், தங்களிடம் கொண்டுவந்து சேர்ப்பிக்கிறோம்."

"அதற்காக நான் தங்களுக்கு என்ன செய்யவேண்டும்?"

"ஒன்றும் இல்லை, நாங்கள் ஒரு படம் பிடிக்கப் போகிறோம். அதற்குத் தங்களுக்கு ஒரு வேஷம் தருகிறோம். நீங்கள் ஒன்றும் கவலைப்பட வேண்டாம். நாங்கள் பார்த்துக்கொள்கிறோம். உங்களுக்குச் சொற்ப வேலைதான். இரண்டு பாட்டுப் பாடினால் போதும்—"

"எப்போது போக வேண்டும்?"

"இப்பொழுதே. உங்களுக்குச் சகல சௌகரியமும் நாங்கள் செய்து வைக்கிறோம். வாருங்கள் வண்டிக்கு!"

## 2

சித்திர கலா படத்தாரின் சகுந்தலா வெகு துரிதமாகத் தயாரிக்கப்பட்டு வந்தது. அதுவும் கண்வ மகரிஷி பாத்திரத்துக்காக ஊரூராகத் தேடி, சொந்தக்காரர் ஸ்ரீமான் சுந்தரமூர்த்தி மிகவும் தகுதியான ஓர் ஆசாமியைக் கொண்டுவந்திருக்கிறார் என்ற செய்தி ஸ்டுடியோவுக்குள் மிகுந்த பரபரப்பை உண்டாக்கிற்று. தினசரி மாலையில் கேட்கும் அவருடைய குரலின் இனிமையை மெச்சாதார் யாரும் இல்லை.

ஒரு வாரத்துக்குள் பெரியவர் ராமதாசர் (அந்தப் பெயராலேயேதான் தம்மை அழைக்கவேண்டும் என்று அவர் கேட்டுக்கொண்டார்.) ஒத்திகைக்குத் தயாராகி விட்டார்.

அன்றைத்தினம் முதல் ஒத்திகை. சினிமா வழக்கப்படி முக்கியமான பாகங்களைத்தான் அன்று ஒத்திகை பார்ப்பதாக இருந்தது. அன்றியும் அதுதானே

ராமதாசர் நடிக்கும் முதல் தடவை? அவருடைய நடிப்புத் திறனைப் பரீக்ஷை பார்ப்பதுபோல் ஏற்பாடு செய்திருந்தார்கள்.

அதாவது, கடைசியாகக் கணவனால் மறந்து விடப்பட்ட சகுந்தலையை, மகரிஷி சிஷ்யர்களுடன் அஸ்தினாபுரி அனுப்பி வைக்கும் கட்டம்.

சகுந்தலை வேஷம் தரித்த ஸ்ரீமதி சுசீலாதேவியும் பாட்டில் மிகவும் பிரக்கியாதி அடைந்தவள். அதனால் இந்தக் காட்சியின் ஒத்திகை என்றதும் எங்கும் ஒரே பரபரப்பு ஏற்பட்டிருந்தது.

இதில் முக்கியமாக இரண்டு பக்கத்தில் ஆவல் கொண்டவர் ஸ்ரீமான் சுந்தரமூர்த்திதான். ஏனெனில் ஸ்ரீமதி சுசீலாதேவி அவருடைய மனைவி. மனைவியின் பாட்டில் அவருக்கு மிகவும் பெருமை. அது வீண் பெருமையல்ல என்பதைச் சுசீலாதேவியின் கானத்தைக் கேட்டவர்கள் ஒப்புக்கொள்வார்கள். ஆனால் அவளுடைய சாமர்த்தியம் ராமதாசரின் தேவகானத்தின் முன் நிற்குமா என்பது சந்தேகத்துக்கு இடமான விஷயந்தான். எப்படி இருந்தபோதிலும் அந்தப் பெருமையும் அவருக்குத்தானே? ராமதாசரைக் கண்டு பிடித்ததும் அவர்தாமே?

ஒத்திகை நடப்பதற்குச் சில மணி சாவகாசத்துக்கு முன்னால், ஸ்ரீமான் சுந்தரமூர்த்தி தம் மனைவியின் அறைக்குள் நுழைந்தார்.

சுசீலா கண்ணாடி எதிரே நின்று தலையைச் சீவிக் கொண்டிருந்தாள்.

"என்ன சுசீ, இன்று ஒத்திகையில் எப்படி நடிக்கப் போகிறாய்?" என்று புன்முறுவலுடன் கேட்டுக் கொண்டே நாற்காலியில் அமர்ந்தார் சுந்தரமூர்த்தி. சற்றுத் திரும்பி, கேலியான பார்வையுடன் அவளை

நோக்கிக்கொண்டே, "நீங்கள் தாம் என்னைத் தோற்கடிக் கக்கூடிய ஆளாகக் கொண்டுவந்திருக்கிறீர்களாமே?" என்றாள்.

"இல்லை சுசி, உண்மையிலேயே அவருடைய சாரீரம் ரொம்ப அற்புதம். ஆனால்.."

"ஆனால் என்ன?"

"உங்கள் இருவரில் யார் மிஞ்சுவார்கள் என்று சொல்வது சற்றுச் சிரமந்தான். இன்று பார்த்துத் தான் தெரியும்."

"அவ்வளவு அருமையாக இருக்கிறதா?"

"நீயே பாரேன்!"

சுசீலாவின் முகம் மெதுவாக மாறுதல் அடைந்தது. தலையைச் செருகிக்கொண்டே வெளியே பார்த்தாள். அவள் முகத்திலே ஒரு மேகத்திரை பரவியது போன்று தோன்றிற்று. அவளுடைய கண்கள் நீர் துளித்தன.

உடனே, திடுக்கிட்டவராய்க் கேட்டார் சுந்தர மூர்த்தி: "என்ன சுசீலா, என்ன உனக்கு? எதைப் பற்றி நினைத்தாய்? என்னிடம் சொல்லக் கூடாதா? இப்படி அடிக்கடி உன்னைப் பார்த்திருக்கிறேன். இது வரையில் உன்னைக் கேட்கத் துணியவில்லை. உன் மனத்தி லுள்ள பாரம் என்ன? என்னிடம் சொல்லக்கூடாதா?"

அவருடைய குரலின் உருக்கத்தினால் தாக்கப்பட்ட வள்போல் அவளுடைய கண்களிலிருந்து நீர் பெருகியது.

சற்று நிதானித்துக்கொண்டு, "ஒன்றும் இல்லை, என்னை ஒன்றும் கேட்காதீர்கள்" என்று உடைந்த வார்த்தைகளில் சொல்லிவிட்டு அறையை விட்டுப் போய் விட்டாள்.

ஒத்திகை நடக்கிறது.

சகுந்தலை பிதாவிடம் விடைபெற்றுக் கொள்கிருள். முனிவரர் வழக்கப்படி புத்திமதிகள் சொல்லுகிருர். சகுந்தலை திரும்புகிருள். பிதாவின் கண்களில் நீர் ததும்புகிறது. "ஐயோ, மகளே! உன்னை இனி எப்போது காண்பேன்." அந்த இடத்தில் காளிதாசனுடைய சுலோகமொன்றை எடுத்து ராமதாசர் ராகமாலிகையில் பாடுகிருர். அவர் பாடிய உருக்கத்தைக் கண்டு எல்லோரும் அப்படியே ஸ்தம்பித்து நிற்கிருர்கள். கீதம் ஸ்வரத்தில் ஏறிக்கொண்டே போகிறது. முகாரி ராகம். கற்சிலைகள் நிறைந்த ஒரு மண்டபம்போல் தோன்றுகிறது அந்த இடம். ராமதாசர் தம்மை மறந்தார். ஸ்வரம் உச்ச ஸ்தாயியை அடைந்துவிட்டது. அவர் முகம் சிவந்து, நரம்புகள் புடைத்துவிட்டனபோல் இருந்தன.

அவர் தாம் நடிப்பதையே மறந்துவிட்டார். ஒரே நினைவு, ஒரே ஞாபகம், அதே சோகம். "ஐயோ மகளே!"

அப்படியே அடியற்ற மரம்போல் கீழே சாய்ந்தார்.

எல்லோரும் அவரைச் சூழ்ந்துகொண்டனர்.

சுசீலா தேவி தன்னையும் மறந்து, "ஐயோ, அப்பா!" என்று அவர் முகத்தை நெருங்கினுள்.

"எனக்குத் தெரியும்—என் சீதாதான்—அந்தக் குரல்—பார்ப்பேனென்று தெரியும்—கண்ணே! கிட்ட வா—" என்று பெரியவருடைய வாய் குழறிற்று. அவர் கண்கள் மூடின.

"ஐயோ என் தந்தையே! தெரியவில்லை!—முகத்தில் அந்த மச்சம்!"

அப்படியே அவருடைய முகத்தின்மேல் சாய்ந்தாள்.

பிரமித்துப்போய் நின்றுர் சுந்தரமூர்த்தி. சில விநாடிகள் கழிந்தன. அவருடைய மூளை ஒன்றை

ஒன்று சேர்க்கத் தொடங்கியது. பம்பாயில் அவர் சுசிலாவைக் கண்டது, அவளுடைய தாய்தந்தையரைப் பற்றித் தெரியாதது—அடிக்கடி துக்கம் தோய்ந்த அவளுடைய நினைவுகள்—எல்லாம் புரிந்துவிட்டன அவருக்கு.

எல்லாவற்றையும் மறந்து நின்றார். அவருடைய கண்களிலும் நீர் ததும்பியது.

# மோகினி

## 1

அந்தத் தெருவில் அதற்கு முன்னால் நான் போனதில்லை. சாயங்காலம்; அஸ்தமன சமயம்.

அந்த நெருக்கமான தெருவில் குச்சும் குடிசைகளும் நிறைந்திருந்தன. ஒரு நாய் என்னுடைய வெள்ளை வேஷ்டியைக் கண்டோ என்னவோ குரைத்துக் கொண்டே ஓடி வந்தது. நான் வேகமாக நடந்தேன். எனக்கு நாயென்றால் பயம்.

சற்றுத் தூரம் சென்றதும் வெற்றிலை போடலாம் என்று சட்டைப் பையில் கையை வைத்தபோதுதான் புகையிலை இல்லை என்று தெரிந்தது. பக்கத்தில் ரோடு ஓரமாக ஒரு வெற்றிலை பாக்குக் கடை இருந்தது. அதன் ஓரமாகப் போனேன். கடையில் ஒரே கும்பலாக இருந்தது. அதனால் சற்று ஒதுங்கி நின்றேன்.

அப்போதுதான் எதிர்ப்புறம் இருந்த அந்த வீட்டைக் கவனித்தேன். பெரிய மாடிவீடு. அந்தத் தெருவிலேயே அது ஒன்றுதான் மாடிவீடு என்று தோன்றிற்று.

நான் யதேச்சையாக நிமிர்ந்தேன். மாடியில் நின்றிருந்தாள் அவள். பளிச்சிட்டு மின்னும் ஒரு மின் வெட்டைப்போல் தோன்றிற்று. என் உடல் குலுங்கிற்று.

பூத்துக் குலுங்கும் பூங்கொடிபோல், மெலிந்து நெகிழும் ஒய்யாரமான உருவம்.

நான் ஸ்தம்பித்து நின்றேன்.

அவள் முகச்சாயலிலே ஒரு கவர்ச்சி, அந்த வசீகரத்திலே ஒரு குறும்மை. அவள் கண்களிலே ஒரு பிரகாசம்; அவளுடைய பார்வையிலே ஓர் ஏளனம்.

நான் நெஞ்சைப் பறிகொடுத்துத் தட்டழிந்து நின்றேன்.

அவள் விழியைச் சுழற்றி, உதட்டை லேசாக மடித்து ஒரு குறும்புத்தனமான புன்னகை பூத்தாள்.

என் பிரக்ஞை போய்விட்டது! ஐயோ!....நான் எங்கே இருக்கிறேன்!....

## 2

அந்தப் பெயர் தெரியாத தெருவுக்கு மறுநாள் நான் எப்படி வந்தேன்? அதே இடத்தில் தலையை நிமிர்ந்த வாக்கில் நின்றுகொண் டிருக்கிறேன்.

கடையில் ஆளே இல்லை. கடைக்காரனைக்கூடக் காணவில்லை. தெருவிலும் ஓர் ஆள்கூட இல்லை. அது இரவா, பகலா என்று தெரியவில்லை.

மேலே, மாடியில் ஒருவரும் இல்லை. நான் ஏமாந்து, ஏக்கம் பிடித்து, நிமிர்ந்த தலை குனியாமல் நிற்கிறேன். எனக்கு என்ன பைத்தியமா?........ஏன் அப்படி நிற்கிறேன்?

அவள் எங்கே போனாள்?..அவள் யார்? ஏன் இப்படி என் நெஞ்சை வாட்டுகிறாள்? எதற்காக என்னைப் பார்த்துப் புன்முறுவல் செய்தாள்? அவள் இப்போது எங்கே போனாள்?

அதோ! வந்துவிட்டாள்! மாடியில் இல்லை; கீழே உள்ளிருந்து வருகிறாள். ஆகா! நடையில் என்ன ஒயில்!...இன்னும் என்னைக் கொல்ல வருகிறாளா? நான் என்னையே மறந்தேன்!

வந்துவிட்டாள். அந்த வாசற்படியின்மேல் நெளிந்து சாய்ந்து, ஒய்யாரமாக நிற்கிறாள். அவள் சாயும் அந்த வாசற்படி, மென்மையான அவள் பாதத்தைத் தாங்கும் அந்தப் பூமி எத்தனை பாக்கியம் பண்ணியிருக்கிறது!

அதோ, என்னைப் பார்க்கிறாள்! என் சிந்தனை நின்று விட்டது. அழகாகக் கையை வளைத்து மார்பு வரையில் தூக்கி நான்கு விரல்களால் சைகை செய்கிறாள். என்னை எதற்குக் கூப்பிடுகிறாள்? வீட்டில் யாரும் இருக்கமாட் டார்களா? அவளுக்கு என்ன துணிவு!

நான் ஒன்றும் சிந்திக்கவில்லை. சூத்திரக்கயிற்றினால் இழுக்கப்பட்ட பதுமைபோல் அவளைத் தொடர்ந்து போகிறேன்.

என் உடம்பு பயத்தால் நடுங்குகிறது. காலும் கையும் 'வெட வெட' வென்று ஆடுகின்றன. நான் வரு கிறேனா என்று அவள் திரும்பிப் பார்க்கிறாள். என் னுடைய ஜீவனைச் சுண்டி இழுப்பதுபோல் இருக்கிறது அவள் பார்வை. நான் செயலற்றுப் போய்க்கொண்டே இருக்கிறேன்.

எவ்வளவு நேரம் இந்த மாதிரி, மந்திரவாதியைத் தொடரும் பாம்புபோல் போனேனோ தெரியாது. அவள் நின்றாள். நானும் நின்றேன்.

ஒரே ஜகஜ்ஜோதியான வெளிச்சம்! அங்கே அலங் கரிக்கப்பட்ட ஒரு மஞ்சம்.

"அதில் உட்கார்" என்ற பாவனையில் அவள் விரலைச் சுட்டிக் காண்பிக்கிறாள். என் நெஞ்சும் மார்பும் 'திக் திக்'கென்று அடித்துக்கொள்ளுகின்றன. நான் தயங்கித் தயங்கி நாலு பக்கமும் பார்க்கிறேன். கூர்மை யான அவள் விழிகள் என்னைப் பரிகாசமாகப் பார்க்கின் றன.

அவளுடைய பார்வையை எதிர்த்து நோக்கச் சக்தியற்று நான் தலையைக் கவிழ்ந்து உட்காருகிறேன். என் தேகமெல்லாம் வேர்த்துவிட்டது.

அவள், எதிரில், தூணின்மேல் சாய்ந்துகொண்டு என்னைக் கூர்ந்து கவனிக்கிறாள். நிமிர்ந்து பார்க்கச் சக்தியற்று நான் தரையைப் பார்க்கிறேன். ஆனாலும் அவளுடைய பார்வை என்மேல்தான் இருக்கிறது என்று எனக்கு நிச்சயமாகத் தெரிகிறது.

என் மனத்தில் விவரமற்ற ஒரு பீதி. பேச வேண்டுமென்று நினைக்கிறேன். வார்த்தை எழவில்லை. என் மார்பில் யாரோ ஏறி அமுக்குவது போன்ற உணர்ச்சி ஏற்படுகிறது. என்னால் தாங்க முடியவில்லை!

என்னுடைய தைரியத்தை எல்லாம் வருவித்துக் கொண்டு, எழுந்து 'மடமட'வென்று வெளியே ஓடுகிறேன். பேயினால் விரட்டப்பட்டவன்போல் திரும்பிப் பாராமல் ஓடுகிறேன்.

## 3

என் மனம் ஏன் சதா அவளையே நாடுகிறது? அவளைக் கண்டால் நடுங்குகிறது; காணாத இடத்தில் அவளையே தேடித் தேடி ஓடுகிறது.

என் உள்ளத்தைக் கிளர்ச்சி செய்து பாழ்படுத்திய இன்பமயமான அவள் ரூபம், என் மனத்தில் சதா குடிகொண்டே இருக்கிறது. ஆனால் நேரில் காண நெஞ்சு கூசுகிறது; கண்ணால் நிமிர்ந்து பார்க்கக்கூட ஆண்மையற்ற கோழையாகிவிடுகிறேன். அந்தப் பாபி ஏன் என்னை விடாமல் துரத்துகிறாள்! அந்தச் சண்டாளியிடமிருந்து நான் தப்ப முடியாதா? என்ன புன்சிரிப்பு! என்ன கேலி, கண்களில்! என் உயிரையே தன் விரலில் சுற்றிச் சுருட்டிக்கொண்டுவிடுகிறாளே, கிராதகி!

என்னுடைய தாய் என்னைக் கண்டு இரக்கப் படுகிறாள். எனக்கு உடம்பு 'துரும்பாய்'ப் போய் விட்டதாம்! உடம்பு எப்படித் 'துரும்பாக' முடியும் என்று எனக்குத் தெரியவில்லை. எனக்கு இல்லாத உபசாரங்களெல்லாம் பண்ணுகிறாள். அவளைக் கண்டால் எனக்கு எரிச்சல் வருகிறது. எங்கேயோ பயந்து கொண்டுவிட்டேனாம்! மந்திரிக்க வேண்டுமாம்! என்ன பைத்தியம்! என்னை மந்திரித்துக் காப்பாற்ற வேறு யாரால் முடியும்!

## 4

இடையில் எத்தனை நாள் நரகவேதனை அநுபவித் தேன் என்று எனக்குத் தெரியாது.

அன்று, அதிகாலையில் ஐந்தரை மணி இருக்கும்; வீட்டுத் திண்ணையில் படுத்திருந்தேன்.

திடீரென்று எழுந்து உட்கார்ந்தேன்.

அவள்தான்!

எதிரில் நின்றாள். முகத்தில் அதே கேலிச் சிரிப்பு!

அடி கள்ளி! இங்கே எப்படி வந்தாள்! அவளுக்கு வீட்டில் கேள்வி கேட்பார் இல்லையா? என் வீடு எப்படித் தெரிந்தது அவளுக்கு? இங்கேயும் வந்து விட்டாளே பாபி! என் தாய் பார்த்தால் என்ன சொல்லுவாள்!

அவள் கீழ்ப்பார்வையாகப் பார்த்து விழியை உருட்டினாள். ரோஜா இதழைப் போன்ற அவளுடைய உதடுகள் புன்சிரிப்பால் சற்று விரிந்தன. ஆகா! அந்தப் பல் வரிசையின் அழகுக்கு ஈடு ஏது? கள்ளி! இந்தப் 'பொடி' போட எங்கேயடி கற்றுக்கொண் டாய்!

எனக்கும் துணிவு பிறந்தது. அவளுடைய கையைப் பிடித்து இழுத்து உட்கார்த்தினேன்.

புருவத்தை நெறித்து, 'ஊஹும்!' என்று தலையை அசக்கினாள். ஒற்றை விரலை எடுத்து, உதடுகளின் மேல் பாலமாக வைத்து உருட்டி விழித்தாள்! அந்தக் கவர்ச்சியின் வெறியில் நான் தாவிப் பற்றினேன்! மாயமாய் மறைந்துவிட்டாள், நீலி!

சொப்பனமா? இத்தனையுமா சொப்பனம்!

நானும் அப்படியே தெருவில் தாவிக் குதித்தேன். மூலையில் அப்போதுதான் திரும்பிக்கொண்டிருந்தாள். அப்போது பளிச்சென்று திரும்பிப் பார்த்தாள்—குறத்தி! நான் ஓடினேன். ஆனால் என்னை விட விரைவாக நடந்தாள் அவள். கருநாகம் போல் நீண்டு பளபளவென்று மின்னி மின்னி நெளிந்த அவள் பின்னல் எனக்குச் சவால் விடுவதுபோல இருந்தது.

ஒரே வெறியில் நான் ஓடினேன். விட்டில் பூச்சியைக் கவர்ந்து இழுத்துச் செல்லும் விளக்கொளியைப் போல் அந்தக் 'கொலைகாரி' முன்னால் சரசரவென்று நடந்து கொண்டே இருந்தாள். நான் எவ்வளவு நேரம் ஓடினேனோ, தெரியாது.

## 5

நான் திடுக்கிட்டுத் திரும்பினேன். "என்ன வேணுங்க? ரொம்ப நாழியா நிக்கிறீங்களே" என்ற கடைக்காரனின் குரல் கேட்டது.

தூக்கம் கலைந்தவன் போல் நான் நிமிர்ந்து பார்த்தேன். அஸ்தமிக்கும் சூரியனின் கடைசிக் கிரணங்கள் மாடி வீட்டுக் கண்ணாடி ஜன்னலில் பட்டு, அதைப் பொன்மயமாக்கி விளையாடிக்கொண்டிருந்தன. அந்தப் போதை தெளிய வெகு நேரம் பிடித்தது.

# சொத்துக்கு உடையவன்

## 1

அன்றுதான் சனிக்கிழமை.

பலராமையரின் மனம் அன்று பொழுது விடிந்தது முதல் ஒரு நிலையில் இல்லை. ஒரு வேலையிலும் புத்தி செல்லாமல், மலைத்து மலைத்து நின்றார்.

விடியற்காலை ஐந்து மணிக்கே அவர் வயலில் இருந்திருக்க வேண்டியவர். அன்று 'வெங்கார்' பாய்ச்சிப் புது உழவு உழ வேண்டிய நாள். முதல் நாளே பண்ணைக்காரன் வேலுவிடம், நாலு ஏர் கூட விட்டு அன்றைக்குள் ஒன்றரை ஏக்கருள்ள 'முடுக்குப் பள்ளம்' முழுவதையும் முடித்துவிட வேண்டுமென்று ஏற்பாடு செய்திருந்தார். அது போலவே வேலுவும் விடியற்காலை ஐந்து மணிக்கே வந்து ஐயரை எழுப்பிவிட்டு, "நான் நம்ம பண்ணை ஏர் ரெண்டையும் கட்டிக்கிட்டுப் போறேங்க. நீங்க எந்திருச்சாப்பலே வந்திடுங்க; உங்க தலையைக் கண்டாத்தான் பயலுங்க நெளிஞ்சு குடுப்பானுங்க" என்று அறிவித்து விட்டுப் போனான். ஆனாலும், அன்று அவர் போகவில்லை.

ஐந்து மணிக்கு எழுந்திருந்து விட்டார். சற்று நேரம் படுக்கையில் உட்கார்ந்துகொண்டிருந்தார். மனம் ஏதோ பாரத்தால் அழுந்துவதுபோல், ஒரு விசாரம் ஏற்பட்டதுபோல் தோன்றிற்று. அப்படியே படுத்துக் கொண்டார்; தூங்கவில்லை. அண்ணாந்து பார்த்துக் கொண்டே யோசனையில் ஆழ்ந்தார். ஐந்தரை மணிக்கு வழக்கம்போல் வாசல் கூட்ட வேலைக்காரி வந்தாள். வலது கால்மேல் இடது காலைத் தூக்கிப் போட்டுக் கண் விழித்தபடியே, மேலே அண்ணாந்து பார்த்துக்கொண்டு திண்ணையில் படுத்திருந்த ஐயரைக் கண்டதும் சிறிது

ஆச்சரியப்பட்டுப் போனாள். எப்போதும் அவள் வரும் போது ஐயர் திண்ணையில் படுத்திருப்பதை அவள் பார்த்ததில்லை. வேலை இருந்தாலும் இல்லாவிட்டாலும் பலராமையர் தினம் ஐந்தரை மணிக்குள் எழுந்து வெளியே போய்விடுவார்.

வேலைக்காரி, 'சளார்' என்று சாணம் தெளிக்கும் சத்தம் கேட்டதும் ஐயர் திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தார். அதே சமயத்தில் உள்ளே யிருந்து சிவகாமி அம்மாள் வெளியே வந்தாள். வந்தவள், சட்டென்று சிறிது திடுக்கிட்டவளைப்போல் நின்று, "இன்னும் எழுந்திருக்க வில்லையா, என்ன? ஏன் இப்படித் தூக்கம் இன்னிக்கி? விடியற்காலம் நாலு மணிக்கே வயலுக்குப் போகணும்னு சொன்னிய....?" என்றாள்.

பலராமையர் முதலில் ஒன்றும் சொல்லவில்லை. வாசற்பக்கம் திரும்பிப் பார்த்துக்கொண் டிருந்தார். பிறகு இரண்டு நிமிஷம் கழித்துத் திடீரென்று அப்போதுதான் தம் மனைவி வந்ததை உணர்ந்தவர்போல், "ஒன்றும் இல்லை; என்னவோ தூங்கிப் போய்விட்டேன்" என்றார். அவருடைய குரலின் மெதுவான சுரம் அவருடைய மனம் எங்கேயோ யோசனையில் லயித்திருந்ததைக் காட்டிற்று.

அவருடைய பதில் முழுவதும் சிவகாமி அம்மாளின் காதில் விழவில்லை. "சரியாப் போகிறது! எப்போ வந்து இன்னமே கறவை மாட்டை ஓட்டிண்டு போறது? அதை இப்படிக் காயப் போட்டா, பால் எங்கேயிருந்து கறக்கும்?" என்று எருமை மாட்டை மேய்ச்சலுக்கு ஓட்டிக்கொண்டு போகும் மாட்டுக்காரப் பையன் வராமையைக் குறித்துக் கோபித்துக்கொண்டே உள்ளே போய்விட்டாள்.

பலராமையர் படுக்கையைச் சுற்றி வைத்துவிட்டு வாசற்பக்கம் போனார். மணி ஆறு ஆகியிருந்தது. தெரு

வில் 'சளபுளா, சளபுளா' என்று சாணம் தெளிக்கும் சத்தம் ஏகமாகக் கேட்டது. மேலைத் தெருக் கணபதி ஐயர் மனைவி சம்பூர்ணம். அடுத்த வீட்டு வேலைக்காரி தன் வீட்டு வாசலில் ஆக்கிரமித்துக் குப்பையைத் தள்ளுவது பற்றிய தனது நித்தியப்படி பல்லவிகளில் ஒன்றை முடித்துக்கொண்டிருந்தாள்.

"ஏ வள்ளி! மூதேவி! எத்தனை தரம் சொல்றது உனக்கு? கையில் கட்டை முளைக்க!"

உச்சஸ்தாயியில் கூறப்பட்ட இந்த ஆசீர்வாதம் பலராமையரின் காதில் விழவே இல்லை. அவர் மேலைத் தெருவைக் கடந்து தென்னந்தோப்புக்குள் நுழைந்தார்.

உற்சாகமாகத் தில்லானா பாடிக்கொண்டு மரமேறிகள் சுறுசுறுப்புடன் தென்ன மரங்களில் ஏறி ஏறி இறங்கிக்கொண்டிருந்தனர். ஒருவன் ஏறும்போது மற்றொருவன் இறங்குவதும், ஒருவன் இறங்கும்போது வேறொருவன் ஏறுவதும் நூல் கயிற்றில் ஏறி ஏறி இறங்கும் பழைய காலத்து வேடிக்கைப் பொம்மையைப் போல் இருந்தன. ஆனால் அந்த மரமேறிகள் மரத்தின் உச்சியிலிருந்து, 'லொட்டு லொட்' டென்று தட்டும் சத்தம் வேதனையாக இருந்தது.

பலராமையர் வீடு திரும்பும்போது மணி ஏழாகி விட்டது. வந்தவர் நேராக வீட்டுக்குள்ளே போகாமல் திண்ணையிலேயே குறட்டில் காலைத் தொங்க விட்டுக் கொண்டு உட்கார்ந்தார்.

சமாதி நிலையைப்போல் அசைவற்று உட்கார்ந்திருந்த அவருடைய மௌனத்தை முதலில் கலைத்தவன் வேலு. "என்னங்க, நம்ப மயிலைக்காளை நொண்டிச்சு. கால் ரொம்பப் புண்ணாயிடுச்சு. இரண்டு சுத்துக்கூட வரல்லே. அதனாலே மொத்தம் அஞ்சு ஏருதான் விட்டேன். பள்ளப் பயகூட ஏதோ வவுத்தை வலிக்கு

துன்னு சொன்னான்; நேத்திக்கெல்லாம் குடிச்சுப்புட்டுக் கெடந்திருக்கான். நீங்க வந்திருந்தாக் கொஞ்சம் ஒழுங்கா வேலை செஞ்சிருப்பான். இப்போ இன்னும் உளவு பாக்கியிருக்குங்க" என்றான் அவன்.

பலராமையருக்குச் சற்று உணர்வு வந்தது. "அப்போ எத்தனை பாக்கி இருக்கு?" என்றார் மெதுவாக.

"இன்னும் மேலத்தனை பூரா இருக்குங்க" என்றான் வேலு.

அப்போது, "என்ன, இப்படி இன்னிக்கி? காப்பி சாப்பிடக்கூட இல்லாதே—?" என்று கேட்டுக் கொண்டே உள்ளிருந்து வந்த சிவகாமி அம்மாள் வேலுவைக் கண்டதும், "ஏண்டாப்பா, வேலு, இந்த மாட்டுக்காரப் பயல் என்ன இப்படி அக்கிரமம் பண்ணுறான்? பத்து மணிக்கு வந்து கறவை மாட்டை ஓட்டிக்கிண்டு போனால், அது பால் என்னமாக் கறக்கும்? காலை வேளையிலே சித்தெ காலாறப் போனாத்தானே தேவலே?" என்று பிரச்னையைத் திருப்பினாள்.

ஒன்றையும் கவனியாதவரைப்போல் இருந்த ஐயர் எழுந்து உள்ளே போனார். கூடத்தில் தொங்கிய ஊஞ்சல் பலகையில் போய் உட்கார்ந்தார். ஆனால் அதை ஆட்டவில்லை.

வேலைக்காரியை ஏதோ அதிகாரம் பண்ணிக் கொண்டே உள்ளே நுழைந்த சிவகாமி, "இதோ காப்பி கொண்டு வறேன்" என்று சொல்லிக்கொண்டே சமையலறைப் பக்கம் போனாள்.

அப்போது பின்புறமிருந்து ஊஞ்சல் திடீரென்று எதிர்பாராத விதமாகத் தள்ளப்படவே, 'சடக்' கென்று முன்னேக்கி நொடித்தார் பலராமையர். ஆனால் சமாளித்துக்கொண்டு சட்டென்று திரும்பிப் பார்த்தார். குழந்தை குஞ்சு நின்றுகொண்டிருந்தாள். அவருடைய

முகத்தில் தோன்றிய குழப்பத்தைக் கண்டு, கையைக் கொட்டிக்கொண்டு மடமடவென்று சிரித்தாள்.

"ஐய! தாத்தா மொட்டை மண்டை ஒடையணும்!" என்று ராகம் போட்டுச் சொன்னாள்.

எதிரில் வினையே அறியாது குதூகலித்து விஷமமே உருவாக நின்று கலகலப்புடன் குதிக்கும் அந்தச் சின்னக் குழந்தையைக் கண்ட ஐயரின் மனத்தில் கொஞ்சம் பாசி விலகித் தெளிவு ஏற்படுவது போன்று ஒரு நிமிஷம் இருந்தது. ஆனால் மறு நிமிஷமே அவருடைய முகத்தில் சாயை கவிழ்ந்துகொண்டு விட்டது. அவருடைய முக மாறுதலை அந்தக் குழந்தை சுயமாகவே உணர்ந்துகொண்டதுபோல், தன்னுடைய விளையாட்டைச் சட்டென்று நிறுத்திவிட்டது. அதன் புருவங்கள் நெறிந்து சின்ன முகமும் சுருங்கிற்று.

ஐயர் அப்படியே தாவிக் குழந்தையை வாரி எடுத்து அணைத்துக்கொண்டார். குழந்தை ஒன்றும் பேசவில்லை. தாத்தாவின் முகத்தையே குறிப்பாக உம்மென்று உற்றுப் பார்த்தது.

"என்னடி, ராஜாத்தி! குஞ்சுக் கண்ணுக்கு என்ன வேணும்? எங்க பட்டு ராணி ஏன் கோவிச்சுண்டுது?" என்று கொஞ்சினார் பலராமையர்.

முகத்தைத் திருப்பாமலே குஞ்சு, "ஒன் மொட்டை மண்டையை ஒடைக்கணும்!" என்று சொல்லிக் கொண்டே அவருடைய முதுகில் ஓங்கி ஓங்கிக் குத்திற்று.

"ஐயோ, என்னைக் கொல்லாதயேன்!" என்று ராகம் போட்டு இழுத்துச் சொன்னார் ஐயர்.

"நன்னாப் போயேன்!" என்றது குழந்தையும், அதே ராகத்தில்.

அப்போது காபி டம்ளருடன் சமையலறையி லிருந்து வெளிப்பட்ட சிவகாமி இந்தப் பரஸ்பரக் கொஞ் சல்களைக் கண்டதும், அப்படியே கையில் கொண்டு வந்த டம்ளரைக் கீழே வைத்துவிட்டு, "இங்கே ஓடி வாடி சனியனே, தலையை வாரி மொடயறேன். இப்படிச் சொன்ன வார்த்தை கேட்காதே அலையறயே" என்றாள்.

குஞ்சுவும், "இப்படிச் சொன்ன வார்த்தை-ஏ-ஏ!" என்று பாட்டிக்குச் சரியாக வாயைக் கோணிக்கொண்டு, கழுத்தை நீட்டிப் பரிகாசம் பண்ணினாள்.

"குழந்தையை ஏண்டி வையறே? இன்னம் கொஞ்ச நாழி..." என்றார் ஐயர். அவர் வார்த்தைகளை முடிக்க வில்லை. அவருடைய கண்கள் கலங்கின. குழந்தையைக் கீழே விட்டார்.

"தாத்தாவுக்கும் பாட்டிக்கும் சண்டை" என்று தன்னுடைய சொந்தமான ராகத்தில் பாடிக்கொண்டே அது வெளியே ஓடிற்று.

"எதுக்குச் சொல்றய?" என்று கேட்ட சிவகாமி, உடனே தெரிந்துகொண்டவளாக, "ஓகோ? இன்னிக் கித்தானே சனிக்கிழமை? இன்னிக்கித்தானே வறேன்னு எழுதியிருந்தான்?" என்று சொல்லும்போது தொனி சற்று இறங்கித்தான் இருந்தது. அவளுடைய முகத்தி லும் விசாரம் தோன்றிப் படர்ந்தது.

## 2

குஞ்சு பலராமையரின் பெண் வயிற்றுக் குழந்தை. தங்கம் அவருடைய ஒரே பெண். அவருக்கு வேறு ஆண் குழந்தை இல்லை. அதனால் பெண்ணை மிகவும் செல்வமாக வளர்த்ததில் ஆச்சரியம் என்ன?

அவருடைய மனம்போலவே அவருக்கு மாப்பிள்ளை யும் வாய்த்தான். கல்கத்தாவில் 'போர்ட் டிரஸ்டி'ல்

உத்தியோகம் மாப்பிள்ளைக்கு. கல்யாணம் ஆகி ஆறு மாதத்துக்குள்ளாகவே தங்கத்தை அழைத்துக்கொண்டு போய்விட்டான்.

ஐயர் முதலில் சற்று யோசித்தார், தனியாகப் பெண்ணை அவ்வளவு தூரம் அனுப்ப. ஆனாலும் பெண் சற்றுத் தைரியமாக இருந்ததால் கொஞ்சம் ஆறுதல் அடைந்தார்.

கல்கத்தா போனவுடன் வாரத்துக்கு ஒரு கடிதம் எழுதினாள் தங்கம். "என்னிடம் ரொம்பப் பிரியமா இருக்கா; என்னைக் காரியமே செய்யப்படாது என்கிறா" என்று அவள் எழுதும் கடிதங்களைப் படிக்கும் போதெல்லாம் ஐயர் உள்ளம் பூரித்துப் போவார். தமக்கு நிகர் இனி இந்த உலகத்தில் யாரும் இல்லை என்று இறுமாப்படைந்திருந்தார்.

கல்கத்தா போய் ஒரு வருஷத்துக்குப் பிறகு தங்கம் பிரசவத்திற்காகத் திரும்பி வந்தாள். மாப்பிள்ளைதான் அவளை அழைத்துக்கொண்டு வந்தான். பெண்ணும் மாப்பிள்ளையுமாய் வண்டியில் வந்து இறங்கும்போது, அவர்களைப் பார்த்த பார்வையில் அவருடைய ஆனந்தத்திற்கு அளவே இல்லை என்று தோன்றிற்று. அன்று வீட்டில் ஏக தடபுடல். தமது நாற்பத்தைந்து வயசையும் மதியாது ஐயர் குதித்துக் குதித்து ஓடினார். வயலில் வேலை செய்யும் பண்ணையாட்களிடம், "ஏண்டா கறுப்பா, நம்ம மாப்பிள்ளை ஐயரைப் பார்த்தியாடா? கல்கத்தாவிலே இருக்காரு; சர்க்கார் வேலை. மாசம் இருநூத்தைம்பது ரூபாய் சம்பளம்" என்பார். அவருடைய சந்தோஷத்தில் அவருக்கு என்ன செய்வதென்று தோன்றவில்லை.

அவருடைய சந்தோஷத்தைக் கண்டு யாரோ திருஷ்டி வைத்துவிட்டார்கள் என்றுதான் சொல்ல

வேண்டும். இல்லாவிட்டால் இப்படி இடி விழுந்த மாதிரி துக்கம் ஏற்பட முடியுமா?

குஞ்சுவைப் பிரசவித்த முப்பதாம் நாள் தங்கம் அவளைத் தன் தந்தையிடம் சுமத்திவிட்டுப் பிரிந்தாள். பத்து நாள் வரையில் ஒன்றும் இல்லை. இராப்பகலாய்க் கண் விழித்துக் கவலையுடன் காத்திருந்த ஐயர் சுகப் பிரசவம் என்று கேள்விப்பட்டதும் சற்று நிம்மதி அடைந்தார். ஆனால் பத்தாவது நாள் கொஞ்சம் ஜுரம் அடித்தது. உடனே டாக்டர் வந்தார். வழக்கம் போல், "அது ஒன்றும் இல்லை; ஜலதோஷம். இந்த மருந்தை இரண்டு வேளை சாப்பிட்டால் சரியாகப் போய்விடும்" என்றார். ஆனால் சரியாகப் போகவில்லை. ஜுரம் அதிகரித்தது; பத்து நாளில் ஜன்னி கண்டு விட்டது. எத்தனை டாக்டர் வந்துதான் என்ன பண்ணுவது? ஒன்றும் பிரயோஜனம் இல்லை. ஜுரம் கண்ட இருபத்தோராவது நாள் தங்கம் தன் குழந்தை, ஐயர், தன்னுடைய புருஷன் எல்லாரையும் மறந்து கண்ணை மூடிக்கொண்டு போய்விட்டாள்.

தலையில் அடித்துக்கொண்டார் ஐயர்; "இதற்காடி பாவி உன்னைப் பெத்து வளர்த்தேன்! கண்காணாத போனியே! என் காலின் கீழேதான் வந்து பிராணனை விடணும்னு வந்தியாடி!" என்று என்ன என்னவோ சொல்லிக் கதறினார்.

அன்றிலிருந்து ஆறு மாதம் வரையில் ஐயர் எழுந்திருக்கவில்லை. பெண்ணைத் தொடர்ந்து தகப்பனாரும் போய்விடுவாரோ என்று எல்லோரும் நினைத்தனர். அன்ன ஆகாரம் இல்லை. எப்போதும் பித்துப் பிடித்த மாதிரி உட்கார்ந்திருப்பார்; யாராவது கூப்பிட்டால் கூடப் பேசுவதில்லை.

இப்படியாக ஒரு வருஷம் கழிந்தது. வரவர ஐயர் கொஞ்சம் ஆறுதல் அடையலானார். அந்தக் குழந்தை

யின் முகத்தைப் பார்க்கும்பொழுதெல்லாம் அவருக்குப் பழைய ஞாபகம் வந்துவிடும். அப்படியே மலைத்து நின்று விடுவார்.

நாளடைவில் அவருடைய கவனமெல்லாம் குழந்தையிடம் திரும்பியது. "என் கண்ணு, குஞ்சம்மா!" என்று அதோடு ஓயாமல் கொஞ்சுவார். அந்தக் குழந்தை தங்கத்தின் சாயலாகவே இருந்தது.

அவருக்குத் தங்கத்தினிடம் இருந்த பிரியமெல்லாம் குஞ்சுவினிடம் மாறியது. அந்தக் குழந்தையை மிகவும் செல்வமாக வளர்த்தார். அது என்ன கேட்டாலும் வாங்கிக் கொடுத்துவிடுவார். அது துளிகூட முகத்தைச் சிணுங்கக் கூடாது. கொஞ்சம் முனகல் கேட்டாலும், "என்னடி இது! குழந்தை என்ன கேட்கிறதோ அதை முதலில் கொடு" என்று மனைவியை அதிகாரம் பண்ணுவார்.

வெளி வேலையாய்ப் போய்விட்டு வந்ததும் ஒரு தடவை குழந்தையை வைத்துக்கொண்டு கொஞ்சிவிட்டுத்தான் வேறு வேலை பார்ப்பார் அவர். வரும் சமயத்தில் அது வெளியில் போயிருந்தால்கூடப் பண்ணைக் காரனை விட்டு எங்கே இருந்தாலும் தேடி அழைத்துக் கொண்டு வரச் சொல்லுவார்.

தங்கம் இறந்து போய் ஆறு மாதம் கழித்து, அவளுடைய புருஷன் ஒரே ஒரு தடவை அங்கே வந்திருந்தான். அப்போது அவர் மாப்பிள்ளையைக் கட்டிக் கொண்டு அழுத அழுகை!

அவனும் உடம்பு இளைத்து, முகம் தேய்ந்து போய்க் கேவலமாகக் காணப்பட்டான். அவனும் துக்கப் படுகிறான் என்பதை உணர்ந்துகொண்ட ஐயருக்குச் சற்று ஆறுதலாய் இருந்தது.

அதன் பின் அடிக்கடி மாப்பிள்ளையிடமிருந்து அவருக்குக் கடிதம் வந்தது. ஒரு கடிதத்திலாவது,

"குஞ்சு சௌக்கியமா? குஞ்சு விளையாடுகிறாளா?" என்று அவன் விசாரிக்காமல் இருந்ததில்லை.

ஒரு வருஷத்துக்குப் பின் அவனிடமிருந்து அடிக்கடி கடிதம் வருவதில்லை; மாதத்திற்கு ஒரு தடவை வரும். அப்போது ஒரு கடிதத்தில், தான் மறு கல்யாணம் செய்துகொள்ளலாம் என்று தீர்மானித்திருப்பதாக எழுதியிருந்ததைக் கண்ட ஐயர் மனத்தில் பல தரப்பட்ட உணர்ச்சிகள் தோன்றின.

ஆனால் அவரே முன்பு ஒரு கடிதத்தில் இதைக் குறித்துச் சிபாரிசு செய்து எழுதியிருந்தார்: "இப்படியே எத்தனை நாளைக்கு இருக்க முடியும்? உனக்கென்ன வயசாச்சா? எங்கேயாவது நல்ல இடமாகப் பார்த்துப் பண்ணிக்கொள். நான் வேண்டுமானாலும் பெண் பார்க்கிறேன்" என்று. ஆனாலும் இப்போது அவனுடைய கடிதத்தைக் கண்டதும் அவருடைய மனத்துக்கு என்னவோபோல் இருந்தது.

மாப்பிள்ளை மறு கல்யாணம் பண்ணிக்கொண்டு விட்டான் என்ற செய்தியும் கடைசியில் கிடைத்தது. அதற்கு அப்புறம் அவருக்கு மாப்பிள்ளையிடமிருந்து கடிதம் வருவது அபூர்வமாகப் போயிற்று.

இரண்டு, மூன்று, நாலு வருஷமாயின. பலராமையர் எல்லாவற்றையும் மறந்துவிட்டார். குழந்தை குஞ்சு தான் அவருடைய முழு உலகமும்.

## 3

இப்படி இருக்கையில்தான் அந்தக் கடிதம் வந்தது. மாப்பிள்ளை—(பெண் இறந்து போய் வேறு கல்யாணம் பண்ணிக்கொண்டுவிட்ட பின்கூட மாப்பிள்ளை உறவு உண்டா?)—எழுதியிருந்தான்.

குழந்தை குஞ்சுவுக்குப் படிப்புக் கெட்டுப் போகிற தாம். அவளைக் கல்கத்தாவுக்கு அழைத்துக்கொண்டு போக வேண்டுமாம். இத்தனை நாளாய்க் குஞ்சு இல்லையோ? ஐந்து வருஷமாய் ஒரு கார்டுகூடக் காணுமே?

அவருக்கு அந்தக் கடிதத்தின் அர்த்தமே விளங்கவில்லை.

குஞ்சுவை அனுப்பிவிட்டு அவர் என்ன பண்ணுவது? படிப்பு எதற்கு? இங்கே படிக்கப்படாதோ? இத்தனை நாளாய், ஐந்து வருஷமாய் அவளுக்கு வேண்டியதைச் செய்த இடத்தில் படிப்புச் சொல்லிக் கொடுக்கமாட்டார்களா?

இப்படி என்ன என்னவோ எண்ணினார் ஐயர்.

இங்கே படிப்புச் சொல்லிக்கொடுப்பதாகப் பதில் எழுதினார். ஆனால் மாப்பிள்ளை, "அங்கே, பட்டிக்காட்டில் இருப்பதைவிடக் கல்கத்தாவில் இருப்பதுதான் தேவலை. ஆகையினால் இன்னும் ஒரு வாரத்தில் புறப்பட்டு வருகிறேன்" என்று தீர்மானமாக எழுதிவிட்டான்.

பலராமையருக்குக் கோபம் வந்தது. மாப்பிள்ளையின் பிடிவாதம் அவருக்கு அர்த்தமாகவே இல்லை. அந்தக் கடிதம் வந்தது முதல் அவருடைய கலகலப்பெல்லாம் எங்கேயோ போய்விட்டது.

## 4

அன்று மணி எட்டாயிற்று. பதினொரு மணிக்குத்தான் மாப்பிள்ளை வரவேண்டியது.

மணி ஆக ஆகப் பலராமையரின் மனம் தவிக்க ஆரம்பித்தது. என்ன என்னவோ எண்ணினார்.

ஆனால் மனம் ஓர் இடத்தில் லயித்தால்தானே?' சொல்ல முடியாத ஒரு பரபரப்பு, வேதனை.

வாசலிலிருந்து உள்ளே வந்தார். பிறகு நேராகக் கொல்லைப்புறம் போனார். அப்படியே வயலுக்குப் போய்விடலாமென்று நினைத்தார். கொஞ்ச தூரம் கூடப் போனார். ஆனால் உடனே எதையோ வைத்து மறந்து விட்டவர் போலத் திரும்பினார்.

மணி ஒன்பது ஆயிற்று.

சிவகாமி அம்மாள் குழந்தைக்குத் தலையை வாரிப் பின்னி, அலங்காரம் பண்ணிக்கொண் டிருந்தாள்.

"அசக்காதேம்மா! என் தங்கம் இன்னிக்கி ஊருக்குப் போகப் போகிறது. அப்பா வரப்போறு" என்று அதைக் கொஞ்சித் தாஜா பண்ணித் தலை வாரிக் கொண்டிருந்தாள்.

"போடி! நான் ஊருக்குப் போகல்லே! இங்கே தான் இருப்பேன்" என்று சிணுங்கிற்று குழந்தை. ஆனால் உடனேயே, "தாத்தா வருவாளோன்னோ பாட்டி?" என்று கேட்டது.

அப்போதுதான் பலராமையர் உள்ளே நுழைந்தார். தாத்தாவைக் கண்டதும் குஞ்சு, "தாத்தா, நம்ப ரெண்டு பேரும் இன்னிக்கி ஊருக்குப் போறோமோன்னோ? இந்தப் பாட்டி வாண்டாம்; இவ அசடு!" என்றாள் கொஞ்சிக்கொண்டு, முகத்தைக் கோணிக் கொண்டு.

"அடி! அசக்காதேடின்னா!" என்றாள். பாட்டி.

பலராமையருக்கு ஒன்றுமே காதில் விழவில்லை. விர்ரென்று வாசலில் போய்த் திண்ணையில் உட்கார்ந்தார். அடுத்த வீட்டுக்காரரான பஞ்சு வம்பு விசாரித்துக் கொண்டே வந்தார்.

"ஏண்டா, உன் மாப்பிள்ளை வரப்போறானுமே? எத்தனை நாள்தான் விட்டுட்டு இருப்பான்?"

பலராமையருக்கு அவரை அப்படியே மண்டையில் அடிக்க வேண்டும் என்று தோன்றிற்று. ஒன்றும் பதில் சொல்லாமல் எழுந்திருந்து உள்ளே போனார்.

முற்றத்தில் வேலை செய்துகொண்டிருந்த வேலைக்காரியின் குரல் கேட்டது: "ஆமாம், சொத்துக்கு ஓடையவங்க வந்தாக் குடுத்துடத்தானே வேணும்? என்னதான் வளத்தாலும் நம்புளுக்குப் புள்ளையா அது?"

"இருந்தாலும் இத்தனை நாள் தாயில்லாக் குழந்தையை வச்சுக் காப்பாத்தி - யாரு இந்த மாதிரி செய்வா! பெத்த குழந்தையையே யாரும் கவனிக்க மாட்டேங்கறா இந்த நாளிலே. ஒன் மாதிரி யார் செய்வா சிவகாமி?"

இது கீழைத்தெருக் காமாட்சியின் குரல். அவளுக்கு ஊரில் 'வக்கீல்' என்று பட்டப்பெயர். எந்தச் சிக்கலான பிரச்னையையும் எளிதில் உடைத்துத் தெளிவாக்கிவிடுவாள். அவளுக்குச் சம்பந்தப்பட்ட விஷயமாக இருக்க வேண்டும் என்ற அவசியமே இல்லை.

பலராமையர் மனம் குழம்பிற்று. மணி பத்து அடித்தது. ஒன்றும் நிதானம் இல்லாமல் கொல்லைப் புறம் ஓடினார்.

"தாத்தா! என்னைப் பாரு! பூச்சாண்டி, பே!" என்றாள் குஞ்சு, கதவு மூலையிலிருந்து. அவர் காதில் ஒன்றும் விழவில்லை.

"சொத்துக்கு உடையவன்!" - யார் சொத்துக்கு யார் உடையவன்?

கொல்லைப்புறம் போனவர் எதையோ கண்டு மிரண்டவர்போல வயற்காடுகளை நோக்கி ஓடினார்.

"சாமி! தந்திங்க!" என்ற வேலுவின் குரலைக் கேட்டு நின்று திரும்பினார்.

கையில் தந்தியை வைத்துக்கொண் டிருந்தான்; அதைப் பிரித்துப் படித்தார்.

"இன்று வர முடியவில்லை. செவ்வாய்க்கிழமை வருகிறேன்" என்று மாப்பிள்ளை கொடுத்திருந்தான்.

இன்னும் மூணு நாளா......!

# கலை வாழ்வு

## 1

சுந்தரகான சபையாரைப் பற்றிக் கேள்விப் படாதவர் தற்காலம் தமிழ்நாட்டில் யாரும் இருக்க முடியாது. தமிழ் நாடக மேடை அடைந்திருக்கும் உன்னத நிலைமைக்கு ஆதியில் விதை போட்டது சுந்தர கான சபை என்றால் அது மிகையாகாது. ஆனால், மேற் படி சபையார் ஆரம்பத்தில் எவ்வளவு கஷ்ட நிஷ்டூரங் களிடையே, ஒவ்வொரு தோல்வியின் மேலும் சளைக்கா மல் அடியெடுத்துவைத்து முன்னேறினார்கள் என்பதை வெகு பேர் அறிந்திருக்க முடியாது; எவ்வளவு மகத் தான எதிர்ப்புகளையும் லக்ஷ்யம் செய்யாமல், உயர்தர நாடகங்கள் நடிப்பதன் மூலம் தங்கள் சீர்திருத்தக் கொள்கைகளைப் பிரசாரம் செய்துவந்தனர் என்பது பலரிடையே இன்னும் ரகசியமாகவே இருந்து வருகிறது. ஆனால் அவற்றைப்பற்றி விஸ்தரிப்பது இப்போது என்னுடைய நோக்கமல்ல.

சுந்தரகான சபையின் ஸ்தாபகரும் அதன் வளர்ச் சிக்குக் காரணபூதருமான ஸ்ரீமான் ரகுராமனைப் பலருக்குத் தெரிந்திருக்கும். அந்தச் சபையின் ஜீவநாடி அவர்தாம் என்று சொன்னால் அது தகும். அவரு டைய நடிப்புத் திறமையைப் பற்றி நான் சிலாகித்துப் பேச முன்வந்தால் நாடகப் பிரியர்களுக்கு அது எவ்வ ளவு விரஸமாகத் தோன்றும் என்பதை நான் அறிவே னாதலால், அதைப் பற்றி நான் ஒன்றும் சொல்லப் போவதில்லை. அவருடைய நடிப்பை நேரில் போய்ப் பார்த்து அநுபவிக்க வேண்டுமே ஒழிய அதைப்பற்றிப் பேசுவதில் அர்த்தமே இல்லை.

ஸ்ரீமான் ரகுராமனின் அந்தரங்க வாழ்க்கையைப் பற்றிச் சில புகார்கள் கிளம்பியிருப்பதைப்பற்றி நானும் கேள்விப்பட்டிருக்கிறேன். சமீபகாலமாக அவருடன் நெருங்கிப் பழகும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது.

அதனால் அவருடைய அந்தரங்க எண்ணங்களையும், அவருடைய வாழ்க்கையின் மேடு பள்ளங்களையும் அறிந்துகொள்ள எனக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது.

அவர் ஒரு பிறவிக் கலைஞர். 'நடிப்பு' என்பது அவருக்கு வரப் பிரசாதம். ஆனால், உலகத்திலே இயற்கையாகவே ஒருவருக்குக் கிடைத்திருக்கும் சக்திக்கேற்ப, அதே துறையிலேயே அவரை முன்னேற விடுவதில்லை சந்தர்ப்பங்கள். இருந்தாலுங்கூட ரகுராமன் இந்த விதிக்கு விலக்கானவர்; தமக்கு ஏற்படுத்தப்பட்ட கட்டாயப் பாதையை உடைத்தெறிந்துகொண்டு தம்முடைய சொந்த மேதையின் ஒளி வீசச் செய்திருக்கிறார்.

தம்முடைய ஜீவனத்திற்காகச் சர்க்கார் உத்தியோகத்தில் அமர்ந்தார் ரகுராமன். ஆனால் அவருடைய இருதயம் முழுவதும் கலைக்கே அடிமையாக இருந்தது. முதல் முதலில் தம்முடன் வேலை செய்து வந்த உத்தியோகஸ்தர்களுடன் சேர்ந்து ஸ்ரீ ஜயந்தி, சிவராத்திரி இரவுகளில் நாடகம் போட்டுத் தம்முடைய ஆத்ம தாகத்தைச் சாந்தி செய்ய ஆரம்பித்தார். லேசான நாடகங்கள்: மார்க்கண்டேயர், நந்தனார் போன்றவை; அதிக ஆட்களும் தேவை இல்லை. இதுதான் சுந்தர கான சபையின் பிறப்பு.

வரவரச் சபை வளர ஆரம்பித்தது. ரகுராமன் தமது ஓய்வு நேரம் முழுவதையும் சபைக்கே செலவழித்தார். நடிப்பில் உற்சாகமும் ஊக்கமும், அதோடு சக்தியும் வாய்ந்த இளைஞர்களைப் பொறுக்கி எடுத்துச் சேர்க்கலானார். ஏதாவது அவர் மனத்தில் நடத்தத்

தீர்மானித்து வைத்திருக்கும் நாடகத்தில் வரும் ஏதாவ தொரு பாத்திரத்துக்குத் தகுதியுள்ள இளைஞனைக் கண் டால், அவனை எப்படியாவது சபையில் சேர்த்துவிடு வார். இது சம்பந்தமாக அவர் எனக்குத் தெரிவித்த ஒரு சம்பவத்தைச் சொல்லுகிறேன்.

ஒரு நாள், அவருடைய காரியாலயத்தில் அவருக் குக் கீழே வேலை செய்யும் ஒரு குமாஸ்தா வீட்டில் ஏதோ விசேஷம். அதற்காக ரகுராமனும் போயிருந்தார்.

அவர் உள்ளே நுழைந்ததும், குமாஸ்தா மிகவும் பயபக்தியுடன் வரவேற்று நாற்காலியைக் கொண்டு வந்து போட்டார். தூரத்திலிருந்து இதைப் பார்த்துக் கொண்டிருந்த குமாஸ்தாவின் ஆறு வயசுக் குமாரன் ஓடி வந்து, குழந்தைகளுக்கு இயற்கையான ஆவலுடன் ரகுராமனைச் சுட்டிக்காட்டி, "அப்பா, இந்த மாமா யாரு?" என்று கேட்டான்.

தகப்பனார், "பேசாமல் இரு; உனக்குத் தெரியாது" என்று பையனை அடக்கிப் பின்புறமாகத் தள்ளினார். சிறுவன் நிற்கவில்லை. ரகுராமனுக்கு எதிரில் வந்து நின்றுகொண்டு, கையை நீட்டிக்கொண்டு, "மாமா, நீங்க யாரு? அப்பா சொல்ல மாட்டேங்கறா; நீங்களும் சொல்லமாட்டியளா?" என்று கெஞ்சும் பாவனையாய்க் கேட்டான்.

ரகுராமன் திகைத்துவிட்டார். சிறுவனின் தைரிய மும் அவனுடைய முகபாவமும் அவருள்ளே இருக் கும் கலைஞனைத் தட்டி எழுப்பிவிட்டன.

அவ்வளவுதான். மறுநாள் சிறுவனின் தந்தையை அழைத்து, "உங்கள் பையனைச் சபைக்குக் கூட்டிக் கொண்டு வாருங்களேன்" என்றார். சில மாதங்களுக் குப் பின்னர் பிரகலாதனாகவும், துருவனாகவும் தோன்றி ரஸிகர்களைப் பிரமிக்கச் செய்தானே, அவன் தான் அந்தக் குமாஸ்தாவின் குமாரன்.

## 2

உண்மையான கலைஞனுக்குச் சாந்தியே இல்லை. எவ்வளவு அற்புதமான சிருஷ்டிகளை உண்டாக்கிவிட்டாலும் அவனுக்கு மட்டும் திருப்தியே இராது. அவன் உள்ளத்துக்கு ஓய்வே இல்லை. துடித்துக்கொண்டிருக்கும் அவனுடைய ஆத்மா மேலே மேலே போக ஆசைப் பட்டுக்கொண்டே இருக்கிறது. அந்தத் துடிதுடிப்பிலே, அந்த அரைகுறைச் சிருஷ்டி நடப்பிலேதான் அதற்கு ஆனந்தம்.

ரகுராமனின் கலையுள்ளம் துடித்துக்கொண்டே இருந்தது. சுந்தரகான சபை சிறந்த பெயரெடுத்து ஜனங்களின் மதிப்பைப் பெற்றிருந்தது. விசேஷமாக ரகுராமனின் விதம் விதமான 'கதா நாயகி' நடிப்புகள் ஆயிரம் ஆயிரமான ஜனங்களின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு விட்டன. ஆனாலும். அவருடைய மனம் திருப்தியடைய வில்லை.

இந்தச் சமயத்தில் அவருக்குக் கிறிஸ்தவ மதத்தில் ஒரு பற்று ஏற்பட்டது. அதற்கு முக்கியமான காரணமாக இருந்தவர்கள் அவருடன் கூட வேலை செய்யும் சில கிறிஸ்தவ நண்பர்கள். அவர்களுடைய சகவாசத்தினால் சில பாதிரிமார்களுடைய நட்பு அவருக்கு ஏற்பட்டது.

ஆகவே, ரகுராமன் ஒரு நாள் கிறிஸ்தவ மதத்தைத் தழுவுவது என்று தீர்மானித்து விட்டார். இந்தத் தீர்மானத்துக்குக் கிறிஸ்தவ நண்பர்களின் தூண்டுதலும் அவர்களுடைய பிரசார மனப்பான்மையுமே காரணமாக இருந்திருக்கலாம். ஆனால், அந்தத் தீர்மானத்தை ஊர்ஜிதப்படுத்தியது கற்பனை பொங்கிய அவருடைய கலைஞன் உள்ளந்தான் என்று நான் நினைக்கிறேன்.

. ரகுராமனுடைய இந்த எதிர்பாராத தீர்மானம் அவருடைய நண்பர்களைப் பிரமிக்கச் செய்துவிட்டது. எல்லோரையும் விட மிகவும் பிரமிப்படைந்தவள்

அவருடைய ஸகதர்மிணி லக்ஷ்மி அம்மாள்தான். வாஸ்தவத்திலேயே மகாலக்ஷ்மி போன்றவள். அவர்களுடன் நான் நெருங்கிப் பழகிய இந்த நான்கு வருஷ காலத்தில் ஒரு நாள் கூட அந்த அம்மாள் முகத்தில் ஒரு சிறு சுணங்கலைக் கண்டதில்லை. எப்போதும் அதே புன்னகை தவழும் பிரசன்ன வதனந்தான்.

என்னிடம் அவர் சொன்ன வார்த்தைகளை அப்படியே சொல்லுகிறேன்:

"முதல் நாள் நான் என்னுடைய தீர்மானத்தை அவளிடம் தெரிவித்தபோது அவள் முதலில் நம்பவே இல்லை. கடைசியில் நான் நிஜமாகவே சொல்கிறேன் என்று அறிந்ததும் ஒன்றும் சொல்லாமல் மௌனமாக இருந்தாள். பிறகு, 'நிஜமாகத்தானா, இது?' என்று கேட்டாள். அவள் குரல் தழுதழுத்தது."

"ஆமாம்' என்றேன் நான்.

"எதற்காக?'

"என்னவோ எனக்குத் தோன்றுகிறது. அவ்வளவு தான்.'

"நம் பெரியோர்களெல்லாம் வந்த வழியை விட்டு விட்டு ஏன் இப்படித் துர்ப்புத்தி தோன்றுகிறது? எனக்கு ஒன்றும் தெரியாவிட்டாலும் நீங்கள்......'

"போதும்! யாருக்குத் துர்ப்புத்தி? உனக்கு இஷ்டமுண்டானால் என்னுடன் இரு. இல்லாமற்போனால் நாளைக் காலை வண்டிக்கே புறப்பட்டுவிடு' என்றேன் நான், தடதடவென்று. ஒரு நாளும் என் வார்த்தைக்குப் பதில் சொல்லாதவள் அன்று எதிர்த்துச் சொல்லியதும், என்னை அறியாமல் எனக்குக் கோபம் பொங்கி விட்டது.

"நான் அன்றிரவு வீட்டுக்கு வரவே இல்லை. நண்பர்களுடன் தங்கிவிட்டேன். அன்றிரவு முழுவதும்

எனக்குத் தூக்கம் இல்லை. லக்ஷ்மி என் வாழ்க்கையின் போக்கைத் தடுக்கும் ஒரு முட்டுக்கட்டை என்று அப்பொழுதுதான் நினைத்தேன்.

"மறுநாள் காலையில் ஆபீஸிலிருந்து பியூனை அழைத்து, லக்ஷ்மியை அழைத்துக்கொண்டு போய் அவளுடைய தகப்பனார் வீட்டில் விட்டுவிட்டு வரும்படி உத்தரவிட்டு விட்டேன்.

"அதற்கு மறுநாள் ஒருவித விக்கினமும் இன்றி என்னுடைய புது வாழ்க்கையில் இறங்கினேன்.

ரகுராமன் கிறிஸ்தவ மதத்தில் சேர்ந்தது தெரிந்ததும் ஊரிலேயே ஒரு பரபரப்பு ஏற்பட்டது. வழக்கமாக உள்ள சமூக பகிஷ்காரம்; பந்துக்களும் நெருங்கிய நண்பர்களுங்கூட அவரை விலக்கலானார்கள். இதை எல்லாம் அவர் எதிர்பார்க்காமல் இல்லை. லக்ஷ்மியின் அன்பெதிர்ப்பையும், அவளுடைய கண்ணீர் உருக்கத்தையுமே எதிர்த்தவரா இவற்றிற்கெல்லாம் பயப்படப் போகிறார்?

ஆனால், அவருடைய உயிருக்கு மேலான சுந்தரகான சபையும் அவரைப் பிரஷ்டனாக்கிவிட்டது. இந்தக் கடைசி அடி அவரால் தாங்க முடியாதது.

* * * *

ரகுராமன் கிறிஸ்தவ மார்க்கத்தில் சேர்ந்து கிட்டத் தட்ட ஒரு வருஷம் ஆகிவிட்டது.

அவரைப் பற்றிப் பலவாறான வதந்திகள் கிளம்பின. மேலதிகாரிகளின் தயவைச் சம்பாதிப்பதற்காகவே அவர் மதம் மாறினார் என்றார்கள் சிலர். நாணயச் செலாவணியிலேயே நம்பிக்கை கொண்ட வேறு சிலர், பாதிரிமார்கள் ஆயிரக்கணக்கில் அவருக்குப் பணம் கொடுத்தார்கள் என்று சொல்லிக்கொண்டார்கள்.

ஆனால், இந்தப் பேச்சுகளெல்லாம் காதிலேயே விழாதபடி தனி இடத்தில் போய் வாழ்க்கை நடத்தினார் ரகுராமன்.

அவருடைய தனிமை வாழ்க்கை அவரால் சகிக்க முடியாததாக இருந்தது. தம்முடைய முதல் காதலான கலையை விட்டு எவ்வளவு நாள்தான் அவர் பிரிந்திருக்க முடியும்?

தம்முடைய புதிய நண்பர்களைக் கொண்டு ஓர் ஆங்கில நாடக சபை ஸ்தாபிக்கப் பிரயாசைப்பட்டார். ஆனால் அவருக்குப் போதிய ஒத்தாசை கிடைக்கவில்லை. அவருடைய தீவிரப் பிரயாசையினால் ஒரு வருஷத்தில் ஒரே ஒரு மாக்பெத் நாடகந்தான் போட முடிந்தது. அதிலும் பூரண வெற்றி இல்லை. ஆனாலும் அவரைப் பற்றின வரையில் அவருடைய திறமை முழுவதையும், லேடி மாக்பெத் என்ற பாத்திரத்தை நடித்து வெளிப் படுத்தினார். அந்த நாடகத்துடன் அவருடைய முயற்சி களும் முடிவடைந்தன.

## 3

தீபாவளிக்கு நான்கு நாட்களுக்கு முன்; அன்று மாலை காரியாலயத்தில் அதிக வேலை இல்லாததால், சீக்கிரமே வீட்டுக்கு வந்துவிட்டார். வழக்கமாக மாலைப் போதைக் கழிக்கும் கிளப்புக்கு அவர் அன்று போக விரும்பவில்லை. ஒருவித நோக்கமும் இல்லாமல் சாலை யோடு தனியாக நடந்து போய்க்கொண் டிருந்தார்.

சுமார் முக்கால் மைல் தூரம் போயிருப்பார். அப் போது திடீரென்று பின்புறமிருந்து, "ஸார்!" என்ற குரல் கேட்டது. திடுக்கிட்டுத் திரும்பி நின்றார் ரகு ராமன். அவருடைய பழைய கால நண்பர். அவருக்கு ஆச்சரியமாக இருந்தது. கடந்த ஒரு வருஷ காலமாகத் தம்முடன் அவர் பேசியதே இல்லை.

ரகுராமன் நின்றார். நண்பர் சமீபத்தில் வந்ததும், "என்ன, பாலகிருஷ்ணா?" என்றார்.

"உங்களைத் தேடித்தான் வந்தேன். வீட்டில் போய்ப் பார்த்தேன்; இல்லை. தூரத்திலேயிருந்து உங்களைக் கண்டேன். கூடவே வருகிறேன்."

"என்ன விசேஷம்?"

"விசேஷந்தான்..."

"என்ன?"

"சபையில் தீபாவளிக்காக நாடகத்துக்கு ஏற்பாடு செய்திருக்கிறோம்..."

"என்ன நாடகம்?" தம்மையும் மீறி எழுந்த ஆவலுடன் கேட்டார் ரகுராமன்.

"ராதா."

"ராதாவா! யார் ராதா?"

ராதா என்ற நாடகம் ரகுராமனின் சொந்த சிருஷ்டி. ராதாகிருஷ்ண லீலைகளைச் சித்திரிக்கும் அந்த நாடகத்தில் அவருடைய நடிப்பின் சிகரம் ராதா நடிப்பு.

"வழக்கம் போலவே சுந்தரமூர்த்திக்குத்தான் அந்தப் பாகம் கொடுக்கப்பட்டிருந்தது. ஆனால் இரண்டு நாளாய் அவனுக்குக் கடுமையான ஜுரம். அவனை விட்டால் வேறு ஆள் யார்? என்ன பண்ணுவதென்று தெரியவில்லை. நாடகத்தை ஒத்திப்போடவும் முடியாது. ஏற்பாடெல்லாம் முடிந்துவிட்டது. வசூல் கூட முக்கால் பங்கு ஆகிவிட்டது. அதற்காகத்தான் உங்களை.."

ரகுராமனுக்கு விஷயம் விளங்கிவிட்டது.

அவருடைய நெற்றி சுருங்கிற்று. மௌனமாக யோசனை செய்தார். சற்று நேரம் கழித்து, "பாலகிருஷ்ணா, நான் நாளைக்குச் சொல்லுகிறேன். நாளைச் சாயந்தரம் என்னை வந்து பார்" என்றார்.

அன்று இரவு ரகுராமனின் உள்ளத்திலே ஒரு பெரும் போராட்டம் நடந்தது. அவருடைய இருதயம் பழைய காதலின் ஆசைக்கும் புதிய வாழ்க்கையின் கட்டுப்பாட்டுக்கும் இடையே அகப்பட்டுத் தவித்தது.

முடிவில் அவருடைய கலையின் ஆர்வமே வெற்றி அடைந்தது.

நாடகத்துக்கு முதல் நாள், ரகுராமன் ராதாவாக நடிக்கப் போகிறார் என்ற செய்தியைக் கேள்விப்பட்டு, அவருடைய கிறிஸ்தவ நண்பர்கள் அவரைப் பார்க்க வந்தனர். இந்தப் 'பாபச் செய்கை' யிலிருந்து அவரைத் தடை செய்ய முடிந்த வரையில் முயன்றார்கள். அவருக்குக் கிடைக்கப்போகும், 'தேவ தண்டனை, தீரா நரகம்' முதலியவைகளைப்பற்றி எவ்வளவோ சொல்லிப் பார்த்தார்கள்.

ஆனால் ரகுராமன் அசையவில்லை. என்னுடைய சுதந்தரத்தைப் பறிக்க யாருக்கும் அதிகாரம் இல்லை - கிறிஸ்துவுக்குக்கூட" என்று ஒரேயடியாகச் சொல்லி விட்டார்.

நாடக இரவு. அன்று மாலையிலிருந்தே அவருடைய உள்ளம் நிலை கொள்ளவில்லை. சாந்தியடைய முடியாத ஒரு தாகத்தினால் தவிப்பதுபோல் தவித்தது.

ஏற்கனவே சுந்தரகான சபை என்றால் கும்பலுக்குக் கேட்க வேண்டியதில்லை. அதுவும் ரகுராமன் பழைய படி வந்துவிட்டார் என்றால்—! கொட்டகையில் நிற்க இடம் இல்லை. ஆள்மேல் ஆள் தொத்திக்கொண்டுதான் நின்றார்கள் ஜனங்கள்.

ஒவ்வொரு காட்சியிலும். ரகுராமன் (ராதா) வந்து நடித்துவிட்டுப் போகும் வரையில் ஒரே கரகோஷந் தான்.

உருக்கமான ஒரு காட்சி. அந்த நாடகத்தின் சிகரம் போன்ற இடம்:

யமுனா நதிக்கரை. அடர்ந்த முல்லைப் புதரின் பக்கம் கிருஷ்ணன் வரவை எதிர்நோக்கி ஆவலோடு காத்திருக்கிறாள் ராதை. வெகு நேரமாகியும் கண்ணனைக் காணவில்லை. அவளுடைய விழிகள் கண்ணன் வரும் வழியைப் பார்த்துப் பார்த்து சோர்ந்து கண்ணீர் கொட்டுகின்றன. அவளுடைய உள்ளம் கொதிக்கிறது. உடம்பு துடிக்கிறது. 'கண்ணா! கண்ணா!' என்று கதறுகிறாள். துக்கமும் கோபமும் மாறி மாறி அவள் நெஞ்சை வாட்டுகின்றன. நிமிஷத்துக்கு நிமிஷம் அவளுடைய வதனம் மாறிக்கொண்டே இருக்கிறது; வாடி வாடி மலரும் புஷ்பத்தைப்போல.

"கண்ணின் மணியே இதயத் தரசே!
கண்ணா! உன்னைப் பிரிவேனோ!
உண்ணும் சுவையே! இசையே! அழகே!
உயிரின் சுடரே! முறைதானோ?"

மௌன மயமான அந்தச் சபையிலே, சோகம் கலந்த இந்துஸ்தானி ராகத்திலே தொனித்த அந்தக் கீதத்தின் ஒவ்வொரு வார்த்தையும் உயிருடன் ஒலி செய்தது. கேட்போர் இருதயத்தைப் பிளப்பதுபோல் இருந்தது.

இந்தச் சம்பவத்தை அவருடைய சொந்த வார்த்தைகளைக்கொண்டே சொல்வதை விட அழகாகச் சொல்ல முடியாது:

"அந்தச் சமயத்தில் என்ன நடந்ததென்றே எனக்குத் தெரியவில்லை. நெஞ்சுக்குள்ளே ஏதோ அடைத்துக் கொண்டதுபோல் இருந்தது ஒருவித, விவரம் சொல்ல முடியாத சோகம் என் மனத்தைக் கவ்விக்கொண்டது. அதோடு நான் ஒரு நாளும் கண்டறியாத இன்ப உணர்ச்சி.

"கண்ணா, கண்ணா! என்று! என்னை அறியாமலே கூவினேன். என் இருதயம் அப்படியே கண்ணன் நாம

சப்தத்துக்கு நர்த்தனம் செய்தது. என் தேகத்தில் ஒவ்வொரு நரம்பும் துடிக்க ஆரம்பித்தது. நான் என்ன செய்தேன் என்றே எனக்குத் தெரியவில்லை.

"மறுநாளே நான் கிறிஸ்தவ மதத்தை விட்டு விட்டேன். ஒருவரையும் நான் இதைப்பற்றிக் கலந்து கொள்ளவே இல்லை. இந்தச் செய்கையின் மூலம் என் புதிய நண்பர்களின் கோபத்துக்குப் பாத்திரமாவேன் என்பது எனக்குத் தெரியும். இதனால் என்னுடைய உத்தியோக வாழ்க்கை எவ்வளவு தூரம் பாதிக்கப்படும் என்பதும் எனக்குத் தெரியும்.

"ஆனால் என்னுடைய முதற் காதலை, இவ்வளவு காலம் என்னை விரக தாபத்தில் ஆழ்த்திய என்னுடைய உள்ளத்தின் ஆசையை அடைந்துவிடுவேன் அல்லவா? அந்த ஆனந்தத்திற்கு ஈடு வேறு உண்டா? அது மட்டுமல்ல; 'தெய்வக் களி துலங்கும்' நகையுடன் என்னை வரவேற்கக் காத்திருக்கும் அந்தத் தேவதைக்கு முன் இந்த உலகத்திலுள்ள செல்வம் அனைத்துமே ஈடாகுமோ?"

---

# மைசூர்க் குங்குமம்

## 1

"ஏண்டி கண்ணு, நீ வரலியா கோவிலுக்கு? இன்னிக்கி ரிஷப வாகனமாச்சே? இன்னம் தலை கூட வாரிக்காமே உக்காந்திருக்கையே!"

நீட்டிவிட்டிருந்த கால்களை மடக்கிக்கொண்டு தன்னுடைய சாய்மான நிலைமையிலிருந்து நிமிர்ந்து உட்கார்ந்தாள் கண்ணம்மாள்.

கேலி கலந்த புன்னகை வாய்க்கோணத்தில் உதிக்க, எதிரே நின்றாள் கமலம்; அவளுடைய தோழி. அவளுடைய நீல வர்ணப் பட்டுப் புடைவை, பெட்டிக்குள்ளே தனக்கு ஏற்பட்ட ஆட்டோ டில்பஹாரின் நெடுநாள் உறவைப் பெருமையுடன் பிரகடனம் செய்வது போல், சுகந்த மணத்தை வீசிக் காற்றில் பரப்பியது. ஒழுங்காக, சிரத்தையுடன் வாரி முடிக்கப்பட்டிருந்த அவளுடைய கருங்கூந்தலும் சோப்பு ஸ்நோவினுடைய பூர்ண சக்தியையும் உபயோகித்துக்கொண்டு வெண்மை அடைந்திருந்த அவளது முகமும், வர்ண பேதங்களின் எல்லையை, தாரதம்மியத்தை எவ்வளவு தூரம் நீடித்துக் காட்ட முடியும் என்பதை நிரூபிப்பவை போன்று இருந்தன.

பொதுவாகவே, அவளுடைய தோற்றம் கண்ணம்மாளின் தோற்றத்துக்கு நேர் எதிராக இருந்தது.

கண்ணம்மாள் ஒரு பழம் புடைவையை உடுத்திருந்தாள். அவளுடைய கூந்தல், எண்ணெயைக் கண்டு எத்தனை காலமாயிற்றோ என்னும்படி, 'சிலும்பல்' பறந்து 'செம்பட்டை' தட்டிப் போயிருந்தது. வேர்வை

வழிந்து, பாதி அழிந்த குங்கும திலகத்துடன் காட்சி யளித்த அவளுடைய முகத்தோற்றம், இத்தகைய சில்லறைச் சிங்காரங்களில் அவளுக்கு இருந்த அசிரத்தையைத் தெளிவாய்க் குறிப்பிட்டது.

"என்னடி, நீ வரப்போறயா இல்லையா? எங்க அத்தை காத்திண்டிருக்கா" என்று நெருக்கினாள் கமலம்.

"நான் வரல்லே, கோவிலுக்கும் குளத்துக்கும்!"

"ஏண்டியம்மா, இத்தனை வேகம் உனக்கு! அதுக்குள்ளே உலகமே வெறுத்துப் போச்சா!"

கண்ணம்மாள் ஒன்றும் பேசவில்லை. மௌனமாக எதிரே பார்த்துக்கொண்டே இருந்தாள்.

"சரி, சரி. உன்னோடு வாயாடப் போதில்லே எனக்கு. நீ உக்காந்திரு. கோட்டையைப் பிடி. நான் போகிறேன்" என்று சொல்லிக்கொண்டே 'விர்'ரென்று திரும்பி மறைந்துவிட்டாள் கமலம்.

மறுபடியும் சுவரில் சாய்ந்துகொண்டாள் கண்ணம்மாள். கால்கள் தாமாகவே நீண்டன. மறுபடியும் கண்கள் வெளியை நோக்கின. பழைய யோசனை.

"கோவிலாம், குளமாம்! எடுத்த ஜன்மத்துக்குக் கோவில் என்ன, சாமி என்ன?......"

அவளுடைய சிந்தனை பல வாரங்களுக்கு முன் ஓடிற்று. அவளுக்கு நன்றாக நினைவு இருக்கிறது. அன்று - முதல் நாள்தான் கல்யாணத்தின் கடிதம் வந்தது.

"பிரியமான கண்ணுளுக்கு.

நான் ஞாயிற்றுக்கிழமை புறப்பட்டு அங்கே வருகிறேன். இரண்டு நாள் லீவு எடுத்துக்கொண்டிருக்கிறேன். என் கண்ணைப் பார்க்கத்தான் வருகிறேன்.

கட்டாயம் நீ சொன்ன சாமானை வாங்கி வருகிறேன்.

இப்படிக்கு
உன் அன்பன்."

அவளுக்கு அந்தக் கடிதம் நன்றாக நினைவிருக்கிறது.

அவனும் பட்டணத்துக்கு உத்தியோகத்துக்குப் போய் இரண்டு வருஷங்கள் ஆயின. அந்த இரண்டு வருஷத்தில், 'இதை வாங்கிக்கொண்டு வா' என்று வாய் திறந்து ஒன்றும் அவள் கேட்டதில்லை.

அடுத்த தெருவு நீலாள் கூட ஒவ்வொரு தடவையும், கல்யாணம் பட்டணத்திலிருந்து வந்துவிட்டுப் போனபோதெல்லாம். "உங்க ஆத்துக்காரர் என்ன கொண்டு வந்தார் உனக்கு. பட்டணத்திலேயிருந்து?" என்று கேட்பாள். அவள் அகத்துக்காரர் காரைக்காலிலிருந்து வரும்போதெல்லாம் ஒரு பெட்டி சோப்புக் கூட இல்லாமல் ஒரு தடவையும் வந்ததில்லை; அந்தப் பெருமை அவளுக்கு! அதை எல்லாம் லக்ஷ்யம் செய்ததில்லை அவள். "என்ன இருக்கு வாங்கிண்டுவர?" என்று சொல்லிவிட்டு அலக்ஷ்யமாய்ப் போய்விடுவாள்.

ஞாயிற்றுக்கிழமை வந்தது. காலை ஒன்பது மணிக்கு வந்துவிட்டான் கல்யாணம். வண்டியை விட்டு இறங்கும் போதே, ஒரு குதி குதித்துக்கொண்டு இறங்கினான். மாடியிலிருந்து ஜன்னல் வழியாகப் பார்த்தாள் கண்ணம்மாள்.

மணி பத்து ஆயிற்று. அவளுக்குக் கல்யாணத்தைப் பார்க்கவேண்டும் என்று ஆவல். அவனோடு பேசவேண்டுமென்று ஆசை துடித்தது.

என்ன பேச்சு! மாமனாரும் மாப்பிள்ளையும் என்னவோ இங்கிலீஷும் தமிழும் பிளந்து தள்ளுகிறார்கள்! எந்தக் கோட்டையைப் பிடிக்கணும்......தகப்பனார் மேல் கோபம் வந்தது அவளுக்கு.

'அப்பாடா! ஆச்சு. பேச்சு முடிந்தது.'

"என்ன, கல்யாணம்! இப்பத்தான் வந்தாயா?"

அடுத்த வீட்டுச் சுந்தரம், கல்யாணத்தின் நண்பன். குசலப்ரச்னம் செய்துகொண்டே உள்ளே நுழைந்து விட்டான்.

"சனியன்கள்! வந்து இறங்கறத்துக்குள்ளே என்ன அவசரம்? யார்தான் சொல்வாளோ?"

நல்ல வேளை! தட்டிக் கழித்துவிட்டு மாடிக்குப் போய்விட்டான் கல்யாணம். மெதுவாகக் கூடத்துக்கு வந்தாள் கண்ணம்மாள்.

"கண்ணு! அடியே!"

பார்வதியம்மாளின் குரல்! அவள் அவளுடைய தாய்.

"ஏண்டி கூவறே!"

மறுபடியும் அடுக்குள்ளே நுழைந்தாள் கண்ணம்மாள்.

"ஏண்டி, இந்தக் காபியைக் கொடுடி. வந்து எத்தனை நாழியாச்சு? இதுவும் ஆறிப்போறது......" என்று மாப்பிள்ளை மாடியில் இருப்பதை அறிந்தவளாய், அரை ரகசியமாகவும், அரை உரக்கவும் சொன்னாள் பார்வதியம்மாள்.

"சர்க்கரை கொஞ்சமாகப் போட்டிருக்கையா?" என்று கேட்டுக்கொண்டே தாயின் பதிலை எதிர் பாராமல், காபி தம்ளரைச் சுமந்து மாடியை நோக்கி நடந்தாள் கண்ணம்மாள்.

படி ஏறியதும் சற்று நின்றாள். உடுப்புக்களைக் களைந்து வைத்துவிட்டு, படுக்கையின்மேல் சாய்ந்து கொண்டு, தினசரிப் பத்திரிகையைப் படித்துக்கொண் டிருந்தான் கல்யாணம். இவள் உள்ளே நுழையும்

போதே கடைக்கண்ணால் பார்த்துவிட்ட கல்யாணம், இவள் வந்ததை அறியாதவனைப்போல முகத்தை மறைத்துக்கொண்டு மும்முரமாகப் படிக்க ஆரம்பித்தான். அவன் பார்த்ததைக் கவனித்துவிட்டாள், கண்ணம்மாளும். இருந்தாலும், அவனாகத் திரும்புகிறானா என்று பார்க்க எண்ணிச் சற்றுத் தாமதித்தாள்.

இரண்டு நிமிஷம் ஆயின. கண்ணம்மாள் ஏதோ சொல்ல வாயெடுத்தாள். அதே சமயத்தில் கல்யாணமும் பத்திரிகையைக் கீழே வைத்துவிட்டு நிமிர்ந்தான். பொய்யான ஆச்சரியம் தோற்றுவித்த அவனுடைய பார்வையும், கோபம் கலந்த புன்னகை ததும்பிய அவளுடைய பார்வையும் சந்தித்தன. இருவரும் ஏககாலத்தில் களுக்கென்று சிரித்துவிட்டனர்.

பிறகு கல்யாணம் சிரிப்பை அடக்கிக்கொண்டு, "ரொம்ப நாழிகையாகக் காத்துக்கொண்டிருக்கிறாயா?" என்றான்?"

"ஆமாம், துரைவாள் ரொம்ப முக்கியமாக ஏதோ படித்துக்கொண்டிருக்கிறபோது குறுக்கிடலாமா?" என்று கேட்டுக்கொண்டே காபியை அவன் பக்கத்தில் வைத்தாள்.

"உன்னைவிட முக்கியமா, என்ன இது?"

"அப்படி யார் சொன்னது?"

அவனைக் கடைக்கண்ணால் பார்த்துக் குறும்பாக நகைத்தாள் கண்ணம்மாள்.

ஏதோ பதில் சொல்ல ஆரம்பித்தான் கல்யாணம். அதற்குள் கண்ணம்மாள், "காபி ஆறிப்போகிறதே. ராத்திரி முழுவதும் தூக்கமில்லாமெ வந்திருக்கிறீர்கள்" என்றாள்.

"காபி நன்றாக இருக்கும்போல் இருக்கிறதே. யார் வைத்தது?" என்று சொல்லிக்கொண்டே தம்ளரை எடுத்து ஆற்றினான்.

"நான் இல்லை!"

"அதுதான் நன்றாக இருக்கிறது!"

அந்த வார்த்தைகள் சுருக்கென்று தைத்தன, அவள் மனத்தில். அவள் முகம் சிவந்தது. அதுவும் அவனுடைய முகத்தில் தோன்றிய கேலிக்குறி அவளுடைய கோபத்துக்குத் தூண்டுகோல் போடுவது போல் இருந்தது. உடனே சடக்கென்று எழுந்து, "பாத்திரத்தைக் கொடுங்கள் சீக்கிரம். நான் போக வேணும். காரியம் இருக்கு" என்றாள்.

அவனுடைய முகத் தோற்றத்திலிருந்து கல்யாணம் இதை எதிர்பார்க்கவில்லை என்று நன்றாகத் தெரிந்தது.

"என்ன அவசரம்? நான் வாங்கிக்கொண்டு வந்திருக்கிறது வேண்டாமா?" என்றான்.

"என்னத்தை வாங்கி வந்துட்டிய, அபூர்வமா?"

"இதோ பாரு" என்று சொல்லிக்கொண்டே, கல்யாணம் பெட்டியிலிருந்து ஒரு நீண்ட தகர டப்பாவை எடுத்து நீட்டினான்.

அதைக் கண்டதும் கண்ணம்மாளின் கோபக் கனை மறைந்துவிட்டது. முகத்தில் ஒரு பிரகாசம் உதித்தது. இருந்தாலும் விட்டுக் கொடுக்காமல், "இதற்குத்தானா? ரொம்ப ஆபூர்வ வஸ்துவோ?" என்று அதை வாங்கிக் கொண்டு, "ஆமாம், இதென்ன விலை?" என்று கேட்டாள்.

"ஏன்? நீ கொடுக்கப் போகிறாயா?"

"ஆமாம், உங்கள் பணம் எனக்கு என்னத்துக்கு?"

"பணக்காரியோல்லியோ!"

"சரி, சரி, சொல்லாவிட்டால் போங்கள். நான் போகிறேன்."

சடக்கென்று திரும்பி மறைந்துவிட்டாள் கண்ணம்மாள்.

## 2

மறுநாள் காலையில் கண்ணம்மாள் காபியும் கையுமாக உள்ளே நுழைந்தபோது, கல்யாணம் அவளை நிமிர்ந்து பார்த்தான். அப்பொழுதுதான் கேட்டான்: "கண்ணு, என் நெற்றியில் ஒன்றையும் காணோம்? என் குங்குமத்தைக் காணவில்லை?" என்று.

"ஏன், கண்ணு, ஒன்றும் பேசலே?"

"போதும் போதும். நீங்க குங்குமம் வாங்கிக் கிண்டு வந்தது" என்று கழுத்தை ஒரு சொடுக்குச் சொடுக்கி முகத்தைத் திருப்பிக்கொண்டாள்.

"ஏன் நான் வாங்கினதுக்கு என்ன? நன்றாக இல்லையா?"

"ஒண்ணும் இல்லை. எல்லாம் நன்றாக இருக்கு."

"நன்றாயிருந்தால் ஏன் இவ்வளவு அதிருப்தி?"

தலையை நிமிர்ந்தாள் கண்ணம்மாள். அவனைப் பார்த்துக்கொண்டே, "நான் என்ன வாங்கிக்கிண்டு வரச் சொன்னேன்?" என்று படபடவென்று கேட்டாள்.

"ஏன் நீ காண்பித்த மாதிரிதானே வாங்கி வந்தேன்?"

"மாதிரியைக் காண்பித்து 'மைசூர்க்குங்மம்' என்று சொன்னேன்; இதுதானு அது?"

"மைசூர்க் குங்குமம் என்று ஒண்ணுமே கிடையாது. இதற்குப் பேர் **பெர்ஹாம்பூர் குங்குமந்**தானும், இதைத்தான் மைசூர்க் குங்குமம் என்று....."

போதும்; உங்களுக்கு இஷ்டம் இல்லை என்று சொல்லிவிடுகிறதுதானே? அதற்கு இத்தனை சால்ஜாப்பு என்னத்துக்கு?"

அவளுடைய பிடிவாதம் அவனுக்குக் கோபத்தைக் கொடுத்தது. அதோடு வருத்தமும் கலந்தது. சற்றுத் தணிவான இளகிய குரலில் சொன்னான், சமாதானம் செய்யும் தோரணையில். "கண்ணம்மா, நான் சொல்வதை முழுக்கக் கேட்காமல், நீ பாட்டிலே கற்பனை பண்ணிக்கிறயே; நானும் ஐந்து கடைகளில் விசாரித்து விட்டேன். எல்லோரும் ஒரே மாதிரியாக இதைத்தான் கொடுத்தார்கள்" என்றான்.

"ஒண்ணை மறைக்க ஒண்ணு. சால்ஜாப்பு எதுக்கு?" பிறகு, சற்றுச் சிந்தனை கலந்த தொனியில், "ஆமாம், உங்களை எதுக்கு நான் வாங்கிக்கொண்டு வரச் சொன்னேன்? இது வரைக்கும் ஏதாவது சொன்னதுண்டா?" என்றாள்.

அவளுடைய குரலில் தொனித்த கசப்பு மாறித் துக்கமாக வெளிப்பட்டது.

"கண்ணம்மா, கண்ணம்மா, நான் சொல்வதைக் கேளேன். கேட்கமாட்டாயா?"

அவனுடைய கெஞ்சுதலையும் பொருட்படுத்தாமல் திரும்பிவிட்டாள் கண்ணம்மாள்.

அவளுக்குத் துக்கம் நெஞ்சை அடைத்தது.

மடமடவென்று பின் கட்டுக்குப் போனாள். ஒரு மூலையில் போய் உட்கார்ந்துகொண்டாள். அவளுக்கு வாய் விட்டு அழவேண்டும்போல் இருந்தது. அழுகையும் வரவில்லை. ஆனால் நெஞ்சில் மாத்திரம் ஏதோ கனத்த வஸ்து விழுந்து அழுத்துவதுபோல் இருந்தது.

அவ்வளவு அலக்ஷ்யம்! அலக்ஷ்யம் இல்லாமல் என்ன அது? இல்லாவிட்டால் வாங்கிக்கொண்டு வர மாட்டானா? இத்தனைக்கும் நேரில் சொன்னதை மறந்து விடக் கூடுமென்று கடிதத்திலும் எழுதியிருக்கிறாள்! அவள் வேண்டுமென்று சொன்னது பிசகு. அப்பொழுதும் மூன்று நான்கு தடவை என்ன வேண்டுமென்று கேட்டதற் கப்புறந்தானே சொன்னாள்? ஆனால் இந்த அலக்ஷ்ய புத்தி எப்போதுதான் வெளிப்படும்?

எத்தனை நாள் மூடி வைக்க முடியும்? நேரில் கண்டதும் பேசுவதற்கென்ன? பசப்பு வார்த்தைக்குத் தானா பஞ்சம்?

அன்று முழுவதும் அவள் மனம் நிலை கொள்ளவில்லை. நெஞ்சு அலை மோதித் தத்தளித்தது. இந்த லோகத்திலேயே இல்லாதவள்போல் நடமாடினாள். அன்று முழுவதும் அவள் கல்யாணத்தைப் பார்க்கவில்லை.

அன்று மாலை ரெயிலில் கல்யாணம் ஊருக்குப் புறப்படவேண்டும். இன்னும் ஒரு மணி சாவகாசந்தான் இருக்கிறது. பார்ப்பவர்களுக்கு வித்தியாசமாகக் காட்டிக்கொள்ளக் கூடாதென்று மாடிக்குப் போனாள். அன்றியும். கடைசியாகத் தன்னுடைய கோபத்தை ஊர்ஜிதம் செய்துவிட வேண்டும் என்ற ஓர் ஆசை இருந்தது.

போகும்போழுதே முகத்தில் தீர்மானமான கோபத் தோற்றத்தை வருவித்துக்கொண்டாள். தன் மனத்தில் உள்ளதை வெளிப்படுத்தவும் கூடாது; சகஜமாக விட்டுக்கொடுத்துவிடவும் கூடாது.

உள்ளே நுழையும்போதே, "கண்ணே, கோபம் தீர்ந்ததா?" என்று கேட்டான் கல்யாணம், புன்னகையுடன்.

'இன்னமும் என்ன பரிகாசம்!'

"யார் மேலே யாருக்குக் கோபம்?" என்றாள் கண்ணம்மாள், மெதுவான குரலில்.

"உனக்குத்தான். என் மேலே. என்னவோ பிரமாதமாக் கோபித்துக்கொண்டுவிட்டாயே."

'இன்னும் என்ன கேலி! இதற்கு என்ன பதில் சொல்வது?'

ஒன்றும் பேசாமல் குனிந்த தலை நிமிராமல் சுவரில் சாய்ந்த வண்ணம் நின்றாள் கண்ணம்மாள்.

அவளுடைய மௌனத்தைக் கண்ட கல்யாணம், "என்ன, கண்ணு, பேச மாட்டாயா?" என்று சொல்லிக் கிட்ட நெருங்கினான்.

"பேசாமல் என்ன......?"

அதற்குமேல் அவளால் பேச முடியவில்லை. கண்கள் நீரைச் சொரிந்துவிடும்போல் பயமுறுத்தின. கீழே போக நினைத்துத் திரும்பினாள்.

அவள் கருத்தை உணர்ந்துகொண்ட கல்யாணம், "கண்ணு, கண்ணு, போகிறாயா? என்னோடு பேச மாட்டாயா?......நான்தான் சொன்னேனே......" என்று கெஞ்சுதலாகச் சொன்னான்.

'பசப்பு, பசப்பு! என்ன வேஷம்!'

"போதும், போதும், உங்க பேச்செல்லாம்!"

அவளுடைய குரலில் தொனித்த ஆத்திரத்தையும் கசப்பையும் கண்டு பிரமித்துவிட்டான் கல்யாணம்.

திரும்பிக்கூடப் பாராமல் மடமடவென்று கீழே இறங்கிப் போய்விட்டாள் கண்ணம்மாள்.

## 3

கல்யாணம் புறப்பட்டுப்போன மறுநாள் முழுவதும் கண்ணம்மாள் எழுந்திருக்கவே இல்லை. தலை

வலிக்கிறதென்று சாக்குச் சொல்லிவிட்டுப் படுத்துக் கொண்டே இருந்தாள். அவளுக்குத் தூக்கம் தாங்க வில்லை. அழுது அழுது முகம் வீங்கிவிட்டது.

ஆனால் ஒவ்வொரு சமயம் அவளுக்குத் தோன்றிய துண்டு. 'ஒருவேளை அவர் சொன்ன காரணம் வாஸ்தவ மாக இருந்தால்....?'

'ஆனால் இவ்வளவு பரிகாசம் ஏன்? இப்படி லக்ஷ்யம் செய்யாமல் ஊருக்குப் போவாரா?'

அவளுடைய தோழி கமலம் சென்ற பின் இவ் வளவும் அவள் மனத்தில் தோன்றித் தோன்றி மறைந் தன. ஆனால் அவளுடைய துக்கமெல்லாம் மாறிக் கோபமாக உருவெடுத்துவிட்டது. இப்பொழுது திட ரென்று அவளுடைய யோசனை கலைக்கப்பட்டது.

"ஏண்டி, இங்கே என்னடி பண்ணறே? வண்டி கட்டி வாசல்லே நிக்கறது. கோவிலுக்குப் போக வாண்டாமா?" என்று நிந்தனையுடன் கேட்டுக் கொண்டே வந்தாள் பார்வதியம்மாள்.

கண்ணம்மாள் ஒன்றும் பதில் சொல்லவில்லை.

"ஏண்டி, எழுந்திரேண்டி!"

"நான் வல்லே!"

"வல்லியா? இன்னிக்கி வெள்ளிக்கிழமை; வருஷத் துக்கு ஒரு நாள். ரிஷப வாகனம் நன்னா இருக்கு! எழுந்திருந்து வாடி, அசடு!"

"நான் வல்லேன்னுப் போங்களேண்டி! என்னை எதுக்கு இம்சிக்கிறீர்கள்?"

"சரி, வல்லேன்னுத் தொலை. நான் போறேன். கொடுத்து வைக்க வேண்டாமோ?"

சற்று நேரம் கழித்து எல்லோரும் கோவிலுக்குப் புறப்பட்டுவிட்டார்கள் என்பதற்கு அடையாளமாகப்

பார்வதியம்மாளின் குரல் தூரத்திலிருந்து கேட்டது.

"அடியே கண்ணு! வீடெல்லாம் திறந்து கிடக்கு. கூடத்திலே வந்து பாத்துக்கோ. துணைக்கு அங்காயி வருவ. பத்திரம்."

கூடத்தில் வந்து ஊஞ்சலின் மேல் உட்கார்ந்து கொண்டாள் கண்ணம்மாள்.

அவளுடைய நெஞ்சில் ஒரே கொதிப்பாக இருந்தது. ஒரே ஆத்திரம். யார் மேல் ஆத்திரப்படுவது?

எழுந்து தெருப்பக்கம் போய் எட்டிப் பார்த்தாள். அஸ்தமித்து ஒரு நாழிகை ஆகிவிட்டது. கடைசியாகக் கோவிலுக்குப் போகிறவர்கள் எல்லாரும் போய்விட்டார்கள். தெருவெல்லாம் கிச்சென்று இருந்தது.

"கோவிலாம், கோவில்! என்ன சாமி, என்ன பூதம்!"

அவளுக்கு ஒரே வெறுப்பாக இருந்தது. கோபம் பொங்கி வந்தது. ஏதாவது செய்ய வேண்டும் என்று கட்டில் அடங்காமல் துடித்தது தேகம்.

மடமடவென்று உள்ளே போனாள். தன்னுடைய டிரங்குப் பெட்டியைத் திறந்தாள். அதிலிருந்து ஒரு சோப்புப் பெட்டியை எடுத்து மூடியைத் திறந்தாள். அதிலிருந்து பல கடிதங்கள் கீழே விழுந்தன. எல்லாம் கல்யாணம் எழுதின கடிதங்கள்.

ஒவ்வொன்றாக எடுத்துக் கிழிக்க ஆரம்பித்தாள். தற்செயலாக ஒரு கடிதம் உறையை விட்டு வெளியே நீட்டிக்கொண்டிருந்தது. அதில் தெரிந்த இரண்டொரு வரிகள் அவளுடைய கவனத்தைக் கவர்ந்தன. உடனே அதை உருவிப் படித்தாள்.

"........கோவிலுக்குப் போனால் தனியாகப் போகாதே. எல்லாரோடும் வண்டியிலேயே போ......"

அதைப் படித்ததும் அவளுக்கு என்னவோ தோன்றிற்று: உடனே பாக்கியுள்ள கடிதங்களைச் சுருட்டிப் பெட்டிக்குள் திணித்துவிட்டுப் பெட்டியைப் பூட்டிவிட்டு எழுந்தாள்.

மடமடவென்று வாசல் பக்கம் வந்து கதவைத் தாழிட்டுப் பூட்டினாள்.

"தனியாகப் போகப் படாதாம்! ரொம்ப அக்கறை!"

அவள் கதவைப் பூட்டிக்கொண்டு படியை விட்டு இறங்கியதும் வேலைக்காரி அங்காயி எதிரே வந்தாள்.

"அம்மா எங்கே போகுது?"

"பேசாமல் என்கூட வாடி."

"எங்கே?"

"கோவிலுக்கு."

"அம்மா சொன்னாங்களே, வீட்டே இருக்கிறீங்கன்னு."

"பேசாதே வாடின்னா!"

கண்ணம்மாள் வாசலில் இறங்கி நடக்கத் தொடங்கிவிட்டாள். பேசாமல் வியப்புடன் பின் தொடர்ந்தாள் வேலைக்காரி.

மேகங்கள் நிறைந்திருந்த வானத்தினிடையே யிருந்து, மங்கிய நிலவொளி விட்டு விட்டு வீசிக்கொண் டிருந்தது.

தூரத்திலே மேள வாத்திய முழக்கம் காற்றோடு கலந்து வந்து, அதன் வேகத்திற்கேற்பக் குறைந்தும் கூடியும் மாறிமாறிக் கேட்டது. அதனிடையே அதிர் வெடியின் முழக்கம் திடும் திடுமெனத் திடுக்கிடச் செய்தது.

கண்ணம்மாள் கோவிலை அடைந்தபோது சுவாமி கோவிலை விட்டு வெளிப் பிராகாரத்துக்கு வந்துவிட்டார்.

பட்டப்பகலைப் போல் காந்த விளக்குகளின் பிர காசம்; ஜகஜ்ஜோதியாய் மின்னி மின்னி மறையும் வாண வரிசைகள்.

கூடை கூடையாகப் புஷ்பங்களைச் சொரிந்து அலங்கரித்திருந்தது சுவாமியை.

"ஹரே! ஹரே! பார்க்கப் பதினாயிரம் கண்கள் வேண்டும்!" என்ற பக்திப் பரவசக் குரல்கள்.

இவற்றையெல்லாம் கண்ணம்மாளின் மனம் நாட வில்லை. அதிருப்தியுடன் திரும்பினாள். பின்புறம் போய் ஒதுங்கி நின்றாள். "பித்தா...பிறைசூடி...பெரு மானே..." தேவார கோஷ்டி.

சாதாரணமாக எப்போதுமே பாட்டென்றால் போதும் கண்ணம்மாளுக்கு. பிச்சைக்காரனாயிருந்தால் கூட ஒரு பாட்டுப் பாடினால் அவனுக்கு ஒரு பிடி அரிசி கூடப் போடுவாள். அவன் மறையும் வரையில் அந்த இடத்தை விட்டு அசையமாட்டாள்.

இன்று தேவார கோஷ்டியின் இனிய கீதம் வேதனையை உண்டாக்கிற்று. ஒரே புளிப்பாயிருந்தது அவளுக்கு.

மடமடவென்று ஓரமாக ஒதுங்கி முன்னுக்கு வந்தாள்.

அவளுக்கு ஒன்றும் பிடிக்கவில்லை. 'என்ன கூட்டம்! என்னத்தைக் கண்டுதுகள் எல்லாம்!......... காதைத் துளைக்கும் இரைச்சல்!'

கொஞ்ச தூரம் போனதுந்தான் கண்ணம்மாள் சுய நினைவுடன் திரும்பிப் பார்த்தாள். பிறகு என்ன நினைத்தாளோ என்னவோ, வேகமாக வீட்டை நோக்கி நடக்க ஆரம்பித்தாள்.

அவளுடைய மனம் அவளுடைய கட்டில் இல்லை. கோரக் கற்பனைகளைச் சிருஷ்டித்துக்கொண்டு தவித்துத்

தத்தளித்தது. இன்னது செய்கிறோம் என்பதே தெரிய வில்லை அவளுக்கு.

தனிமையாகவே இரவில் வருகிறோம் என்பதை அவள் உணரும்போது பாதி தூரம் வந்துவிட்டாள். தூரத்திலே உற்சவ விளக்குகளின் பிரகாசம் மங்கலாய்த் தெரிந்தது. ஜனங்களின் ஆரவாரம் மந்த மாய்க் கேட்டது.

இரு பக்கத்திலுமுள்ள வயல்களில், 'கட, கட, கட, கட' என்று கதறும் தவளைக் கூட்டத்தின் கோர சப்தம் காதைத் துளைத்தது.

அந்தச் சமயத்தில் இதுவரையிலும் இல்லாத பய மொன்று அவளைப் பிடித்துக்கொண்டது. மங்கலான இரவு, ஆள் நடமாட்டம் இல்லாத பாதை. அதோடு தவளைகளின் விகாரக் கதறல். எல்லாமாகச் சேர்ந்து அவளுடைய மனத்தில் விவரிக்க முடியாத அச்சத்தைத் தோற்றுவித்தன. மிரட்சியுடன், யாராவது கோவிலி லிருந்து வருகிறார்களா என்று திரும்பிப் பார்த்தாள்.

யாரையும் காணவில்லை.

மரியாதையாக எல்லோருடனும் போயிருந்தால்—? அல்லது, சிவனே என்று வீட்டிலேயே இருந்திருந் தால்--?

வீட்டு ஞாபகம் வந்ததும், அவளுடைய பழைய நினைவுகள் ஒவ்வொன்றாய்க் குவியத் தொடங்கின மனத்தில். மறுபடியும், அவள் தன்னுடைய வேதனை கலந்த கற்பனை யுலகத்தில் புகுந்துவிட்டாள்.

## 4

மறுநாள் காலையில் ஏழு மணி இருக்கும். கண்ணம்மாள் எழுந்திருக்கும்போதே தாயின் கோபக் குரலைக் கேட்டுக்கொண்டே எழுந்திருந்தாள்.

"ஏண்டி, நாளும் கிழமையுமாத் தூங்கறயே! கனுப் பொங்கலுக்கு ஊர்ப் பொண்டுகள் எல்லாம் ஆத்தங் கரைக்குப் போயிட்டா! நன்னாத் தூங்கறே! எழுந் திருடி!"

மனத்திலே சென்ற நாட்களின் போராட்டத்தின் அடையாளமேயின்றி, ஒரு விடுதலை உணர்ச்சியுடன் எழுந்திருந்தாள் கண்ணம்மாள்.

"என்னடி பண்ணணுமிங்கறே? எல்லாரும் போனாப் போறாளே; வழி தெரியாதா, என்ன?" என்றாள் சற்றுக் கோபமாக.

"சரி, சரி. எழுந்திருந்து மஞ்சக் குங்குமத்தை எடுத்துண்டு கிளம்புடி. இதோ கமலங்கூட வந்து விட்டாள்."

"ஏண்டி கண்ணு, வரல்லியா நீ ஆத்துக்கு?" என்று கேட்டுக்கொண்டே கமலம் உள்ளே நுழைந்தாள்.

அவளுடைய வலது கையில் இருந்த புதுப் புடைவை, கண்ணாடி, சீப்பு, குங்குமம் முதலியவற்றைக் கொண்ட கூடையும், இடது கையில் தொங்கிய பாத்திரமும் அவள் புறப்பட்டுத் தயாராகக் கிளம்பி விட்டாள் என்பதைத் தெரிவித்தன.

"ஏண்டி, இன்னிக்காவது வரப்போறியோ, இல்லையோ—? நேத்திக்குத்தான் கோவிலுக்கு வல்லேன் னாட்டே—"

இன்று கண்ணம்மாள் நேற்று மாதிரி இல்லை. உடனே புறப்படத் தயாராகி விட்டாள்: இரண்டு நிமிஷங்கள் தாம். ஒரு கையில் கூடை, மற்றொரு கையில் சாத வகைகள் நிறைந்த பாத்திரம் சகிதம் கிளம்பி விட்டாள்.

அன்று கண்ணம்மாளுக்கு விவரிக்க முடியாத நிம்மதி இருந்தது மனத்தில். அவளுக்கே ஆச்சரிய மாக இருந்தது அது.

பலவித வர்ணப் புடைவைகள் காலை இளம் வெயிலில் பல வர்ணச் சிறகுகளுடைய பட்டுப் பூச்சி கள் கூட்டத்தைப்போல் பிரகாசிக்க, பலவிதமான வம்புகள் பேசிக்கொண்டு ஆற்றங்கரையை நோக்கி மெதுவாக நகர்ந்துகொண் டிருந்த பெண்கள் கூட்டத் தில் கலந்துகொண்டார்கள், கமலமும் கண்ணம்மாளும்.

## 5

"ஏண்டி கமலம், எத்தனை போதுடி சிங்காரிச் சுக்கறே?"

"இதோ ஆச்சுடி, வந்துவிட்டேன்."

கண்ணம்மாள் ஸ்நானம் செய்து, கூந்தல் லேசாக முடையப்பட்டுப் பின் தொங்க, மடிப்புப் பிரியாத புதுப் பட்டுப் புடைவை தன்னுடைய இளமையையும் புதுமையையும் மடமடவென்ற சப்தத்துடன் விளம் பரப்படுத்த, அடுத்த வேலைக்குத் தயாராக நின்றாள்.

கமலம் எல்லாம் முடித்துக்கொண்டு, சிங்காரிப்பு வேலையில் கடைசி அம்சமாகிய நெற்றிக்குத் திலகம் வைத்துக்கொள்வதில் ஈடுபட்டுருந்தாள். படிக்கட்டு ஓரத்தில், சுவரின் மேல் சாய்ந்திருந்த கண்ணாடியின் எதிரே நின்று, இடதுகை ஒரு குங்கும டப்பாவைத் தாங்க, வலதுகை ஒற்றை விரலால், நெற்றியை அலங் கரித்த பளபளவென்று மின்னும் குங்குமத் திலகத்தைச் சீர்ப்படுத்திக்கொண் டிருந்தாள்.

பேசிக்கொண்டே அவளை நெருங்கிய கண்ணம் மாளின் பார்வை அகஸ்மாத்தாக அவளுடைய கையில்

இருந்த குங்கும டப்பாவின் மேல் விழுந்தது. என்ன அது—!

சற்று நெருங்கிப் பார்த்தாள் கண்ணம்மாள். அதேதான்! அவளிடமிருந்த டப்பாவைப் போன்றது தான் அதுவும்!—ஆனால் கொஞ்சம் பழையது.

கிட்டே நெருங்கி அதன்மேல் இருந்த எழுத்துக் களை வாசித்தாள். என்ன ஆச்சர்யம்!

"பெர்ஹாம்பூர்க் குங்குமம்!"

ஏதோ சுரீலென்று மின்னல்போல் பாய்ந்தது போல இருந்தது, அவள் இருதயத்தில்!...ஆஹா!

கடைசியில் கல்யாணம் சொன்னது நிஜந்தான். என்ன அக்கிரமம்!....அவன் என்ன பாடு பட்டிருப் பான்!

அவளுடைய உள்ளம் அந்த நிமிஷத்திலே என்ன பாடு பட்டது என்பதை விவரிக்கவே முடியாது. ஏதோ பேயைக் கண்டு மிரண்டவள்போல் அவள் முகம் வெளுத்தது. அவளுடைய நெஞ்சு ஏதோ கொலே செய்துவிட்டவள் போல், இன்னும் கொடூரமான ஏதா ஒன்றைச் செய்துவிட்டதுபோல் துடித்தது!... ஐயோ! அந்த ஆத்ம நிந்தனையை, அந்த வேதனையை, விவரிக்கவே முடியாது.

* * * *

அன்று ஆற்றங்கரையிலிருந்து திரும்பி வரும் போது கமலம் கண்ணுளைப் பார்க்கவில்லை. அந்தக் கூட்டத்தில் வந்த பெண்கள் யாருமே பார்க்கவில்லை.

அதே சமயத்தில் கண்ணம்மாள் தன் வீட்டில், கீழ்க்கண்ட கடிதத்தை எழுதி முடித்துவிட்டுத் திருப்பிப் படித்துக்கொண் டிருந்தாள்:

"பிரிய துரைக்கு,

போய்ச் சேர்ந்தபின் இது வரையில் உங்களிடமிருந்து கடிதம் வராதது ஆச்சரியமாக இருக்கிறது.

நீங்கள் அடுத்த தடவை வரும்பொழுது கட்டாயமாய் முந்தி **வாங்கி வந்த குங்கும டப்பாவில்** நான்கு வாங்கிக்கொண்டு வரவேணும், எங்கள் அம்மங்காள் வந்திருக்கிருள். அவளுக்கு வேணுமாம்.

உங்கள் உடம்பை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக் கொள்ளுங்கள்.

இப்படிக்கு,
உங்கள் அடியாள்."

# விஷ பாணம்

## 1

எதிரே மேஜையின்மேல் பல சிறு கண்ணாடிக் குழாய்கள் செங்குத்தாக ஸ்டாண்டில் வைக்கப்பட்டிருந்தன. அவைகள் ஒவ்வொன்றிலும் பலதரப்பட்ட வர்ணங்களுடைய 'ஆஸிட்'கள் பாதிவரையில் நின்றன. பக்கத்தில் இரண்டொரு 'கலுவங்கள்' அரைக்கும் குழவிகளுடன் வைக்கப்பட்டிருந்தன. அவற்றின் அடியில் பாதி அரைபட்ட திரவங்கள் தேங்கியிருந்தன.

மேஜை அருகில் உட்கார்ந்திருந்தார் பலராமன். அவருடைய பார்வை மேஜையின்மேல் விழுந்திருந்ததாயினும், அவருடைய கவனம் அங்கே இல்லை. அவருடைய கண்கள் வெறும் வெளியை நோக்கியிருந்தன. அவருடைய மனம் பல வருஷங்கள் முன்னால் போயிருந்தது.

அப்பொழுதுதான் கலாசாலையை விட்டு வெளிவந்தார் பலராமன், எம். ஏ.; வகுப்பில் ரஸாயனப் பரீக்ஷையில் ராஜதானிக்கே முதன்மையாகத் தேறினார். உலக அநுபவத்தில் அடிபடாத வாலிபத்தின் உற்சாகமும் ஊக்கமும் அவருடைய முகத்தில் தாண்டவமாடின.

"ராமகிருஷ்ணா, ரஸாயனத்தின் மூலம் மனித ஜாதிக்கு நான் எப்பேர்ப்பட்ட சேவை செய்யப் போகிறேன், தெரியுமா?" என்று அவர் கலாசாலையை விட்டு வந்ததும் தம் நண்பரிடம் சொன்னபோது, எத்தனை நம்பிக்கை ஜொலித்தது அவர் முகத்தில்!

கலாசாலையை விட்டு வந்ததும் பலராமனின் தகப்பனார் இறந்தார். அவருடைய ஏராளமான சொத்துக்கள் அவருடைய ஆதீனத்துக்கு வந்தன.

சுயாதீனம் வந்தவுடன் பலராமன் முதற் காரியமாக; ஒரு பெரிய 'லாபரடரி' (ஆராய்ச்சி சாலை) கட்டுவித்தார். பலவித நவீன ஆராய்ச்சிப் பொருள்களாலும் கருவிகளாலும் அதை நிரப்புவித்தார்.

இவ்விதம் அவர் ஏராளமான பணம் செலவழித்ததைக் கண்டு அப்பொழுது நண்பர்கள் நகைத்தார்கள். வலுவில் வந்த ஆசிரியர் பதவிகளையும் வேண்டாமென்று உதறித் தள்ளினால் நண்பர்கள் பரிகசிக்காமல் என்ன செய்வார்கள்?

அவருடைய அபிலாஷைகளுக்கு ஏற்றபடியே அவருடைய வாழ்க்கைத் துணைவியும் வாய்த்தாள். கற்பகம் உண்மையான ஹிந்து மனைவி. இந்தப் பத்து வருஷ வாழ்க்கையில் அவள் ஒரு வார்த்தை எதிர்த்துச் சொல்லியதில்லை. அவர் எது செய்தாலும் தனக்கும் சம்மதம் என்று இருந்தாள். அதோடு அவருடைய முயற்சிகளில் அவருக்கு ஊக்கமளித்து உற்சாகப்படுத்தியும் வந்தாள்.

பலராமன் ஐந்து வருஷங்கள் விடாமல் ஆராய்ச்சி செய்தார். அதற்குள் அவருடைய சொத்தில் பாதி கரைந்துவிட்டது.

முதல் முதலில், அவருடைய கவனத்தைக் கவர்ந்தது வைத்திய சாஸ்திரந்தான். ரஸாயனத்தின் மூலம் வைத்திய சாஸ்திரத்துக்கு ஒரு மகத்தான சேவை செய்ய வேண்டுமென்று அவர் நினைத்தார்.

ஐந்து வருஷங்கள் வரையில் அவருடைய முயற்சிகள் பலனளிக்கவில்லை. ஜர்மனியிலிருந்து கணக்கு வழக்கில்லாமல் புதுப் புதுக் கருவிகள் வந்தன. பலவகையான திராவகங்களைத் தருவித்தார்.

தோல்வி அடைய அடைய அவருடைய நம்பிக்கை யும் மன வலிமையும் அதிகரித்தனவே யொழியச் சற்றும் குறையவில்லை.

கடைசியில், ஆறுவது வருஷத்தில், ஆயிரக் கணக் கான ரூபாய்கள் நஷ்டமடைந்தபின், அவருக்கு ஓர் ஒளி தோன்றிற்று. ஐரோப்பிய வைத்தியர்களால் 'ஆப ரேஷன்' இன்றிக் குணப்படுத்த முடியாது என்று சொல் லப்படும் 'கான்ஸர்' (புற்று நோய்) என்ற வியாதியைச் சொஸ்தப்படுத்த வழி உண்டு என்று அவருக்குத் தோன்றிற்று. அதைக் குறித்துப் பல பரீக்ஷைகள் செய்தார்; கடைசியில் வெற்றி அடைந்தார்.

பல திராவகங்களைச் சேர்த்து, அதிலிருந்து உண்டாகும் மின்சார சக்தியின் மூலம் அதைச் சொஸ்தப்படுத்த முடியுமென்று கண்டுபிடித்தார்.

அன்று காலை, பரீக்ஷை செய்துகொண் டிருந்த அவர் திடீரென்று சந்தோஷத்தால் தாவிக் குதித்தார். 'கண்டு பிடித்துவிட்டேன்! கண்டுவிட்டேன்' என்று ஆவேசம் வந்தவர்போல் கூவினார்.

ஆனால் வெற்றி அவ்வளவு சீக்கிரத்தில் கிடைக்கப் போவதில்லை அவருக்கு. இப்பொழுதுதான் ஒரு வழி ஏற்படலாம் என்று பரீக்ஷைகள் நிரூபித்தன. இனி அது உண்மையில் சாத்தியமா என்று பரீக்ஷித்துப் பார்க்க வேண்டாமா?

மறுநாள் பலராமன் உள்ளூர் ஆஸ்பத்திரிக்குச் சென்று ஸர்ஜனைப் பேட்டி கண்டார். முதலில் இவர் சொல்லியதைக் கேட்க ஸர்ஜன் மறுத்துவிட்டார். பிறகு வேறு வழி இல்லாமல் முழுவதையும் பொறுமையுடன் கேட்டபின் உதட்டைப் பிதுக்கினார்.

"இது என்ன பிரமாதமாய்க் கண்டுபிடித்துவிட்டீர் கள்! ஜெர்மன் டாக்டரான ஹெர்-வான்-க்ளூட்ஸ் ஐந்து வருஷத்துக்கு முந்தியே இந்த மாதிரி ஏதோ

சொல்லியிருக்கிறார். இவ்விதம் மின்சார சக்தி உண்டாக்க முடியுமானால்—இருந்தாலும், இப்போது அதை நேருக்கு நேராகப் பரிசோதனை செய்தால்தான் நான் நம்புவேன். இருக்கட்டும். உங்களைப் பின்னாடி பார்க்கிறேன். அவசரமாக வெளியில் போகவேணும்—" என்று அலக்ஷ்யமாகச் சொல்லிவிட்டு வெளியே போய் விட்டார் ஸர்ஜன்.

சோர்ந்த மனத்துடன் வீடு வந்து சேர்ந்தார் பலராமன். இருந்தாலும் நம்பிக்கையை விடவில்லை. பின்னும் ஆறு மாதம் ஓயாத உழைப்பு. இராப் பகலாகத் தூக்கமின்றி உழைத்தார். ஏகப்பட்ட செலவு. பிரத்தியேகமான பல கருவிகளை வெளி நாட்டி லிருந்து வருவித்தார்.

முடிவில் ஏழு வருஷங்கள் ஓயாத உழைப்பின் பின்னர், அவருடைய ஏராளமான சொத்தில் பெரும் பகுதி ரஸாயனப் பொருள்களாகவும் விசேஷ ஆராய்ச்சிக் கருவிகளாகவும் மாறியபின், பலராமன் உருவான ஒரு வேலையைச் செய்து முடித்தார். இனிமேல் அதை நோயாளியைக் கொண்டு பரீக்ஷை செய்வதுதான் பாக்கி. அவருடைய கணக்குகள் கட்டாயம் அவருக்கு வெற்றியளிக்கும் என்று காண்பித்தன.

அவருடைய ஆராய்ச்சியின் பலனைப் பரீக்ஷை செய்யும் சந்தர்ப்பமும் கிடைத்தது.

ஒரு நாள் காலை, பலராமன் தம்முடைய வெற்றி யில் மூழ்கிக் கனவு கண்டுகொண்டே தம் அறையில் உட்கார்ந்திருந்தார். அறையைச் சுத்தம் செய்யக் கற்பகம் உள்ளே நுழைந்தாள்.

அவளைக் கண்டதும் பலராமன், "ஏன், வேலைக்காரி எங்கே?" என்று கேட்டார்.

"அவளுக்கு ஏதோ கையில் புறப்பட்டிருக்கிறதாம். வேலைக்கு வரவில்லை" என்றாள் கற்பகம்.

வேலைக்காரிக்கு ஏதோ கையில் புறப்பட் டிருக் கிறது! உடனே அவருக்கு ஒரு யோசனை தோன்றிற்று. தம்முடைய ஆராய்ச்சியின் பலனைப் பரீக்ஷித்து விட்டால் - ?

சற்று நேரத்தில் பலராமன் வேலைக்காரியின் வீட்டை விசாரித்துக்கொண்டு போய்ச் சேர்ந்தார்.

வேலைக்காரியின் வலது உள்ளங்கையில் கடுக்காய் அளவு ஏதோ புறப்பட்டிருந்தது. உடனே தம்முடைய மருந்தை எடுத்து அதன்மேல் தடவினார். அப் பொழுது அவருடைய கைகள் நடுங்கின. மனத்தில் ஏதோ விவரிக்க முடியாத ஒரு பீதி தோன்றிற்று.

மறுநாளும் அதே மருந்து வேலைக்காரிக்குத் தடவப்பட்டது. மூன்றாவது நாளை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தார் பலராமன்.

மூன்றாவது நாள் அது உடைந்துவிட்டது என்று கேள்விப்பட்டதுந்தான் அவருக்கு உயிர் வந்தது.

இன்னும் நான்கு நாட்கள்; புண் காய்ந்துவிட்டது. பலராமன் வெற்றி அடைந்துவிட்டார்! அவருள்ளம் நிலைகொள்ளாது ஆனந்தத்தால் பொங்கியது. இவ் வளவு பணமும் இவ்வளவு கால உழைப்பும் வியர்த்தம் அல்ல என்று தெரிந்ததும், தம்மை முதலில் பரிகசித்த வர்களை நினைத்தார். முதல் முதலில் புதுமையான முயற்சிகளில் ஈடுபடுபவர் எவரையும் உலகம் இப்படித் தான் ஏளனம் செய்திருக்கிறது. உலக சுபாவமே இதுதான்.

## 2

பலராமன் தம்முடைய ஆராய்ச்சிகளை வெளியுல குக்கு அறிவிப்பதற்கு வேண்டிய முயற்சிகள் செய்யத்

தொடங்கினார். மூன்று மாதங்கள் வேலை செய்து தம்முடைய ஆராய்ச்சி முழுவதையும் புத்தக ரூபமாக எழுதி முடித்தார். பிறகு தினசரிப் பத்திரிகைகளுக்கு அதைப் பற்றிய கட்டுரைகளை எழுதி அனுப்பினார். ஆனால், அவர் எழுதி அனுப்பிய ஐந்து பத்திரிகைகளில் ஒரே ஒரு பத்திரிகைதான் அவருடைய கட்டுரையைத் துணிவுடன் பிரசுரித்தது. அந்த ஆசிரியரும் உடனே அவருக்கு ஒரு கடிதமும் எழுதியிருந்தார். அதில், இவ்விதம் கற்பனையில் தோன்றியவற்றை எல்லாம் பிரசுரிப்பதால் பத்திரிகையின் நன்மதிப்புக் குறைந்து விடுவதாயும், இனியும் இதைப்பற்றி எழுதினால் பிரசரிக்க முடியாதென்றும் குறிப்பிட்டிருந்தார்.

இதனால் பலராமனுக்குப் பெருத்த ஏமாற்றமெனினும், அவர் தம் முயற்சியைக் கைவிடவில்லை. ஜில்லா ஸர்ஜனுக்கு ஒரு வேண்டுகோள் விடுத்தார். தம்முடைய முயற்சிகள் அவ்வளவையும் அதில் விஸ்தரித்துத் தாம் அதில் வெற்றி பெற்றதையும் குறிப்பிட்டு எழுதியிருந்தார்.

ஒரு மாதம் வரையில் ஜில்லா ஸர்ஜனிடமிருந்து தமக்கு அழைப்பு வரும் என்று எதிர்பார்த்தார். ஒரு மாதம் ஆயிற்று, இரண்டு மாதங்கள் ஆயின. ஒரு பதிலும் கிடைக்கவில்லை. அந்தக் கடிதத்தைப் பெற்றுக் கொண்டதற்கு அடையாளமாக ஒரு வரிகூடக் கிடைக்கவில்லை.

பிறகு மற்றொரு நீண்ட கடிதம் எழுதினார். "நான் இதைத் தங்கள் முன்னிலையில் பரிசோதித்துக் காண்பிக்கத் தயாராய் இருக்கிறேன். என்னுடைய சித்தாந்தத்தை ருஜூப்பிக்க முடியாவிட்டால் தாங்கள் கொடுக்கும் தண்டனையை ஏற்றுக்கொள்ளத் தயாராய் இருக்கிறேன்" என்று எழுதி அந்தக் கடிதத்தை ரிஜிஸ்டர் தபாலில் அனுப்பினார்.

கடிதத்தை அனுப்பிய பதினைந்தாவது நாள் பலராமனுக்கு ஜில்லா ஸர்ஜனிடமிருந்து பதில் வந்தது. அதில், "தங்களுடைய கடிதத்துக்கு ஸர்ஜன் வந்தன மளிப்பதோடு, தங்களைப் பார்க்க அவகாசப்படாது என்பதற்குப் பெரிதும் வருந்துகிறார்" என்ற ஒரே வரி காணப்பட்டது.

பலராமனுக்கு இதற்குமேல் என்ன செய்வ தென்று தெரியவில்லை. உயிரையும் பொருளையும் அர்ப்பணம் செய்து புதுச் சித்தாந்தம், இதுவரையில் கண்டு பிடிக்கப்படாத ஒரு சஞ்சீவியைக் கண்டுபிடித் தால், அதற்கு மரியாதை கிடைக்காதபோது எப்படி இருக்கும்? அதைப் பற்றிக் காதால் கேட்கக்கூட ஆள் இல்லையே!

கடைசி முயற்சியாகப் பலராமன் ஸர்ஜன் ஜென ரலுக்கு ஒரு நீண்ட கடிதம் எழுதினார். தம்முடைய அநுபவங்களை எல்லாம் விவரித்து எழுதியிருந்தார். அதோடு, தமக்குப் பேட்டியளித்தால் நேரில் தம் முடைய சித்தாந்தத்தை நிரூபித்துக் காண்பிப்பதாயும் குறிப்பிட் டிருந்தார்.

ஒரு மாதத்துக்குப் பின், தம்மைச் சென்னையில் வந்து காணும்படி ஸர்ஜன் ஜெனரலிடமிருந்து பலராம னுக்குக் கடிதம் வந்தது. அதைக் கண்டதும் அவருக் குச் சந்தோஷத்தால் உள்ளம் பொங்கியது.

ஆனால் நடக்கப்போவது அவருக்கு என்ன தெரியும்?

குறிப்பிட்ட நாளன்று, பலராமன் சென்னையை அடைந்து ஸர்ஜன் ஜெனரல் ஆபீஸ் வாசலில் தயா ராகக் காத்துக்கொண்டு நின்றார். சற்று நேரத்தில் ஒரு பியூன் அவருடைய கையில் ஒரு கடிதத்தைக் கொடுத்தான். ஆவலுடன் பிரித்துப் படித்தார்:

"தங்களுடைய நீண்ட கடிதத்தைப்பற்றி ஆலோசித்த பின். இவ்விதக் கொள்கை தங்களுடைய கற்பனையிலன்றி நடைமுறையில் சாத்தியமல்ல என்று கண்டு ஸர்ஜன் ஜெனரல், தங்களைக் காண முடியாமைக்கு வருந்துகிறார்" என்று படித்ததும் அவருடைய நிலைமை எப்படி இருக்கும்? உலகமே அவர் கண்முன் சுழல்வதுபோல இருந்தது. குறிப்பிட்டுச் சொல்ல முடியாத ஒரு நிரந்தர வெறுப்பு உணர்ச்சி அவருடைய உள்ளத்தைக் கவ்விக்கொண்டது. யார்மேலோ தீவிர ஆத்திரம் எழுந்தது.

எங்கே போகிறோம் என்று தெரியாமல். ஒருவித மான நோக்கமுமின்றிக் கால் போனபடியே தலையைக் குனிந்துகொண்டே நடந்துகொண் டிருந்தார்.

திடீரென்று, "ஹல்லோ!" என்ற சப்தம் கேட்டதும் திரும்பினார். அவர் காலடியில் ஒரு மோட்டார் வந்து நின்றது. அவருடைய கலாசாலை நண்பன் ராமகிருஷ்ணன் மோட்டாரிலிருந்து இறங்கினான்.

"என்ன பலராம், இங்கே எப்போது வந்தாய்?" என்று கேட்டுக்கொண்டே அவரைக் கையைப் பிடித்துக் காருக்குள் இழுத்துச் சென்றான். உடனே வண்டியும் புறப்பட்டது.

• "ஒரு காரியமாக வந்தேன்,—நீ இங்கேயா இருக்கிறாய்?—இப்போது எங்கே போகிறாய்?—"

"நான் பெல்லாரியில் அஸிஸ்டன்ட் என்ஜினீயராக இருக்கிறேன். இப்போது லீவில் வந்தேன். மாடர்ன் ஹோட்டலில் தங்கியிருக்கிறேன்.

"ஆமாம், எனக்குச் சாயந்தரம் ஏழு மணி வண்டிக்கு ஊருக்குப் போகவேண்டும். உன்கூட வரச் சாவகாசம் இல்லை.

"என்னப்பா அவசரம்? எல்லாம் நாளைக்குப் போகலாம்.—ஆமாம், நீ என்ன செய்கிறாய்? இங்கே எதற்காக வந்தாய்?"

பலராமன் யோசனையில் ஆழ்ந்தார். சடக்கென்று அவருடைய முகம் மாறிற்று. 'கொல்' லென்று அசாதாரணமாகச் சிரித்தார். பிறகு, "என்ன செய்கிறேன்? பிராணனை விடுகிறேன். ஏன் என்று கேட்க ஒரு கழுதை கூட இல்லை—" என்று அவர் முடிப்பதற்குள் ராமகிருஷ்ணன் குறுக்கிட்டான். அவன் குரலில் ஒருவிதமான பீதியும் ஆவலும் தொனித்தன.

"என்ன பலராம்! என்ன விசேஷம்? என்ன ஆயிற்று? சொல்லு, என்னால் ஆகக்கூடியது ஏதாவது—"

"உன்னால் ஒன்றும் ஆகக்கூடியதில்லை. இவ்வளவு தூரம் என்னைப்பற்றி நீ விசாரிப்பதே என்னுடைய பாக்கியம். ஆனால், என்னைப்பற்றி நான் சொல்ல ஆரம்பித்தால் நீயும் இங்கேயே என்னை நடுரோட்டில் இறக்கி விட்டு விடுவாய். பொறுமையுடன் நான் சொல்வதைக் கேட்கிறேனென்று வாக்களித்தால் என்னைப் பற்றிச் சொல்லுகிறேன். என்னுடைய கடந்த காலத்து அநுபவத்தினால் உலகத்தில் எனக்கு அவ்வளவு நம்பிக்கை பிறந்திருக்கிறது. சொல்லட்டுமா?"

"என்ன பலராம், இப்படிப் பேசுகிறாய்! எனக்கு ஆச்சரியமாய் இருக்கிறது. நீதானா இப்படியெல்லாம் பேசுவது? ஒப்புக்கு உன்னைக் குசலம் விசாரித்தேனென்று நினைத்தாயா?"

வில்லிலிருந்து பாயும் அம்புபோல் தார் ரோட்டில் 'ஸர்' என்ற சத்தத்துடன் மோட்டார் விரைந்து கொண்டிருந்தது.

பலராமன் ஜன்னல்வழியே நோக்கிக்கொண்டே பேசலானார்.

"கலாசாலையை விட்டு வந்ததும், உன்னிடம் சொன்னது ஞாபகம் இருக்கிறதா? உலகத்துக்கே ஒரு பெரிய சேவை செய்துவிடப் போவதாக நினைத்தேன். அதற்காக என் சொத்து அவ்வளவையும் 'ரஸாயன மய'மாக மாற்றினேன். இப்பொழுது முடிவென்ன? ஆனால் ஏதோ கண்டுபிடித்தேன். அது எவ்வளவு முக்கியமானதென்று எனக்குத் தெரியும். இப்பொழுது நிலைமை இதுதான். வீட்டில் சாப்பாட்டுக்கு வழி இல்லை. என்னுடைய ஆராய்ச்சியைப் பற்றிப் பேச் செடுத்தால் எல்லோரும் ஒரு மைலுக்கு ஓடுகிறார்கள்; எல்லோரும் பெரிய மனிதர்கள். அறிவாளிகள்தாம். இதுதான் என்னைப்பற்றி."

சிரத்தையுடனும், ஆவல் கலந்த வியப்புடனும் கேட்டுக்கொண் டிருந்த ராமகிருஷ்ணன் கேட்டார்.

"நீ எதைக் கண்டுபிடித்தாய்?"

"ஆபரேஷனின்றிக் கான்ஸருக்குச் சிகிச்சை செய்யலாமென்று."

"நிச்சயமாகவா! அதெப்படி முடியும்?"

"முடியுமென்று நான் கண்டுபிடித்து விட்டேன்."

ராமகிருஷ்ணன் சற்று யோசித்தான். பிறகு, "எனக்கு ரஸாயனத்தைப்பற்றி ஒன்றும் தெரியாது. என்னுடைய நண்பர், மேஜர் டுமா மெடிகல் காலேஜில் பிரின்ஸிபாலாக இருக்கிறார். அவரைக் கண்டு நான் நாளைக்குப் பேசுகிறேன். பார்ப்போம். உன்னுடைய சித்தாந்தத்தை எழுதி என்னிடம் கொடு. அது வரையில் நீ என்னுடனேயே இருக்கவேண்டும்" என்றான்.

இதனால் பலராமன் ஒன்றும் விசேஷமாகச் சந்தோஷம் அடைந்துவிடவில்லை. ஆனால் ஆசைமட்டும் சொல்பம் இருந்தது.

அலக்ஷ்யமாக "என்னவோ, நீ பார்ப்பதைப்பற்றி எனக்கு ஒன்றும் ஆட்சேபம் இல்லை" என்றார்.

இதற்குள் மோட்டாரும் மாடர்ன் ஹோட்டல் வாசலை அடைந்து நின்றது.

## 3

தம்முடைய நண்பன் ராமகிருஷ்ணனுடைய முயற்சியும் வினைதைப்பற்றிப் பலராமன் பெரிதும் ஏமாற்றம் அடைந்துவிடவில்லை. ஏனெனில், ஏற்கனவே அவருடைய மனத்தில் ஒருவித வெறுப்பும் கசப்பும் ஊற்றெடுக்கத் தொடங்கிவிட்டன.

சென்னையிலிருந்து வந்த பிறகு அவரிடம் ஏற்பட்ட மாறுதலைக் கண்ட கற்பகம் பெரிதும் வியப்படைந்தாள். எப்படிப்பட்ட கஷ்டகாலத்திலும் நெருக்கடியிலும் அவருடைய முகத்தில் மலர்ச்சியும் புன்னகையும் தவிர வேறொன்றையும் கண்டறியாத அவளுக்கு அவருடைய நடத்தையில் மாறுதலைக் காணப் புதுமையாக இருந்தது. முன்போலக் கலகலப்பாகப் பழகுவதில்லை. சதா ஏதோ தம்மை மறந்து யோசனையில் ஆழ்ந்தவண்ணம் இருந்தார். முகத்தில் கவலையின் அடையாளங்கள் பதிய ஆரம்பித்தன. ஆனாலும் அவருடைய உண்மையான நிலைமை பின்னுடிதான் பூர்ணமாகத் தெரிந்தது.

ஒரு நாள் காலை வீட்டில் சமையலுக்கு அரிசி இல்லை. அவருடைய அறைக்குள் நுழைந்தாள் கற்பகம். தலையைக் குனிந்தவண்ணம் ஏதோ எழுதிக்கொண்டிருந்தார் பலராமன்.

கற்பகம் மெதுவாக, "அரிசி இல்லையே!" என்றாள்.

பலராமன் பேசவில்லை. அவளுடைய வார்த்தைகள் காதில் விழுந்ததாகக்கூடத் தெரியவில்லை.

மறுபடியும் சற்று உரக்கச் சொன்னாள் கற்பகம்: "அரிசி இல்லையே! இப்படி ருஜு இல்லாமல் எல்லா வற்றையும் தொலைத்துவிட்டு—"

அவள் பேசி முடிக்கவில்லை. சடக்கென்று திரும்பினார் பலராமன். அவருடைய முகம் கோபத்தால் ஜொலித்தது.

"இல்லாவிட்டால் நீயும் தொலை! இங்கே நிற்க வேண்டாம். பிராணனை வாங்குகிறது சனியன்கள்!"

கற்பகத்தின் தேகம் 'கிடுகிடு' வென்று நடுங்கியது. இதுவரையில் அவள் இப்படிப் பார்த்ததே இல்லை அவரை.

"நான் தெரியாத்தனமாக.." என்று ஏதோ பேச ஆரம்பித்தாள். அவள் குரல் தழுதழுத்தது. கண்கள் மளமளவென்று நீர் சொரிந்தன. உடனே அங்கிருந்து 'விர்'ரென்று திரும்பினாள்.

பலராமன் திரும்பிப் பார்த்தார். அவருடைய கண்களிலும் நீர் துளும்பிற்று.

## 4

இரண்டு வருஷங்கள் கடந்தன. பலராமனுடைய நிலைமையில் யாதோர் அபிவிருத்தியும் இல்லை! அவருடைய மனம் நொடிந்து நொறுங்கிக் கீழ்நோக்கிப் போய்க்கொண் டிருந்தது. அவருடைய அதிருப்தி வளர வளர அவருடைய வெறுப்பும் முன்கோபமும் வளர்ந்தன.

அவர் தம்முடைய ஆராய்ச்சியைப் பற்றி வெளியில் பிரஸ்தாபிப்பதுகூட இல்லை. ரஸாயனப் பொருள்களையும் கருவிகளையும் மூட்டை கட்டி எட்டி வைத்துவிட்டார். அந்த அறையை அவர் திறப்பதுகூட இல்லை.

இரவு ஏழு மணி இருக்கும். வீட்டு வெளி வராந்தாவில் உலாவிக்கொண்டே இருந்தார் பலராமன். அவருடைய முகம் ஒருவிதமான ஆவலையும் பரபரப்பையும் தோற்றுவித்தது.

திடீரென்று வேலைக்காரி ஓடிவந்தாள். "வாங்க வாங்க, அழைக்கிறாங்க" என்றாள்.

பரபரவென்று உள்ளே நுழைந்து பின்னறையை அடைந்தார் பலராமன்.

அங்கே கட்டிலின்மேல் கிடந்தாள் கற்பகம். அவளுக்குப் பக்கத்தில் காலைத் தூக்கி உதைத்துக் கொண்டு கிடந்தது குழந்தை; அவருடைய மகள்.

குழந்தை பிறந்தது முதல் சென்ற இரண்டு வாரமாகக் கற்பகத்துக்கு ஜுரம். முதலில் ஜுரம் சாதாரணமாகத்தான் அடித்தது. அதை ஒருவரும் கவனிக்கவில்லை. ஜுரம் முற்றி ஜன்னியில் கொண்டு வந்துவிட்டது. பலராமன் உள்ளூர் டாக்டரிடம் ஓடினார். ஆனால் ரூபாய் இல்லாமல் எந்த டாக்டர் வருவார்?

கடைசியில் நாட்டு வைத்தியரைக் கொண்டு ஏதோ மருந்து கொடுக்கச்சொன்னார். ஆனால் பிரயோஜனம் ஒன்றும் இல்லை. வர வர ஜன்னி அதிகரித்ததேயொழியக் குறையவில்லை.

கட்டிலண்டை நாற்காலியில் உட்கார்ந்தார் பலராமன். கண்ணீர் ததும்பிய அவருடைய கண்கள் பளபளவென்று மின்னின.

கையை மெதுவாக அசைத்துவிட்டு ஈனஸ்வரத்தில், "குழந்தையைப் பார்த்துக்கொள்ளுங்கள்" என்று ஒரே வார்த்தைதான் சொன்னாள்.

அவளுடைய கண்கள் மூடின. ஆவி உடலை விட்டுப் பிரிந்தது.

அறை முழுவதும் ஒரே அந்தகாரம் சூழ்ந்தது போல இருந்தது அவருக்கு. அப்படியே ஸ்தம்பித்து உட்கார்ந்திருந்தார். வாழ்க்கையே இருண்டுவிட்டது போல இருந்தது.

கூச்சலிட்டுக்கொண்டு காலைத் தூக்கி விழுக்கு விலுக்கென்று காற்றை நோக்கி உதைத்தது குழந்தை. அதற்குத் தெரியுமா சுற்றியுள்ள நிலைமை?

## 5

பத்து வருஷங்கள் கழிந்தன.

திருச்சிராப்பள்ளிக்கு இருபது மைல் கிழக்கேயுள்ளது, கோவிலடி என்ற கிராமம். அதற்கு வடபுறம் கொள்ளிடம், தென்புறம் காவேரி. இரண்டு பக்கங்களிலும் ஆறுகள் ஊரை ஒட்டியே ஓடுகின்றன. அந்தக் கிராமத்தில் பலராமனுக்குச் சொந்தமான செழிப்பு நிலங்கள் இருந்தன. ஆனால் இப்போது எல்லாம் போய்விட்டன. முதல் முதலில் அவர் அதிக விலை போகும் என்பதற்காக இந்த நிலங்களைத்தான் விற்றார். ஆனால் ஊருக்கு மேற்கே மாந்தோப்பில் இருந்த பங்களா மாத்திரம் அப்படியே இருந்தது.

மனைவி இறந்ததும் நகர வாழ்க்கையில் வெறுப்படைந்த பலராமன கிராமத்தில் வந்து தம்முடைய பங்களாவில் குடியேறினார்.

மனைவியுடன் அவருக்கு வாழ்க்கையில் இருந்த சொல்பப் பிடிப்பும் மறைந்தது.

ஆனால், கொஞ்ச காலத்தில் அவருடைய இருண்ட வாழ்க்கையை ஒரு சிறிது பிரகாசிக்கச் செய்ய அவருடைய குழந்தை அஞ்சனை வந்திருப்பதாக உணர்ந்தார். அதோடு அந்தக் குழந்தையின் பாரம் அவருடைய

தலையில் ஏறிற்று. ஆனால் அது அவருக்கு ஒரு சிரம மாய் இல்லை; இனிமையாக இருந்தது.

பத்து வருஷமாக அவருடைய வாழ்க்கையை ஒளி பெறச் செய்து வருகிறாள் அஞ்சனை. எப்போதும் மங்கியிருக்கும் அவருடைய முகம் குழந்தையைக் கண்டதும் மலரும்.

அவர் மட்டும் தனியே உட்கார்ந்து என்னவோ யோசித்துக்கொண் டிருப்பார்: குழந்தை ஓடி வந்து, "அப்பா, அப்பா, அங்கே ரோஜாப்பூ இருக்கோல் லியோ, அது கிட்ட ஒரு சின்னக் குருவி இருந்தது, அப்பா..." என்று கொஞ்சிக் கொஞ்சிச் சொல்லு வாள்.

உடனே குழந்தையை வாரி எடுத்து முத்தமிட்டுத் திருப்தியாகாது அவருக்கு. அவருடைய கர்வம் ஓங்கி உச்சியை அடைந்துவிடும். எங்கிருந்தோ தோன்றிய பிரகாசத்தால் ஜொலிக்கும் அவருடைய முகம். அந்தச் சில நிமிஷங்களே அவருடைய வாழ்க்கையில் சொர்க்க வாசம்.

இந்த வாழ்க்கையில் அவருக்கு வேறு என்ன இருக்கிறது? அவருடைய ஆயுளையும் அர்ப்பணம் செய்து ஓர் அதியபூர்வ சித்தாந்தத்தைக் கண்டுபிடித் தார். அது உலகத்தால் நிராகரிக்கப்பட்டது. அவரு டைய வாழ்வின் முயற்சிகளில் அவரை ஊக்கி உற்சாகப் படுத்தி வந்த மனைவியும் மறைந்தாள்.

கடைசிக் காலத்தில் மனித ஜாதியை அவர் வெறுத்து, அவருடைய வாழ்வே மங்கி, இருண்டு மறையும் சமயம் அதில் சிறு ஒளியை, விநாடி இன்ப சொர்க்கத்தைக் கொண்டுவந்தாள் அஞ்சனை. அவளை வளர்ப்பதே, அவளைத் திருப்திப்படுத்துவதே தம்முடைய வாழ்க்கை லக்ஷ்யமாகக் கொண்டார்.

அவருடைய வாழ்க்கையே அவள்தான்.

கடந்த பத்துப் பன்னிரண்டு வருஷங்களாக அவர் தம்முடைய ஆராய்ச்சியைத் திரும்பிப் பார்க்கவே இல்லை. கிராமத்துக்கு வரும்போது கூடவே அந்த ஆராய்ச்சிச் சாதனங்களை எல்லாம் பெரிய பெட்டிகளில் அடைத்துக் கொண்டுவந்திருந்த போதிலும், அவற்றைத் திறந்து பார்க்கவும் இதுவரையில் துணிந்ததில்லை. ஆனால் அதை முற்றும் மறக்கமட்டும் அவரால் முடியவில்லை.

ஒரு நாள் ஒரு சம்பவம் நிகழ்ந்தது. அதன் பிறகு அவருடைய பழைய நினைவுகள் கொஞ்சம் கொஞ்சமாகத் தலையெடுக்க ஆரம்பித்தன. வழக்கம்போல் அன்று மாலை அஞ்சனையுடன் அவர் காவேரிப் பக்கம் உலாவி வரக் கிளம்பினார். அப்பொழுது வீட்டு வாசலில் ஒரு மோட்டார் வந்து நின்றது.

அதிலிருந்து ஒருவர் இறங்கி வீட்டை நோக்கி வந்தார். வந்தவர் பலராமனைக் கண்டதும் நின்று, "ஸார், காருக்குக் கொஞ்சம் ஜலம் ஊற்ற வேண்டும். பக்கத்தில் கிணறு இருக்கிறதா?" என்று கெஞ்சும் பாவனையாகக் கேட்டார்.

அவரை நிமிர்ந்து பார்த்த பலராமன் திடீரென்று, "யார், ராமகிருஷ்ணனா?" என்று கூவினார்.

அதைக் கேட்ட ராமகிருஷ்ணனும். "என்ன பலராம்! நீ இங்கே—என்ன கிழடாகிவிட்டாயே இப்படி! அதுதான் அடையாளம் தெரியவில்லை" என்றான்.

ராமகிருஷ்ணனை உள்ளே அழைத்துக்கொண்டு போனார் பலராமன். நண்பர்களிடையே குசலப் பிரச்னம் நடந்தது. பிறகு ராமகிருஷ்ணன் அன்றிரவு அங்கேயே தங்கிவிட்டுப் போகச் சம்மதித்தான்.

சாப்பாட்டுக்குப் பின் நண்பர்கள் இருவரும் பழைய நாட்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தனர்.

அப்போது திடீரென்று ராமகிருஷ்ணன் கேட்டான்: "என்ன பலராம், நீ ஆராய்ச்சி பண்ணினயே, அது என்ன ஆயிற்று?" என்று.

"என்ன ஆவது, ஒன்றும் ஆகவில்லை" என்று அசிரத்தையாகப் பதிலளித்தார் பலராமன். ஆனால் ஆறின புண்ணைக் கிளறுவதுபோல நண்பன் அவர் மறக்க முயன்றுகொண்டிருந்த விஷயத்தைப்பற்றிப் பேசவே, அவருடைய மனத்தில் பழைய நினைவுகள் ஒன்றன்மேல் ஒன்றாய்க் குவியத் தொடங்கின. அவற்றை யொட்டிய கஷ்டங்களே அவர் கண்முன் வந்து தோன்றி அவருடைய உள்ளத்தை வாட்ட ஆரம்பித்தன.

மேலும் சொல்லலானான் ராமகிருஷ்ணன்: "என் நண்பர் ஒருவரிடம் உன்னைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தேன். அவர் இப்போது ஜர்மனிக்குப் போயிருக்கிறார். அவரிடமிருந்து நேற்றுத்தான் ஒரு கடிதம் வந்திருக்கிறது. உன்னுடைய சித்தாந்தத்தை விவரித்து எழுதி அனுப்பச் சொல்லியிருக்கிறார். இதை அவர் பெர்லினிலுள்ள விஞ்ஞான ஆராய்ச்சி சபைக்கு அனுப்பப் போவதாகச் சொல்லுகிறார். நீ எங்கே இருக்கிறாய் என்றே எனக்குத் தெரியாது. இன்று தஞ்சாவூரிலிருந்து திருச்சிராப்பள்ளிக்குப் போய்க்கொண்டிருந்தேன். இங்கே வந்ததும் மோட்டாரில் ஜலம் வற்றி விட்டது."

சற்று நேரம் மௌனமாக இருந்தார் பலராமன். பிறகு கீழ் நோக்கிய கண்களை எடுக்காமல் அலக்ஷ்யமாகச் சொன்னார். "ராமகிருஷ்ணா, எனக்கு ஆசை எல்லாம் போய்விட்டது. . எனக்கு இப்போதுள்ள ஆசை எல்லாம், இதோ இந்தக் குழந்தைதான். . . . நான் என்னுடைய எல்லாவற்றையும் தத்தம் செய்து ஒரு ரத்தினம் கண்டுபிடித்தேன். (அவருடைய குரலில் ஆத்திரமும் படபடப்பும் தொனித்தன.)

அதற்கு எனக்குக் கிடைத்ததெல்லாம் பைத்தியக்காரப் பட்டந்தான்! உலகத்தையே நான் வெறுக்கத் தொடங்கி விட்டேன். எனக்கு இனி உலகத்தின் புகழ் வேண்டிய தில்லை! ஏதோ இன்னும் கொஞ்ச காலம்....''

"இதென்ன பலராம், இப்படிப் பேசுகிறாய்? உன்னுடைய சித்தாந்தம் சரியாய் இருந்தால் கட்டாயம் எடுபடும்....''

"சரியோ தப்போ, மனித ஜாதியின் நியாயத்தில் எனக்கு நம்பிக்கை இல்லை. என்னுடைய நியாயத்தைத் தீர்க்க மனிதனிடம் நான் கைகட்டி நின்ற காலமெல் லாம் போய்விட்டது. எனக்கு வேண்டுவது இனி ஒன்றும் இல்லை. என்னைப் பார்த்து அநுதாபப் படுவதைப்போன்ற அவமானம் எனக்கு வேறொன்றும் இல்லை.''

"நீ ஒன்றும் செய்ய வேண்டாம். என்னிடம் அந்த எழுத்துப் பிரதியைக் கொடுத்துவிடு. பாக்கி எல்லாம் நான் செய்துகொள்கிறேன்.''

"அப்படியானால் உன் திருப்தியை நான் கெடுக்க வில்லை. ஆனால் இதில் எனக்கு அக்கறை எல்லாம் மறைந்துவிட்டது என்றுதான் சொன்னேன். பன்னி ரண்டு வருஷங்கள் ஆகிவிட்டன, நான் அந்தப் பாழாய்ப் போன சாமான்களைத் தொட்டு....'' என்று கடைசி யில் ஒருவாறு சம்மதித்தார் பலராமன்.

## 6

நண்பன் வந்துவிட்டுப் போனபின்பு ஒரு புது மாறுதல் ஏற்பட்டது பலராமனிடம். இவ்வளவு கால மாக அடைபட்டுக் கிடந்த அவருடைய ஆராய்ச்சி மூளை புது ஜீவனுடன் கிளம்பிச் சுறுசுறுப்பைத் தேடியது. இருந்தாலும் பழையபடி அந்தச் சாமான்களைத் தொட அவருடைய நெஞ்சு துணியவில்லை.

ஒரு நாள் யதேச்சையாக மூடி வைத்திருந்த பெட்டிகளைத் திறந்தார். அதிலுள்ள சாமான்களை எடுத்து வரிசையாக மேலே வைத்தார். உடனே அவைகளை எடுத்து உள்ளே வைத்துப் பூட்டிவிட்டு அறையை விட்டு வெளியேறினார்.

அவருடைய ரத்தத்திலேயே ஊறிக் கிடந்தது போன்ற ஆராய்ச்சி உணர்வின் வேகத்தை அவரால் தடுக்க முடியவில்லை. எப்பொழுதாவது ஒவ்வொரு நாள் கருவிகளை எடுத்து வைத்துக்கொண்டு ஒருவித நோக்கமும் இன்றிப் பரீக்ஷைகள் செய்ய ஆரம்பிப்பார்.

இவ்விதம் பல நாட்கள் கழிவதற்குள் தினசரி சில மணி நேரம் பரீக்ஷைகள் செய்வது அவருக்கு வழக்கமாகி விட்டது. விஞ்ஞானப் பொருள்களிடையே இருக்கும் போதெல்லாம், அடிக்கடி பழகிய அந்நியோன்னிய நண்பர்களிடையே இருப்பதுபோன்ற உணர்ச்சி உண்டாயிற்று அவருக்கு.

சில மாதங்களில் யதேச்சையாக ஆரம்பித்த பழக்கத்திலிருந்து மிகவும் தீவிரமாக இறங்கிவிட்டார் ஆராய்ச்சிகளில்.

அவர் பழையபடி ரஸாயன வேலையில் ஈடுபட்டு ஐந்தாறு மாதங்கள் இருக்கும். ஒரு நாள் அவருக்குத் திடீரென்று ஒரு யோசனை தோன்றிற்று. 'ஸெல்' வைத்து, அதிலிருந்து மின்சார சக்தியை அவர் முன்பு கண்டு பிடித்த திராவகக் குழம்பின்மேல் பாய்ச்சிக்கொண் டிருந்தார். அப்பொழுதுதான் அந்த யோசனை தோன்றிற்று. அந்தக் குழம்பிலுள்ள மின்சார சக்தியை அதிகப்படுத்தினால் என்ன ஆகும்?

உடனே எழுந்தார். அவருடைய முகத்தில் ஒரு பிரகாசம். குழிவிழுந்த கண்களில் ஓர் ஒளி. அந்தக் குழம்பிலுள்ள பொருள்களைக் கணக்கெடுத்துக் குறித்துக்கொண்டு ஏதோ கணக்குப் பண்ண ஆரம்பித்தார்.

இவ்விதம் ஒரு மணி சாவகாசம் கணக்குப் பார்த்த பின் அவருக்கு ஒரு விநோதமான உண்மை புலனாயிற்று.

அந்தக் குழம்பின்மேல் மின்சாரத்தைப் பாய்ச்சுவதனால் ஓர் அபூர்வ சக்தி சிருஷ்டி செய்யப்படுகிறது என்று அவருடைய கணக்குகள் காண்பித்தன. அதிலிருந்து உற்பத்தியாகும் கிரணத்துக்கு, இதுவரையில் கண்டறியாத ஓர் அபூர்வ சக்தி இருக்கும் என்று தெரிந்தது.

மறுநாளிலிருந்து அவர் பழையபடி பேயாய், இராப் பகலாய் உழைக்க ஆரம்பித்தார். ஒரு வாரத்துக்குப் பின் அவருக்கு வெற்றி கிடைத்தது. அந்த அபூர்வ 'கிரணத்'தை அவர் உற்பத்தி செய்துவிட்டார்!

ஒரு நாள் மாலை. சாலையோரமாக இருந்த தம் அறையில் வேலை செய்துகொண்டிருக்கிறார். அவர் அந்தத் திரவபதார்த்தத்தின் மின்சார சக்தியை அதிகப் படுத்திக்கொண்டிருக்கிறார்.

அதே சமயம் ரஸ்தாவில் ஒரு மோட்டார் வெகு வேகமாக வந்துகொண்டிருந்தது. திடீரென்று இவருடைய அறைக்கு நேராக வந்ததும் நின்றது. சத்தத்தைக் கேட்டு நிமிர்ந்து பார்த்தார் பலராமன்.

வண்டியிலிருந்து இரண்டு பேர் இறங்கினார்கள். அவர்கள் மோட்டாரின் முன்யந்திரங்களை தூக்கிப் பார்த்து ஏதோ செய்துவிட்டுப் புறப்பட யத்தனம் செய்தார்கள். ஆனால் வண்டி புறப்படவில்லை.

"எல்லாம் சரியாக இருக்கிறதே!"

"டயர்?"

"அதுவும் பழுதில்லை; எஞ்சின் மிகவும் சரியாய் இருக்கிறது."

"பின் ஏன் தகராறு?"

"தெரியவில்லையே—இது ஆச்சரியமாய் இருக்கிறதே!" என்ற சம்பாஷணை அவருடைய காதில் விழுந்தது. உடனே அவருடைய கை தானாக ஆராய்ச்சிக் கருவியின் பக்கம் சென்றது. உடனே அதை அந்த இடத்தை விட்டு நகர்த்தினார். மோட்டார் கிளம்பிவிட்டது!

அவருக்கும் விஷயம் விளங்கிவிட்டது. இந்த அபூர்வ ரேகை மோட்டாரின் யந்திர சக்தியைத் தாக்கி எஞ்சினை நிறுத்திவிட்டது.

ஆனால் இதே ரேகையை மனிதன்மேல் செலுத்தினால் என்ன ஆகும்?—அவனும் ஒரு யந்திரந்தானே. இதன் சக்தியைப் பன்மடங்கு அதிகப்படுத்தி மனிதன் மேல் செலுத்தினால் அதனால் அவனுடைய உயிருக்கு ஆபத்து வருமோ? இவ்விதம் பல கேள்விகள் ஒன்றன் மேல் ஒன்றாய் எழுந்தன, அவருடைய ஆராய்ச்சி மூளையில்.

இரண்டொரு மாதங்களில் அவருடைய சித்தாந்தங்கள் அவ்வளவையும் நடைமுறைக்குக் கொண்டுவந்து விட முடியும் என்று கண்டுபிடித்தார். கடைசியில் மனிதனைக் கொல்லக்கூடிய, மனித ஜாதியையே அடியோடு அழித்துவிடக்கூடிய ஓர் அபூர்வ ரேகை அவருடைய கையில் இருக்கிறது. அந்த வெற்றி நினைப்பில் அவருடைய உள்ளம் திருப்தியுடன் ஓங்கி உயர்ந்தது.

காலை பத்து மணி இருக்கும். தம்முடைய அறையின் கதவைச் சாத்திக்கொண்டு வாசலுக்கு நேராக உட்கார்ந்து ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கிறார் பலராமன். அந்த அபூர்வ சித்தாந்தத்துக்குக் கடைசிப் பரீக்ஷைகள் செய்துகொண்டிருக்கிறார். இன்னும் ஒரே ஒரு திராவகந்தான் பாக்கி. அது ஒழுங்காகக் கலந்துகொண்டுவிட்டால் அவருக்கு வெற்றி. அந்த மனித [illegible] விஷ பாணத்தைக் கண்டுபிடித்துவிட்டார்

நடுங்கும் கைகளோடு அந்தக் கடைசித் திராவகத்தை எடுத்து ஊற்றினார்.

"அப்பா, அப்பா, ஜர்மனியிலேயிருந்து ஒரு கடிதம் வந்திருக்கு."

பேரிடி விழுந்தவர் போல், "ஐயோ!" என்று கூவினார் பலராமன். அவருடைய முழு ஆவியின் சோகக் கூக்குரல் அந்த ஒரு வார்த்தையில் பிரதி பலித்தது.

ஒரே விநாடி; அந்தக் கொடுங் கருவியைத் தம் பக்கம் திருப்பினார்.

அவருடைய ஆயுளின் வெற்றியை அவர் அறியாத போதிலும், அவருடைய ஆவி திருப்தியுடன் மகளைப் பின்தொடர்ந்தது.

# ஹாஸ்யப் பத்திரிகாசிரியன்

## 1

"போர்மென்!"

"ஸார்!"

"இன்னும் எவ்வளவு பக்கம் 'மேட்டர்' வேணும்?"

"ஏழு பக்கம் வேணும், ஸார்."

"ஏழு பக்கமா?"

"ஆமாம், ஸார்."

"வேறே 'கம்போஸ்' கையிலே ஏதாவது இருக்கிறதா?"

"ஒண்ணுமே இல்லே, ஸார்."

"கடைசிப் பாரம் எப்போது ஏற்றணும்?"

"சாயந்தரம் ஆறு மணிக்கு ஏத்தணும், ஸார். அப்பக்கூட ராத்திரி வேலே செஞ்சாகணும், ஸார். இல்லாட்டி நாளைக்குப் பத்திரிகை வர முடியாது."

"ஊ-ம்-ம்."

நான் பெருமூச்சு விட்டேன். அப்போது காலை மணி பதினென்று. அன்று சாயந்தரம் கடைசிப் பாரம் அச்சடிக்க வேண்டுமானல் அப்போதே பன்னிரண்டு மணிக்குள் 'கம்போஸ்' செய்ய விஷயம் கொடுத்தாக வேண்டும். உடனே விஷயம் கொடுக்காவிட்டால் பத்திரிகை வர வேண்டிய தேதிக்குள் வராது. ஒரு நாள் தாமதம் ஆகிவிடும்.

"போய், ஸப் எடிட்டர் ரங்கசாமியை வரச்சொல்லும்" என்றேன்.

'போர்மென்' போய் ஒரு நிமிஷத்துக்கெல்லாம், ஸப் எடிட்டர் ரங்கசாமி உள்ளே நுழைந்தான்.

"கையில் ஏதாவது மேட்டர் இருக்கிறதா?" என்று அவனைக் கேட்டேன்.

"ஒன்றுமில்லையே. நீங்கள்..அந்தக் கதை..கடைசி அத்தியாயம்......"

"அது எனக்குத் தெரியுங்காணும்; வேறு ஏதாவது இருக்கா?"

"வேறொண்ணும் இல்லையே! ஆனால் போன வாரம் வந்ததே 'சுக்குப்பொடி' எழுதின 'கத்திரிப்பிஞ்சு' என்ற கதை இருக்கு.....அதைக்கூட......"

"அதென்ன கதை அது?"

"அது...ஒருவன், கலாசாலைப் பட்டம் பெற்றவன். வேலையில்லாமல் திண்டாடிவிட்டுக் கடைசியில் கிராமத்துக்குப் போகிறான். அங்கே ஒரு கத்தரித் தோட்டத்திலே ஒரு பெண் ஜலம் விட்டுக்கொண்டிருக்கிறாள். இவன் அவளைப் பார்த்ததும் காதல் கொள்ளுகிறான் உடனே........."

"த்ச் சூ, சூ........"

"அவளும் இவனைக் கண்டதும் காதல் கொள்ளுகிறாள். உடனே ஒரு பாட்டுப் பாடுகிறாள்....."

என்னால் அதற்குமேல் தாங்க முடியவில்லை.

"ஐயையோ, போதும், போதும்; நிறுத்தும்; முதலில் அந்தக் கதையைத் தபாலில் திருப்பி அனுப்பிவிடும். இந்தாரும், சாயந்தரம் அனுப்பலாம். நீர் எழுதினது ஏதாவது இருக்கா?"

"நான் எழுதினது மூன்று கதை, ஒரு கட்டுரை, எல்லாம் ஏற்கனவே இந்த வாரம் போட்டாச்சு: 'ஸப் இன்ஸ்பெக்டரும் குப்பமன்னியும், சற்குண சாந்தா வின் சங்கட....'"

"போதும், போதும்! வேறு ஏதாவது இருக்கா?"

"இல்லை...இந்த வாரம் உங்க கதை முடியப்போகிற தென்று போன வாரமே....."

"சரி, சரி போம்."

ரங்கசாமி போய்விட்டான். நான் யோசனையில் ஆழ்ந்தேன்.

என்ன செய்வது? ஏதாவது விஷயம் கொடுத்தாக வேண்டும்.

ஸப் எடிட்டர் சொன்னது வாஸ்தவந்தான். நான் சென்ற நான்கு வாரங்களாக எழுதிவந்த, 'வயிறு வெடிக்கச் செய்யும்' ஹாஸ்யக் கதையின் கடைசிப் பாகம் அந்த வாரம் வெளிவந்தாக வேண்டும். அந்தக் கதையின், 'நகைச்சுவை சொட்டும் எதிர்பாரா முடிவை எதிர் பாருங்கள்!' என்று முந்திய வாரமே போட்டிருந் தது. அதனால் பத்திரிகை விற்பனையில்கூடப் பத்துச் சத விகிதம் அதிகரித்திருப்பதாக 'ஸர்க்குலேஷன் மானே ஜர்' என்னிடம் தெரிவித்திருந்தார்.

ஆனால் நான் எப்படி எழுதுவது? என் மூளை வேலை செய்ய மறுத்தது. என் கைகள் அர்த்தமில்லாமல் மேஜைமேல் கிடந்த வர்ணப் பென்சிலையும் பேனாவை யும் மாறி மாறி எடுத்துக் காகிதத்தில் கிறுக்கின.

என்ன எழுதுவது?

என் சுய உணர்வு என்னிடம் இல்லை. ஆனால் நிலை மையின் தேவையையும் அவசியத்தையும் மாத்திரம் மனம் உணர்ந்திருந்தது. அதையும் மறந்து விடக் கூடாதா? என் மனத்தில் நிதானம் தவறிவிட்டது. என்னை

என்னவோ தோன்றிற்று. கைகள் வெகு துரிதமாகப் பென்சிலால் கிறுக்க ஆரம்பித்தன. என் மன வேதனையில், அந்த நிலைமையில் பைத்தியம் வெகு தூரத்தில் இல்லை.

மேஜைமேல் உடைக்கப்பட்டுக் கிடந்த கவர் என்னைப் பார்த்துச் சிரித்தது.

## 2

'உலகத்திலேயே நமது அநுதாபத்துக்கு ரொம்பவும் பாத்திரமான ஜந்துக்கள் ஹாஸ்யப் பத்திரிகாசிரியர்கள்தாம்' என்று நான் கலாசாலையில் படித்தபோது ஏதோ ஒரு புத்தகத்தில் படித்திருக்கிறேன். ஆனால் அப்போது அதைப் படித்தவுடன் சிரித்தது இன்னும் எனக்கு ஞாபகம் இருக்கிறது. 'ஹாஸ்யப் பத்திரிகாசிரியர்களைப் போல் மனித ஜாதிக்குச் சேவை செய்யக்கூடியவர்கள் யார் இருக்கிறார்கள்? உலகத்தின், மனித ஜாதியின் துக்கத்தையெல்லாம் விரட்டியடிப்பதைவிடச் சிறந்த சேவை என்ன இருக்க முடியும்? அப்படிப்பட்டவர்களைப் பார்த்துக் கையெடுத்துக் கும்பிடாமல் அநுதாபப்படுவதாவது? இது கேலிக்கூத்தில்லையா?......' என்றெல்லாம் நான் அந்தக் காலத்தில் நினைத்தது உண்டு.

ஆனால் நானே அந்த நிலைமையை அடைந்து என்னை ஆராய்ந்து பார்த்துக்கொள்ளும்படியான ஒரு சந்தர்ப்பம் வருமென்று அப்போது நான் எண்ணியதே இல்லை. நான் ஒரு பத்திரிகாசிரியனாவேன் என்று, அதுவும் ஒரு ஹாஸ்யப் பத்திரிகாசிரியனாவேன் என்று சொப்பனத்திலும் நினைத்ததில்லை. கலாசாலையில் படிக்கும் காலத்தில் ஒரு ஜில்லா கலெக்டரோ, ஒரு ஸப் கலெக்டரோதான் என்னுடைய லக்ஷ்யமாக இருந்தது. ஆனால் உலகத்துக்கு, இந்த முட்டாள் உலகத்துக்கு, மேதையை மதிப்பிட்டுக் கௌரவிக்க எப்போதும் தெரிவதே இல்லை. உலகம்

தோன்றின நாள் முதலாக இப்படியேதான் நடந்து வந்திருக்கிறது. ஷேக்ஸ்பியர் தன் வாழ்நாட்களைக் கஷ்டத்திலேயேதான் கழித்தான். சார்லஸ் டிக்கன்ஸ் ஒரு பவுனும் அரைப் பவுனும் வாங்கியேதான் கழித்தான். ஏன், நம்முடைய பாரதியைத்தான் எடுத்துக்கொள்வோமே. அவர் இருக்கிறவரையில் துளி சுகப்பட்டது உண்டா? அப்படியேதான் இந்த அசட்டு உலகம்!

என்னுடைய வாழ்க்கை லக்ஷ்யம் சித்திக்காமற் போனதற்கு முக்கிய காரணம் இந்தச் சர்வகலாசாலையார்தாம். என்னுடைய மேதையை உணர்ந்துகொள்ள வேண்டுமென்று அவர்களுக்கு ஏழு தடவை சந்தர்ப்பம் அளித்தேன். அவர்கள் அவற்றைப் பயன்படுத்திக் கொண்டால்தானே? ஒரே பிடிவாதமாகக் கண்ணை மூடிக்கொண்டார்கள். 'சீ! இவ்வளவுதான்' என்று என்னுடைய பி. ஏ. படையெடுப்பை நிறுத்திக்கொண்டேன்.

ஒருவன் என்னதான் மேதாவியாக இருந்தாலும் இந்த உலகத்தில் உயிர் வாழ லௌகிக சௌகரியங்கள் கொஞ்சம் வேண்டித்தானே இருக்கின்றன? என் தகப்பனார் எனக்கு ஒன்றும் கணக்கில்லாமல் பிதுரார்ஜிதம் வைத்து விட்டுப் போகவில்லை. அவர் சேர்த்து வைத்திருந்த சொல்ப சொத்தைச் சர்வ கலாசாலைக் காணிக்கையாக மாற்றிக் கரைத்துவிட்டேன்.

ஆகவே, நான் கேவலம் ஜீவனார்த்தம் உத்தியோகம் தேடவேண்டியது அவசியமாயிற்று. இதற்காக மூன்று வருஷம் 'சர்விஸ் கமிஷன்' என்ற தேவதையை உபாசித்துப் பார்த்தேன். அவர்களுக்கு என்ன பைத்தியமா பிடித்திருக்கிறது, என்னை வைத்துச் சம்ரக்ஷிக்க? 'உன்னைப் போன்ற மேதாவிகளுக்கெல்லாம் இங்கே இடமில்லையப்பா' என்று மரியாதையாகச் சொல்லி அனுப்பிவிட்டார்கள். வாஸ்தவந்தானே! அவர்கள் என்னுடைய மேதையை அறிந்து என்னைக் கௌரவிப்

பார்களென்று அவர்களிடம் நம்பிக்கை வைத்தது என் தவறுதானே?—ஆனால், பிறகு ஆனைப்பட்ட மகாத்மா காந்தியே பிரிட்டிஷ் சர்க்காரிடத்தில் எவ்வளவு காலம் நம்பிக்கை வைத்திருந்தார் என்று எண்ணி என் மனத்தைத் திருப்தி பண்ணிக்கொண்டேன்.

கடைசியில், 'எத்தனையோ நறுமண மலர்கள் கண்காணாச் சிமையிலே மலர்ந்து தங்கள் மணத்தைப் பாலைவனத்தில் வாரி இறைத்து மடிகின்றன' என்று கவி பாடியிருக்கிறானே, அந்த மாதிரியான பூ வர்க்கத்தைச் சேரும் நிலைமைக்கு வந்துவிட்டேன். அப்போது தான் எனக்கு அந்த யோசனை தோன்றிற்று. 'நாம் ஏன் பத்திரிகைகளுக்குக் கட்டுரைகள் எழுதக்கூடாது? அமெரிக்காவில் இந்த மாதிரி லக்ஷக்கணக்கில் சம்பாதிக்கிறார்களாமே! நமக்கு லக்ஷக்கணக்கில் இல்லாவிட்டாலும் சாதாரணமாக ஒற்றை ஸ்தானத்தில் ஏதாவது வரட்டுமே, போதும்' என்ற யோசனை தோன்றிற்று. உடனே காகிதத்தை எடுத்து, 'சுப்புவின் கப்பரைக் கால்' என்று ஒரு கதையை எழுதினேன். அதற்கு நான்கு நகல்கள் எடுத்தேன். ஒன்றை என்னிடம் வைத்துக்கொண்டு பாக்கியை மூன்று வெவ்வேறு பத்திரிகைகளுக்கு அனுப்பினேன். ஒன்றில் இல்லாவிட்டால் ஒன்றிலாவது பிரசுரமாகலாம் அல்லவா?

நான் என் கதையை அனுப்பின ஒன்பதாவது நாள் 'கோமாளிக் கூத்தன்' என்ற பத்திரிகையிலிருந்து எனக்குக் கீழ்க்கண்ட கடிதம் வந்தது:

"ஐயா,

உங்களுடைய 'சுப்புவின் கப்பரைக்கால்' என்ற கதை நன்றாக இருக்கிறது. ஆனால் இதே கதை பிரசித்திபெற்ற ஓர் ஆங்கில ஆசிரியரால் எழுதப் பெற்றுப் புத்தக ரூபமாக வந்திருக்கிறது. தாங்கள் அது மொழிபெயர்ப்பு என்று குறிப்

பிடக் காணேமே. அது உங்கள் சொந்தக் கற்பனை தானே?"

நான் உடனே அதற்குச் சாதுர்யமாக ஒரு பதில் எழுதினேன். ஆனால் அந்தப் பதிலை எழுதினபோது, எனக்கு அது இவ்வளவு பெரிய அதிருஷ்டத்தைக் கொண்டு வரும் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை. அதாவது, என் பதில் போன மறு தபாலிலேயே எனக்கு ஒரு கடிதம் வந்தது. அது இதுதான்:

"ஐயா,

உங்களுடைய ஹாஸ்ய ரஸத்தைக் கண்டு மெச்சி உங்களுக்குக் 'கோமாளிக் கூத்தன்' ஆசிரியர் பதவியைக் கொடுக்கத் தீர்மானித்திருக்கிறோம். தாங்கள் இதை மறுக்காமல், பெருந்தன்மையுடன் இந்தப் பொறுப்பை ஏற்றுக்கொள்வீர்கள் என்று நம்புகிறோம்."

என்னை இன்னொரு தரம் அழைக்கவா வேண்டும்? கடைசியில் உலகம் என் மேதையை ஒப்புக்கொள்ளத் தொடங்கிவிட்டது. மறுநாளே என்னுடைய நண்பன் ஒருவனிடம் ரெயில் செலவுக்குக் கடன் வாங்கிக் கொண்டு சென்னைக்குப் புறப்பட்டுவிட்டேன்.

ஓகோ! நான் என்ன பதில் எழுதினேன் என்று கேட்கிறீர்கள்? ஆம், மறந்துவிட்டேன். நான் சாதுரியமாய் எழுதின பதில் இதுதான்:

"ஐயா,

உங்கள் கடிதம். தாங்கள் குறிப்பிடும் ஆசிரியரை எனக்கும் தெரியும். ஆனால் பிரஸ்தாபக் கதையைத் தமிழில் முதல் முதலில் நான்தான் எழுதினேன் என்பதை நீங்கள் ஒப்புக்கொள்வீர்கள். உலகத்திலே மிகப் புராதனமான ஹிந்து மதத்திலே நான் நம்பிக்கை கொண்டவன். கரும பலன், ஜன்மாந்தர வாசனை இவற்றில் அசைக்க

முடியாத நம்பிக்கை கொண்டவன். அந்த ஆங்கில ஆசிரியன் இருந்தானே, பூர்வ ஜன்மத்தில் நான்தான் அந்த ஆசிரியன் என்பதை இப்போது உங்களுக்குத் தைரியமாக, பகிரங்கமாகத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ருஜூவா? நிறைய இருக்கிறது. அவனும் என்னைப் போலவேதான் இருந்தான். அவனுடைய தகப்பனுருக்கும் என் தகப்பனைரைப்போலவே இடது கண்ணில் பூ விழுந்திருந்தது. இப்போது புரிகிறதா? நான்தான் அந்த ஆசிரியன்—சாக்ஷாத்! பண்ணின பாவத்தினால் இப்படி அடிமை நாட்டில் வந்து பிறந்தேன். நீங்கள் கேள்வி கேட்கும்படியான நிலைமை ஏற்பட்டது!"

இவ்விதம் நான் 'கோமாளிக் கூத்தன்' என்ற ஹாஸ்யப் பத்திரிகையின் பொறுப்பு வாய்ந்த ஆசிரியர் பதவியை ஏற்றுக்கொண்டேன்.

## 3

ஒரு வருஷம் வரையில் அந்தப் பொறுப்பு மிகவும் சுகமாகத்தான் இருந்தது. பத்திரிகையின் வளர்ச்சி நாளுக்கு நாள் பெருகிவந்தது.

ஒரு வருஷத்துக்குப் பின்புதான் அந்தப் பொறுப்பின் முள் கொஞ்சம் கொஞ்சமாகத் தைக்க ஆரம்பித்தது. எவ்வளவு நாள்தான் ஓயாமல் ஹாஸ்யம் எழுதிக்கொண்டிருக்க முடியும்? என் மூளையிலிருந்த ஹாஸ்ய ரஸத்தை எல்லாம் பிழிந்தெடுத்தாய் விட்டது. அதற்குப் பிறகு நம் நாட்டுப் பழைய புராணங்கள், கதைகளை எல்லாம் அலசியாகிவிட்டது. தென்னாலிராமன் கதை, ராமாயணம், பாரதம், பஞ்சதந்திரம், நவதந்திரம், பீர்பல் எல்லாவற்றிலும் உள்ள ஹாஸ்ய ரஸத்தை எல்லாம் பிழிந்து எடுத்தாகிவிட்டது. ஏன், என்னால், நிகண்டு முதலியவற்றிலுள்ள ஹாஸ்யத்

தைக்கூட எடுத்தாகிவிட்டது என்றால்! பிறகு வேறு வழி என்ன?

கடைசியில்தான், சமுத்திரம் தாண்டி அந்நிய நாடுகளுக்குப் படையெடுத்தேன். மார்க் ட்வெயின், ஜேகப்ஸ், ஸ்விப்ட், ஸ்டீல், மோலியர், ஓ ஹென்றி ஆகிய மேல்நாட்டு ஹாஸ்ய ரத்தினங்கள் எழுதிய புஸ்தகங்கள் எல்லாம் ஓர் அறை முழுவதையும் நிறைத்தன. ஒவ்வொரு வாரமும், இவற்றிலிருந்து கொஞ்சம் எடுத்துப் போட்டுக்கொண்டே வந்தேன். என்னுடைய ஹாஸ்யப் பஞ்சம் ஒருவாறு அடங்கிற்று. பின்பு வேறு என்ன பண்ணுவது? அறுபது நாழிகையும், வருஷம் முந்நூற்றறுபத்தைந்து நாளும் ஒரு மனிதன் ஹாஸ்யம் பண்ணிக்கொண்டிருக்க முடியுமா? வீட்டில் அடுத்த வேளைக்கு அரிசி இருக்கிறதோ இல்லையோ; மூத்த குழந்தை ஜன்னி வந்து கிடக்கிறது; எல்லாவற்றையும் மறந்துவிட்டு மனிதன் சிரித்துக் கொண்டிருக்க வேண்டுமென்றால், இது சாத்தியமா? ஒருவேளை, மூளையிலுள்ள ஆணிகளில் ஒன்றையாவது கொஞ்சம் தளர்த்திவிட்டால் முடியலாம்!

## 4

ஆரம்பத்தில் குறிப்பிட்ட சம்பவத்துக்கு ஒரு மாதத்துக்கு முன்புதான் அந்தக் கதையை, 'சுப்புக் குட்டியின் காதல் அல்லது உப்புக் கொழுக்கட்டை' என்ற அந்த 'ஹாஸ்யக்-காதற் கதையை ஆரம்பித்தேன். அந்தக் கதையின் ஆரம்பம் வோடவுஸ் எழுதிய ஒரு கதையைத் தழுவி எழுதியது. இரண்டாவது அத்தியாயம் மார்க் ட்வெயின் எழுதிய 'உருளைக்கிழங்கு அழுகின மர்மம்' என்ற கதையின் ஒரு பகுதி, ஓ ஹென்றி எழுதின 'கழுதைக் குட்டியின் கல்யாணம்' என்றதில் ஒரு பகுதியின் புனர்ஜன்மம்; இவ்விதம் அந்தக் கதையில் இன்னும் எத்தனையோ ஆசிரி

யர்கள் தங்களை அறியாமலேயே பங்கெடுத்துக்கொண்டிருக்கிறார்கள். அதை ஒரு சர்வதேசக் கதை என்றே சொல்லலாம். ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். இப்போது அந்த ஆசிரியர்களெல்லாம் நமது நாட்டுக்கு வந்து தமிழ்ப் பாஷையையும் கற்றுக்கொண்டு தங்கள் தங்களுக்குச் சொந்தமான பாகங்களைப் பொறுக்கி எடுத்துவிடுவது என்று தீர்மானித்தார்களானால், ஒரு மாதமில்லை, ஒரு யுகமானாலும் அவர்களால் அது முடியாது. அவ்வளவுக்குச் சாமர்த்தியம் இல்லாமலா எனக்கு?

எப்படியோ 'சுப்புக்குட்டியின் காதலை' நான்கு வாரங்களுக்குக் கொண்டுவந்து விட்டேன். அதற்கு மேல் எனக்கே வாசகர்மேல் அநுதாபம் தோன்றி, அதை அடுத்த வாரத்துடன் முடித்துவிடுவதென்று தீர்மானித்துவிட்டேன். அப்படியே முந்திய வாரத்தில் பிரசுரித்தும் விட்டேன்.

எங்கெல்லாமோ சுற்றியடித்துக் கதாநாயகன் கடைசியில் தன் காதலியை நெருங்கிவிட்டான். ஆனால் பாவம், அந்தச் சமயத்தில் அவன்மேல் ஒரு கொலைக் குற்றம் சாட்டப்படுகிறது. வாஸ்தவத்தில் அப்பாவி, அவன் ஒன்றையும் அறியான். ஆனால் போலீஸ்காரர்கள் கேட்கிறார்களா? அவன் கையில் விலங்கை மாட்டி விட்டார்கள். இந்தக் கட்டத்தில்தான் கதை நின்றிருக்கிறது. இன்னும் ஓர் அத்தியாயந்தான் பாக்கி. அதற்குள் கதாநாயகனை விடுதலை செய்தாகவேண்டும். அதிலும் ஹாஸ்ய ரஸம் ததும்ப வேண்டும். இன்னொரு முக்கியமான விஷயம் என்னவென்றால் இதுவரை கதைக்குள் எந்த இடத்திலும் 'உப்புக் கொழுக்கட்டை' வரவே இல்லை. அதை எப்படியாவது அந்த அத்தியாயத்தில் வேறு புகுத்தியாகவேண்டும்.

அன்றைத் தினம் வழக்கம்போல் பத்து மணிக்கு நான் காரியாலயத்துக்குப் போனேன். அரைமணிக்குள்

எப்படியாவது ஒரு தினுசாக முடித்துவிடலாம் என்பது என் தீர்மானம்.

உப்புக் கொழுக்கட்டையைக் கதாநாயகியின் சமையல் சாகசத்திற்குக் கொடுக்கலாமா, அல்லது அவளுடைய தாயாரின் கையில் கொடுக்கலாமா என்ற தீவிரமான யோசனையில் ஆழ்ந்திருந்த சமயம், பியூன் ஒரு கவரைக் கொண்டு வந்து மேஜைமேல் வைத்தான். அதை எடுத்துப் பார்த்தேன். தந்தி! உடனே அவசர அவசரமாக அதைப் பிரித்தேன். அதைப் படித்ததும் அப்படியே பிரக்ஞையற்றுச் சாய்ந்தேன்.

என் மனைவி சாகக் கிடந்தாள். உடனே புறப்பட்டு வரும்படி மாமனார் தந்தி கொடுத்திருந்தார்.

எப்போதுமே அவளுக்குத் துர்ப்பலமான தேகம். பிரசவத்துக்காக ஊருக்குப் போயிருந்தாள். அவள் போய்விட்டால், நான்கு குழந்தைகளை வைத்துக் கொண்டு . . என் மனம் குழம்பிற்று.

அடுத்தாற்போல் புறப்படுவதற்கு ஒரு மணிக்கு ரெயில் இருந்தது. அதில் புறப்பட்டால்தான் மறுநாள் காலைக்குள் போய்ச் சேரலாம்.

ஆனால் இங்கே போகும்படியான நிலைமையிலா இருக்கிறேன்? பத்திரிகைக்கு ஏழு பக்கத்துக்கு விஷயம் கொடுத்தாக வேண்டும்.

இந்தச் சமயத்தில் ஹாஸ்யம் எழுதவேண்டும்! என்ன கோரம்! விதி மனிதனைப் பார்த்துச் சிரிக்கிறது! கிண்டல் பண்ணுகிறது!

என்னுடைய பிழைப்பையே வெறுத்தேன். ஹாஸ்ய ரஸத்தையே அடியோடு வெறுத்தேன். என்னையும் என் நிலையையும் மறந்து ஹாஸ்ய ரஸமே இல்லாத ஒரு புது லோகத்திலே போய் ஒரு நிமிஷமாவது இருக்கவேண்டும்

என்று மனசார விரும்பினேன். ஔரங்கசீப்!--எவ்வளவு கொடுத்து வைத்தவர்கள், அவனுடைய பிரஜைகள்!

எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. தேகம் மாத்திரம் பொங்கிவரும் ஆத்திரத்தால் துடித்தது. கட்டாயமாய், விருப்பத்துக்கு எதிராய், விலங்கிடப்பட்டதைப்போல் கைகால்கள் பதறின.

ஒரு காகிதத்தை எடுத்து மளமளவென்று என் ராஜீநாமாவை எழுதினேன். அதை எடுத்துக்கொண்டு போய் முதலாளி அறைக்குள் நுழைந்து அவர் மேஜை மேல் வைத்துவிட்டு நின்றேன்.

ஏதோ கணக்குப் புஸ்தகத்தைப் புரட்டிக்கொண்டிருந்தவர், சற்று ஆச்சரியத்துடன், அதை எடுத்துப் பார்த்துவிட்டு என்னை நோக்கினார்.

"இது என்ன ஐயா?" என்றார் கொஞ்சம் அதிகாரத்துடன்.

"அதில்தான் எழுதியிருக்கிறதே!"

நானும் கொஞ்சம் தைரியமாகத்தான் சொன்னேன். ஆனால் நான் அப்போது இருந்த நிலைமையில் எவ்வளவு உரக்க வேண்டுமாயினும் கத்தியிருப்பேன்.

"அதில் எழுதியிருக்கிறது தெரிகிறது. உம்முடைய ஒப்பந்தம் என்ன ஆவது?"

எனக்கு அந்த ஆத்திரத்தில் அது ஞாபகம் இல்லை. அவரிடம் நான்கு வருஷத்திற்கு ஒப்பந்தம் எழுதிக் கொடுத்திருந்தேன். அவர் சம்பளம் சரியாகக் கொடுக்கும் வரையில் அவரை விட்டுப் பிரிய எனக்கு உரிமை இல்லை. என்ன சங்கடம்!

எனக்கு ஒன்றும் யோசனை தோன்றவில்லை. கடைசியில் தலையைச் சொரிந்துகொண்டே, "அப்படியானால், ஒரு வாரம் லீவு கொடுங்கள்" என்றேன்.

அவருடைய புருவம் மேலே ஏறிற்று.

"இன்றைக்கு எப்படிக் கொடுக்கமுடியும்? இந்த வாரப் பத்திரிகையைக் கொண்டுவந்துவிட்டுப் போம். வெளிவருவதற்குமுன் எப்படிப் போக முடியும்?"

"இல்லை, என் மனைவிக்கு ரொம்ப அபாயம்—தந்தி......"

"ஆம் ஐயா, உம் மனைவிக்கு அபாயம்; போய்விடுகிறீர். இங்கே என் மனைவி - பத்திரிகையை யார் பார்க்கிறது?"

அவர், 'என் மனைவி' என்று சொன்னதும் எனக்குத் திடீரென்று ஒரு யோசனை உதித்தது. அவரிடம் சொல்லாமல்கூடத் திரும்பி மளமளவென்று என் அறைக்கு ஓடினேன். "ரங்கசாமி!" என்று கூவினேன். உதவி ஆசிரியன் ஓடிவந்தான்.

"நேற்று ஒரு புது ஹாஸ்ய ஆசிரியன் புஸ்தகம் ஒன்று - 'என் மனைவி' என்ற புஸ்தகம் வந்ததே, அது எங்கே?"

"இதோ இருக்கிறது" என்று அதை நீட்டினான்.

"வேண்டாம். அதில் கடைசி அத்தியாயத்தை எழுதி, அதை அப்படியே பெயரை மட்டும் 'சுப்புக் குட்டி என்று மாற்றிக் கம்போஸ் பண்ண அனுப்பிவிடும். எங்கே, எடும்! சீக்கிரம்!-ஆனால் இன்னொன்று, கடைசியில் ஒரு நாலு வரி சேர்த்துவிடும். 'உப்புக் கொழுக்கட்டை செய்யும் விதம்' என்று; உம் இஷ்டம் போல் எழுதும்... சீக்கிரம் ஆகட்டும்."

என்னுடைய வேகத்தைக் கண்டு திகைத்துவிட்ட ரங்கசாமி பேனாவை எடுத்து எழுதத் தொடங்கினான்.

# பாட்டும் பக்க வாத்தியமும்

## 1

திடீரென்று தூக்கம் கலைந்து எழுந்து உட்கார்ந்தேன்.

எங்கோ தூரத்திலேயிருந்து கேட்ட கம்பீரமான அந்தக் குரல் என்னை ஓர் உலுக்கு உலுக்கிவிட்டது. நடு நிசி வேளையில் யார் அப்படிப் பாடுவது?—எங்கேயிருந்து கேட்கிறது அந்தக் குரல்? அவன் ஏன் அப்படிப் பாடுகிறான்?

அதையெல்லாம் பற்றி யோசிக்க என் மனத்துக்கு அவகாசம் இல்லை. அழுத்தந் திருத்தமாகக் கேட்ட அந்தக் குரலின் இனிமை சேர்ந்த கம்பீரம் என் மனத்தை, என்னையே கவர்ந்து இழுத்தது. ஷண்முகப் பிரியா ராகத்தை மேலே மேலே எட்டி எட்டிப் பிடிக்கிறான் அவன். அடிவயிற்றிலிருந்து கிளம்புவது போன்ற அவன் குரல் மேலே மேலே தாவிக்கொண்டே போகிறது. ஆகாயத்திலே பறந்து பறந்து மேலே போய்க்கொண்டே இருக்கும் பலூனைத் தாவித் தாவிப் பிடிக்கப் பறப்பது போல அவன் கிளம்பிக்கொண்டே இருக்கிறான். இன்னும் மேலே. . . . .மேலே, மேலே, மேலே . . அட பாவி!—ஏன் அப்படி எழும்பிக்கொண்டே இருக்கிறான்! . . . . . . ஐயோ! என்னால் தாங்க முடியவில்லையே! என்னையும் இழுக்கிறான்! எங்கோ தூக்கிக்கொண்டு போகிறானே!

பாடகன் கீழே இறங்கிவிட்டான். நானும் சுய நினைவு வந்து சுற்றிப் பார்க்கிறேன். நான் பூலோகத்தில் தான் இருக்கிறேன் என்பதை உணருகிறேன்.

என்னுடைய பதின்மூன்று ரூபாய் வீட்டின் விசேஷப் பகுதியான மொட்டை மாடியில், அழுக்கேறின

கந்தல் ஜமக்காளம், பஞ்சு புறப்பட்ட தலையணைகள் சகிதம் சயனித்திருக்கிறேன்.

ஷண்முகப்பிரியா ராகத்தின் கீழ்ப்படிகளிலே சஞ்சரிக்கிறான் பாடகன். அழுத்தமான அவனுடைய சாரீரம், ராகத்தின் மூர்ச்சனையைக் குறிக்கும் திருப்பங்களில் கம்பீரமாக ஏறி ஏறி இறங்குகிறது. பெருத்த போரில் வெற்றி பெற்ற வீரன் சந்தோஷத்துடன் அலக்ஷ்யமாக ராஜ நடை போட்டுக்கொண்டு வருவதுபோலத் தோன்றுகின்றன, அவனுடைய பிடிகள். ராஜவீதியின் மேன் மாடங்களில் நகரக் கன்னியர் வியப்புடன் வீரனை நோக்கிய வண்ணம் நிற்கின்றனர். தன்னுடைய பலத்திலும் வெற்றியிலும் என்றுமே சந்தேகம் கொண்டிராதவன் போன்று, வெற்றி வீரன், புன்சிரிப்புத் தவழும் முகத்துடன், பெருமிதமாக நடை போட்டுக்கொண்டு நாலு பக்கத்திலும், மேலும் கீழும், தன் பார்வையை அள்ளி வீசிக்கொண்டு பவனி வருகிறான்.—அந்தக் காட்சியையே என் மனத்திலே சிருஷ்டித்தது அந்தப் பாடகனின் அபூர்வ கானம்.

பாட்டு நின்றுவிட்டது. உலகமே 'கிச்'சென்று தோன்றியது. தலைக்கு மேலே ஒரு தேய்ந்த சந்திரன் வலுவற்று, பாதி தெரிந்ததும் தெரியாததுமாய், நிச்சப்தமாக நின்றுகொண் டிருந்தான். காற்று அசைவற்று நின்றது. அகப்பதைப்புடன் நான் காத்திருக்கிறேன்; இன்பங் கலந்த பீதியுடன், இரண்டாவது நாள் இரவை எதிர்நோக்கிக் காத்திருக்கும் புதுச் சோபனப் பெண்ணைப்போல.

பாடகனுடைய குரல் மெதுவாக ஆரம்பித்தது. மெதுவாக ஆரம்பித்த அந்தக் குரல் வர வரக் கனமாகிச் சுழன்று சுழன்று கிளம்பிற்று. சற்று முன்பு மகா இனிமையாகக் கேட்ட அவனுடைய சாரீரத்திற்கு அதற்குள் இவ்வளவு கனம் எங்கிருந்து வந்தது? பியாகடை ராகத்தின் ஒவ்வொரு பிடியும் அவனிடமிருந்து குமுறிக்

கொண்டு கிளம்பி என்னை வந்து மோதித் தாக்கிற்று. அவன் ஏன் அப்படிக் குமுறுகிறான்? அவனுடைய நெஞ்சில் என்னதான் இருக்கிறது?

புஜபல பராக்கிரமம் நிறைந்த ஓர் அசுரன். ஆனால் மகா சத்தியவான். அவனுக்கு ஓர் அநியாயம் இழைக்கப் பட்டால், தர்ம நியாயத்துக்குக் கட்டுப்பட்டுச் செயலற்ற அவனுடைய நெஞ்சு எப்படிக் குமுறும்? அந்த மாதிரி கர்ஜித்தது பாடகனுடைய குரல். அந்தக் குரலின் வளைவுகளிலே ஒட்டிக்கொண்டு நான் சக்தி இழந்து கல்லாய் உட்கார்ந்திருந்தேன்.

வரவர விறுவிறுப்பு ஏறுகிறது அவனுடைய குரலில். ராகம் மாறுகிறது.

கானடா ராகம், நாணேற்றிய வில்லிலிருந்து அம்பு கிளம்புவதைப் போன்று குபீரென்று கிளம்புகிறது. 'பளீர் பளீர்' என்று மின்னல் மின்னிக் கண்ணைப் பறிப்பது போன்று சங்கதிகளை அள்ளிக் கொட்டு கிறான்.

இன்னும் ராகம் மாறிக்கொண்டே போகிறது. அடாணு; சியாமா; உசேனி; வைர மணிகளை வான வீதியில் நின்று வாரி இறைப்பது போன்று ராகங்களை அநாயாசமாக அள்ளி வீசிக்கொண்டே போகிறான். சற்றுக்கூடச் சோர்வடையாதுபோலத் தோன்றிய அவனுடைய சாரீரம் பல்லாயிரக்கணக்கான, விதம் விதமான வர்ணபேதங்களுடன் பளிச்சிட்டு மின்னி என்னைத் திக்குமுக்காட வைக்கிறது. அந்த இன்பக் குவியலின் பாரம் தாங்காது நான் செயலிழந்து கிடக்கிறேன். கொஞ்சிக் கொஞ்சிக் குழையும் அவனுடைய குரலின் சுழல்களுடனே நானும் இழுத்துச் செல்லப்படுகிறேன்.

## 2

என்னுடைய சிந்தனை சுழலுகிறது. இன்ப வெள்ளத்திலே மூழ்கித் திளைத்துத் திணறும் என் மனம்,

காலத்தின் எல்லைக் கோடுகளை மீறி முன்னும் பின்னுமாகச் சஞ்சரிக்கத் தொடங்குகிறது. நினைவுக் குப்பல்களிலே குவிந்து கிடந்த பல பல காட்சிகள் கண்முன்னே வந்து, நின்று, மறைகின்றன.

ஒரே பெண்கள் கூட்டம். அதன் மத்தியிலே நான்; அவர்கள் அத்தனை பேரும் ஆண்கள். நான்தான் ஒரு பெண் மாதிரி நாணிக் கோணிக் குனிந்த தலை நிமிராமல் உட்கார்ந்திருக்கிறேன். என் தேகம் முழுதும் சங்கோசம் பிடுங்கித் தின்கிறது.

"ஒண்ணே ஒண்ணு பாடு! போனால் போகிறது. சின்னதாய் ஒண்ணு பாடு." என்னுடைய அத்தையின் பெண் பேசுகிறாள்.

"பாடினைத்தான் ஆச்சு! நாளைக்கு உன்னை யாருடி வந்து பாடுன்னு சொல்லப்போறா!"

"ரொம்பத்தான் ராங்கியடிச்சுக்கறயே! வாயைத் திறந்தால் முத்து உதிர்ந்துவிடுமோ? யாருக்காகப் பாடறே?"

இப்படிப் பல குரல்கள் கேட்டன.

"பாடுடியம்மா, சௌந்தரம்! சின்னதா ஒரு பத்தியம் பாடு. உன் ஆம்படையான்தான் உன் பாட்டைக் கேட்க வேண்டாமா?"—என் அத்தை பெண்ணின் குரல் பரிவுடன் கேட்கிறது.

"பாடினைத்தான் அவன் தட்டை வாங்கிப்பன். வாங்கிக்காதேடா, ராஜு!" என்று என்னையும் சேர்த்து அதிகாரம் பண்ணுகிறது இன்னொரு குரல்.

"எதற்காக இப்படி ஜீவஹிம்சை பண்ண வேண்டும்?" என்று நான் நினைக்கிறேன். கல்லாய் உட்கார்ந்திருக்கிறேன். மாப்பிள்ளை அல்லவா?

கண் அசைவில், எதிரில் கையில் தட்டை ஏந்தி அசைவற்று நிற்கும் உருவம் லேசாகப் பார்வையில் படு

கிறது. வெள்ளிக்கிழமைக்காக அலங்காரம் செய்விக்கப்பட்ட மீனாக்ஷியம்மனைப்போல நிற்கிறது அந்த உருவம்; முதல் நாள் நான் கல்யாணம் செய்துகொண்ட என் மனைவி; காசுமாலை, ஒட்டியாணம், வெள்ளைத்தோடு எல்லாம் என் பார்வைத் திருப்பத்திலே பளிச்சென்று பட்டு மின்னுகின்றன. மூக்கில் புலாக்குக்கூட...அதற்கு மேல் பார்ப்பதற்கு என் சங்கோசம் இடம் தரவில்லை.

உடனே பாட்டுச் சத்தம்; என் மனைவி பாடுகிறாள்:

'கோச்சு வண்டி மேலேறி—நான்
பீச்சுக்குப் போக வேணும்.'

ஏதோ ஒரு ராகத்தில், என்னவோ மாதிரி பாட்டு. அதைவிட்டு எப்போது எழுந்திருக்கப் போகிறோம் என்று தோன்றுகிறது எனக்கு. ஆனாலும் ராகமில்லாத ராகத்தில், சுருதி லயம் சம்பந்தம் இல்லாமல் பாடப்படும் அந்தப் பாட்டின் வார்த்தைகளை மனனம் செய்யத் தொடங்குகிறது என் மனம்.

பாட்டு முடிந்துவிட்டது. சடக்கென்று வெற்றிலைத் தட்டை என் முன்னால் வைத்துவிட்டு எதிரிலேயே உட்கார்ந்தாள் என் மனைவி. அதற்குள் நான் எழுந்துவிட்டேன், வெளியே போக. அப்போது அவளுடைய கண்கள் என் முகத்தை நோக்கின. அந்தப் பார்வையில் என்ன இருந்தது? அந்த விழிகளில் ஏன் அவ்வளவு மருட்சி? என்னை நோக்கி என்ன கேள்வியைப் போட்டது, அந்தப் பார்வை? பின்னால் வர இருக்கும் துயர வாழ்க்கைக்கு முன்னெச்சரிக்கையா அது?—என் மனம் அளவு கடந்த அநுதாபத்தால் நிறைந்தது. இன்னும் ஒரு நாழிகை அந்த விழிகளையே பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருக்க வேண்டும்போல இருந்தது. ஆனால் நான்தான் எழுந்திருந்துவிட்டேனே, பிறகு உட்கார முடியுமா? மாப்பிள்ளை அல்லவா?

## 3

பாடகன் மோகனம் பாடுகிறான். கணீரென்று மாசுமறுவற்று ஒலிக்கும் அவன் குரல் படிப்படியாக மேலே ஏறிக்கொண்டே போகிறது.

மகா கம்பீரமாய், அடுக்கடுக்காக, சங்கதியின்மேல் சங்கதியாக ஏறி ஏறி இறங்கும் அந்தக் குரல் என்னைப் பார்த்துப் பரிகசிக்கிறது; 'ஏ அற்ப மனிதா! சின்னக் குழந்தைகள் மணலைக்கொண்டு வீடு கட்டுவதும் அவை பொலபொலத்து விழுவதும் பிற்பாடு அவை அதற்காகத் துக்கம் கொண்டு அதே இடத்தில் அதே மணலைக் கொண்டு இன்னும் வீடு கட்டுவதுமாக விளையாடுவதைப் பார்த்திருக்கிறாயா? அதே மாதிரியான உன்னுடைய அற்ப சுகதுக்கங்களின்மேல் ஓட்டிக் கொண்டு இந்த மகா அற்பமான வாழ்க்கையைக் கட்டிக்கொண்டு அழுகிறாயே!' என்று என்னைப் பார்த்துப் பரிகசிப்பதுபோல இருந்தது அந்தக் குரலின் ஒவ்வொரு சுழற்சியும்.

நான் சுய சக்தியை இழந்து கிடந்தேன். என் மனம் மட்டும் ஓடிக்கொண்டே இருந்தது.

அதே கல்யாணந்தான்; என்னுடைய கல்யாணம். நானாகிய, 'சிரஞ்சீவி ராஜகோபாலனுக்கு, சௌபாக்யவதி சௌந்தரத்தைக் கொடுப்பதாய்' எங்களுடைய 'பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்ட' அதே கல்யாணம்.

நான்காவது நாள். இரவு எட்டு மணி இருக்கும். அன்று ஊர்வலம். பட்டணத்துப் பாண்டு; இரட்டை நாயனம்; இன்னும் சதிர்க் கச்சேரி வேறு. எல்லாம் ஏக தடபுடல். இதை எல்லாம் நினைத்தபோது எனக்குச் சிரிப்பாய் வந்தது. ஏனென்றால், அந்த ஊரில் வீடு இருபத்தெட்டுத்தான்; ஆகையினால் ஒரே தெருவுதான். இந்தத் தெருவை ஒரு சுற்றுச் சுற்றுவதுதான்

ஊர்வலம் என்பது. எவ்வளவு மெதுவாக நடந்தாலும் இந்தக் கோடியிலிருந்து அந்தக் கோடிக்குப் பதினைந்து நிமிஷத்தில் போய்விட்டு வந்துவிடலாம். இதற்குள் இத்தனை வாத்தியக்காரர்களும் தங்களுடைய முழுச் சாமர்த்தியத்தையும் காட்டிவிட வேண்டுமென்று நினைக்கும்போது யாருக்குத்தான் சிரிப்பு வராது? ஆனால் இவ்வளவு ஏற்பாடும் நமக்காகத்தானே என்பதை நினைக்கும்போது சற்றுப் பெருமையாகவே இருந்தது.

நாலு நாளாய் இந்த அமர்க்களத்தில் நான் சாப்பிடவே இல்லை. ஓயாது ஒழியாது மந்திரமும் புகையும், கும்பலும் இரைச்சலும் எனக்குப் பசியையே போக்கி விட்டன. அதனால், எல்லாம் நாளையோடு முடிந்து விடப் போகிறது என்கிற சந்தோஷத்தினாலோ என்னவோ, இன்று நன்றாகப் பசித்தது. ஆகவே உள்ளே நுழைந்தேன். அங்கே இருந்த பெண்கள் கும்பலையும் லட்சியம் செய்யாமல் ஓர் இலையை எடுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தேன்.

உடனே என்னுடைய அத்தை ஓடிவந்து, "என்னடா ராஜு. இங்கேயே உக்காந்துட்டயே? அவாத்திலே போய்ச் சாப்பிடவேண்டாமோ?" என்றாள்.

"எனக்குப் பசிக்கிறது. யாராவது போடுவதானால் போடுங்கள். இல்லாவிட்டால் நானாகவே எடுத்துப் போட்டுக்கொள்ளுகிறேன்" என்றேன்.

இதற்குள் பெண்கள் கூட்டம் என்னைச் சூழ்ந்து கொண்டுவிட்டது. எல்லாமாக ஆளுக்கு ஒரு வார்த்தை சொல்லி என்னைப் பரிகசிக்கத் தொடங்கிவிட்டன.

"அப்படி அவசரப்படுகிறவன் உன் ஆம்படையாளைக் கூப்பிட்டுப் போடச் சொல்லேன்!" என்றது ஒரு குரல்.

இன்னொன்று, "இங்கே சாப்பிடாதே. உன் ஆம்படையாள் பாவம், நீ வரப்போறேன்னு காத்திண்டிருப்பாள்!" என்றது.

"அவன், எல்லாம், ஆம்படையா கிட்டச் சொல்லிக் கொண்டுதான் வந்திருப்பன். நேத்திக்குத்தான் கலங்கிலே பார்த்தேனே!"

இப்படியாகப் பரிகாசக் குரல்கள் பசியோடு இருந்த எனக்குக் கோபத்தையும் கிளப்பிவிட்டன.

"யாராவது சாதம் போடப் போகிறீர்களா இல்லையாடி!" என்று நான் கத்திவிட்டேன். அப்போது தூரத்தில் இருந்த என்னுடைய பாட்டியின் குரல், "என்னடீது பரிகாசம்! குழந்தை பசிக்கிறது என்கிறான்; சாதம் போடுவயளா, கூத்தடிக்கிறயளே!" என்றது அதிகாரத்துடன்.

என் அத்தை பரிமாறத் தொடங்கினாள்.

நான் சாப்பிட்டு எழுந்திருப்பதும் என்னுடைய சிநேகிதன் ராமதுரை என்னைத் தேடிக்கொண்டு வருவதும் சரியாக இருந்தன.

"என்னடா ராஜு, சாப்பிட்டாச்சா என்ன?"

"ஆச்சு. பசியாய் இருந்தது. இப்படியே சாப்பிட்டேன். நீ.?"

"நான் சாப்பிடலை. மத்தியான்னம் ரொம்பக் கனமாப் போச்சு...."

இருவரும் பேசிக்கொண்டே மாடியை அடைந்தோம். நல்ல வேளை, அங்கே கும்பல் இல்லை. எல்லோரும் கல்யாண வீட்டுக்குச் சாப்பாட்டுக்குப் போயிருந்தார்கள்.

"ராத்திரி ஊர்வலம் ஏக ஜோர்போல் இருக்கு" என்று பேச்சை ஆரம்பித்தான் ராமதுரை.

"ஆமாம், என்ன ஊர்வலம்! எனக்குப் பிடிக்கலை. எப்போது இந்தச் சனியன் பிடித்த ஊரை விட்டுப் போகப்போகிறோம் என்று இருக்கு!" என்றேன் நான்.

"அப்படி ஏன் சொல்லறே? உன் மாமனார் ஊர் அல்லவா!"

"சுத்தப் பட்டிக்காடு!"

துரை சொல்லுகிறான்: "அந்தப் பழமொழியிலே சொல்லுகிற மாதிரி, கல்யாணமும் தூக்கு மேடை ஏறுவதும் அவனவன் தலை விதிப்படிதான் நடக்கும். ராஜு, அதற்காக வருத்தப்பட்டுப் பிரயோசனம் இல்லை. ஆனாலும் இவ்வளவு தூரம் உன் அதிருஷ்டம் கேவலமாக இருக்குமென்று நான் நினைக்கவில்லை......"

அவன் இங்கிலீஷில் பேசிக்கொண்டே இருக்கிறான். நான் பதில் பேசாமல் உட்கார்ந்திருக்கிறேன்.

"நீ பெண் பார்க்கப் போவதாக எழுதியிருந்தாயே, போகவில்லையா?"

"இல்லை. எங்கப்பா போறேன்னு சொன்னார். அவரும் போகவில்லை. என் மாமாதான் குறுக்கே வந்தான்: தான் பெண்ணைப் பார்த்திருப்பதாக அவன் சொன்னான். இப்படியாக எல்லோரும் சேர்ந்து......" என்று நான் மெதுவாகப் பேசுகிறேன்; நானும் இங்கிலீஷில்தான் பேசுகிறேன். நானும் பி. ஏ. அல்லவா?

இதற்கு முன்னால் ஒருவித எண்ணமும் இல்லாமல் சுத்த சூன்யமாய் இருந்த என் மனத்தில் இருள் கவிகிறது. நான் என்ன என்னவோ எண்ணுகிறேன். பல பல காட்சிகள், சம்பவங்கள் என் கண் முன்னால் நடக்கின்றன. அந்த அந்தச் சம்பவங்களில் பங்கெடுத்துக்கொண்ட பாத்திரங்களின் உருவங்கள் வெள்ளைத் திரையின்மேல் விழும் நிழல்களைப்போல என் எதிரே நடமாடுகின்றன.

நான் இதற்கு முன்னால் என் கல்யாணத்துக்காகப் பெண் பார்க்கப்போன சம்பவங்கள்......ஒரு பெண் கறுப்பு; அதனால் எனக்குப் பிடிக்கவில்லை. நான்

திரும்பி வண்டி ஏறப் போகிறேன். அந்தப் பெண்ணைப் பெற்ற மனுஷன் என்னை வழியனுப்ப வருகிறான். 'சரி, போய் வாருங்கள்!' என்று சொல்லிக்கொண்டு என் முகத்தைக் கடைசியோ கடைசியாகப் பார்க்கிறார். அப்போது அவர் என்னைப் பார்த்த பார்வையை இன்னும் என்னால் மறக்க முடியவில்லை. ஒரு குற்றவாளி-தெரியாத்தனமாக ஒரு பெரிய தவறு செய்து விட்டுப் பள்ளிக்கூடப் பையன் வாத்தியார் எதிரில் விழிப்பானே, அந்த மாதிரி அதைவிட இன்னும் நூறு மடங்கு பரிதாபம் தோன்றும் பாவனை; இல்லை, அது கூடத் தப்பு; கொலைக் குற்றம் செய்துவிட்டவன் நீதிபதியின் தீர்ப்புச் சொல்லப்போகும் உதட்டு அசைவை எதிர் நோக்கிப் பார்ப்பானே, அந்தக் கடைசிப் பார்வை! ஆனால் அப்போது எனக்கு அந்த முகத்தைப் பார்க்க வேடிக்கையாய் இருந்தது. இந்த மாதிரி எத்தனையோ இடங்கள்! எல்லா நாடகங்களிலும் நானே தான் கதாநாயகன் என்றாலும், இப்போது தனியே நின்று எல்லாவற்றையும் பார்க்கும்போது என்னையுந் தான் பார்க்கிறேன். அந்த நிலைமை விசித்திரமாய் இருக்கிறது!

ஆனால் கடைசியாக முடிவு செய்யப்பட்ட பெண்ணை நான் போய்ப் பார்க்கவில்லை. இதற்கு முக்கிய காரணம் என்னுடைய அத்தைதான். என்னுடைய தாயார் காலமான பின்பு எங்கள் வீட்டு உள் நாட்டு நிர்வாகம் அவளுடைய கையில்தான்.

'நீதான் இத்தனை தரம் போய்ப் பார்த்து ஒண்ணும் நிச்சயமாகவில்லை. இப்படியே வந்த வரனையெல்லாம் தட்டிக் கழிச்சிண்டே இருந்தால் பிரம்மசாரியாய் இருக்க வேண்டியதுதான்.........உன் மாமா தான் பெண்ணைப் பார்த்திருக்கேன் என்கிறானே, பொய் சொல்லப் போகிறானா?' என்று அவள் தன்னுடைய கட்சிக்கு ஆதாரமாக உதாரணங்களும் மேற்

கோள்களும் எடுத்துக் காட்டத் தொடங்கவே விவாதம் முடிந்தது.

எனக்கும் இந்தப் பெண் பார்க்கப் போகும் உத்தி யோகம் அலுத்துவிட்டது.

எவ்வளவு நேரம் இப்படிக் கற்பனை நாடகங்களுக் குள்ளே மூழ்கியிருந்தேனோ. தெரியாது. ராமதுரை, "என்னடா ராஜு, நாழியாச்சே. கொஞ்சநேரம் தூங்கேன். பன்னிரண்டு மணிக்கு எழுந்திருந்து ஊர்வலத்துக்குப் போகணுமாம்" என்றதும் விழித்துக் கொண்டேன்.

"நான் ஊர்வலத்துக்கு வரவில்லை!" என்றேன் உடனே.

'ரொம்ப பேஷ்! நீ இல்லாமல் ஊர்வலம் ஏது?" என்று சிரித்தான் அவன்.

"யார் வேணுமானாலும் போகட்டும்! நான் போக வில்லை. எனக்கும் இந்தக் கல்யாணத்துக்கும் சம்பந்தம் இல்லை!"

"டேய், என்னடா உளறுகிறாய்! இதெல்லாம் நாலு நாளைக்கு முன்னால் சொல்லியிருந்தால் தேவலை!"

நான் சொன்னேன்: "துரை என்னைப் பரிகாசம் பண்ணாதே. மனசு கஷ்டப்படும்போது நீயும் பரிகாசம் பண்ணினால் நான் என்ன பண்ணுவது! ஒருத்தரிடமும் சொல்லிக்கொள்ளாமல் இப்படியே ஓடிப்போய் விட வேண்டும் என்று தோன்றுகிறது."

இதற்குள் மாடிப்படியில் யாரோ வரும் சத்தம் கேட்டதால் எங்கள் சம்பாஷணை அப்படியே நின்றது. சற்று நேரத்தில் சந்தன வாசனை கம்மென்று வீச, சாப்பாட்டுக்குப் போன கும்பல்கள் வந்து மாடியை நிறைத்தன. பேச்சும் பரிகாசமும் வலுத்தன. நான்

அவைகளுக்கு மத்தியில் அகப்பட்டுக்கொண்டு திணறினேன்.

நடுநிசி ஒரு மணிக்கு நானும் ராமதுரையும் நடத்திய சம்பாஷணை மீண்டும் நடந்தது. ஆனால் இப்போது என்னுடன் பேசியவர் என் மாமா.

"ஏண்டா அப்பா, பிருகஸ்பதி! நாலு நாளைக்கு முன்னால் இந்த யோசனை எல்லாம் தோணலையோ!" என்றான் அவன்.

"நீ இப்படி மோசம் செய்வாய் என்று நான் எதிர் பார்க்கவில்லை!" என்றேன் கோபமாக. அத்துடன் அவன் வாய் மூடிவிட்டது.

என் தகப்பனார் பேசினார் பிறகு: "ராஜு, கொஞ்சம் புத்திசாலித்தனமாய் நடந்துகொள்ளேன். நீ என்ன முட்டாளா!" என்றார் அவர் இங்கிலீஷில்.

அதற்குள் என்னுடைய அத்தையின் தலைமையில் பெண்கள் கூட்டம் ஸ்தலத்தை அடைந்தது.

"நன்னா இருக்கே! அவளுக்கு என்ன, நொண்டியா, முடமா? வியாதியா? கொஞ்சம் மாநிறமா இருந்தா என்ன, இளப்பமா? அதுக்குச் சீமையிலே போய் வெள்ளைக்காரியாப் பார்த்து இழுத்திண்டு வர்றதானே!"

அவ்வளவுதான். பெண்கள் தர்க்கத்துக்கு வந்தாலே நான் தோல்வியை ஒப்புக்கொள்ள எப்போதும் தயார். அதுவும் என் அத்தை விஷயத்தில் பெயரைச் சொன்னாலே போதும்.

நான் ஊர்வலத்துக்குப் போனேன்.

ஒரே மல்லிகைப்பூ நாற்றம்; சந்தனம். அதோடு கண்ணைக் கூசும் வெளிச்சம்; காதையும் புத்தியையும் கலங்க வைக்கும் வாத்தியங்கள். எனக்கு ஒரே குழப்ப

மாய் இருந்தது. சிறையில் இருப்பதுபோல நாலு மணி நேரத்தைக் கழித்தேன்.

விடியற்காலை ஐந்து மணிக்கு ஊர்வலம் வீட்டு வாசலில் திரும்ப வந்து நின்றது. எப்போது நிற்கப் போகிறதென்று காத்துக்கொண்டிருந்த நான் சடக்கென்று கீழே இறங்கினேன். அப்போது சட்டென்று பின்னுக்கு இழுக்கப்பட்டு நின்று திரும்பினேன். ஒரு வாழை நாரில் என்னுடைய சட்டை நுனியும், அந்தப் பெண்ணின் புடைவைத் தலைப்பும் முடியப்பட்டிருந்தன. சின்னக் குட்டிகளின் குறும்பு! மடமடவென்று நாலைந்து குட்டிகள் சிரித்தன. எனக்குப் பிரமாதக் கோபம் வந்தது. 'சனியன்கள்!' என்று வெடுக்கென்று அந்த நாரை அறுத்தேன்.

அப்போது திரும்பும் வேகத்திலே அந்தப் பெண்ணின் முகம் பார்வையில் பட்டது. அதே கண்கள்! எவ்வளவு பெரிய விழிகள்! முழு வட்டமாக இருந்த அந்த விழிகள் எனக்குள்ளே ஓர் அதிர்ச்சியை, ஏதோ ஒரு நாடியைப் பிடித்துக் குலுக்கிவிட்டது போன்ற உணர்ச்சியை உண்டுபண்ணி விட்டன. மறு விநாடி நிமிர்ந்து விறைப்பாக நான் வீட்டுக்குள்ளே நுழைந்து விட்டேன்.

## 4

சுருக்கமான ராகங்களை ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கிக்கொண்டே போகிறான் பாடகன். மளமள வென்று அடுக்கடுக்காக உருட்டிக்கொண்டே போகிறான்; எங்கேயோ அவசர ஜோலியைக் கவனிக்கப் போகிறவன் போல.

என்னுடைய வாழ்க்கையும் என் மனத்தின் முன்னே உருண்டுகொண்டே போகிறது; வருஷங்கள் ஓடுகின்றன.

இப்போது எனக்குக் கல்யாணம் ஆகி எட்டு வருஷங்கள் ஆகிவிட்டன. ஆனால் எனக்குக் கல்யாணம் ஆனதையே நான் மறந்துவிட்டேன். அந்த எட்டு வருஷங்களுக்குள் எத்தனையோ நடந்தேறிவிட்டன.

என் தகப்பனார் இருக்கும் வரையில் என் இஷ்டம் போலத் திரிந்தேன். கவலை என்பதே இன்னதென்று தெரியாது. என்னைப்பற்றியோ, என்னுடைய கல் யாணத்தைப்பற்றியோ, என் எதிரில் பேச யாருக்கும் துணிச்சல் இல்லை. என் தகப்பனாரோ...! அவர் மட் டும் என்ன? அவர் கேள்வி கேட்கும் வயசை நான் தாண்டிவிட்டேன் என்பது அவருக்குத் தெரியாதா என்ன?

அவர் காலமானதும் ஜீவனத்துக்கு உத்தியோகம் தேடும் பொறுப்பு எனக்கு வந்தது. எங்கெங்கேயோ, என்ன என்னவோ வேலைகள் பார்த்தேன். கடைசியில் ரெயில்வே கம்பெனி உத்தியோகந்தான் என்னை ஒரு நிலையில் ஸ்திரமாய் நிற்கவைத்தது. நிமிஷக் கணக்குப் படி வந்து போகும் அந்த ரெயில் வண்டிகள் மாதிரி நானும் ரெயில்வேக் கம்பெனியின் உறுப்புக்களில் ஒன்றாக ஆனேன்.

கால வெள்ளத்திலே ஒரு நியதி இல்லாமல் முன்னும் பின்னும் இழுத்துச் செல்லப்பட்ட என்னு டைய வாழ்க்கை ஒரு கட்டுப்பாட்டுக்குள் அடங்குகிறது.

ஆனால், காலம் அகண்டமானது; வெள்ளமா அது? அதற்கு ஓட்டம் உண்டா? ஓட்டம் உண்டானால், அந்த ஓட்டம் எப்போது நிற்கும்? மறுபடியும் தொடங்குமா?

காலம் முடிவற்றது. அதற்கு ஓட்டமும் இல்லை; நிறுத்தமும் இல்லை. காலம் சமுத்திரம் போன்றது, அது எல்லையற்றது; அது எப்போதும் இருக்கிறது.

அந்த மகாப்பிரம்மாண்டத்திலே, அற்பத்திலும் அற்பமான மகா அற்பமான நான் எந்த மூலை?......என்

லைப்போல இன்னும் எத்தனையோ கோடானு கோடி, எண்ணத் தொலையாத அற்பங்கள் வருகின்றன, போகின்றன.....

## 5

சுருதி கலைந்து சிதறிக் கிடக்கும் வீணையின் தந்திகளை ஒன்றுகூட்டிச் சேர்த்து மீட்டுவதுபோல, சிதைந்து கிடக்கும் என்னுடைய மனத்தைச் சேர்த்துப் பிடித்துக் கவர்ந்து இழுக்கிறது பாடகனின் தெய்விகக் குரல்.

அன்றைக்கு என்னுடைய மேலதிகாரி வீட்டில் ராத்திரி சாப்பிடப் போனதற்குக் காரணம், என்னைப் பற்றிய வரையில், அவருடைய புத்திர பாக்கியத்துக்கு அப்த பூர்த்தி என்பதற்காக அல்ல; அவர் மேலதிகாரி என்ற ஒரே காரணத்திற்காகத்தான்.

ராத்திரி சாப்பிடும் வரையில் சரியாக இருந்த என் மனம், சாப்பிட்டானதும் ஏதோ மாதிரியாக இருந்தது. விவரம் தெரியாத, காரணமற்ற ஒரு பீதி மனத்தில் தோன்றிப் படர்ந்தது.

சாப்பிடுவதற்கே பத்து மணியாகி விட்டபடியால் அங்கேயே படுத்துக்கொள்ளலாம் என்று அவர் சொன்னதை நான் தட்டவில்லை. மாடியில் வெளிப்புறமாய் இருந்த அறை எனக்கு விடப்பட்டது. நல்ல காற்றோட்டமான அறை. வீடும் பெரிய வீடு. ஐந்நூறு ரூபாய் சம்பளக்காரருக்கு வீட்டுக்கு என்ன குறைச்சல்?

படுத்துக்கொண்டு வெகு நேரம் வரையில் எனக்குத் தூக்கம் வரவில்லை. விவரிக்க முடியாத ஒரு பயமும் அதிருப்தியும் மனத்தில் நிரம்பியிருந்தன.

நான் படுத்துச் சரியாக ஒரு மணி ஆகியிருக்கும் என்று நினைக்கிறேன். எங்கேயோ ஒரு கடிகாரம்

பன்னிரண்டு அடித்ததை எண்ணினேன். நான் படுத்திருந்த அறையை நோக்கி விளக்கு வெளிச்சம் வந்தது. வர வரக் கிட்ட நெருங்கிற்று, நான் எழுந்து உட்கார்ந்து கனைத்துக்கொண்டேன்; நேராக என் அறைக்குள்தான் வந்தது வெளிச்சம்.

சற்று நேரத்தில் விளக்கைத் தூக்கி வந்த பெண் அதைப் பக்கத்தில் தரையில் வைத்துவிட்டு என் எதிரில் வந்து நின்றாள். நான் திடுக்கிட்டு நிமிர்ந்தேன்.

என் உடம்பு கிடுகிடென்று ஆடிற்று.

ஏனோ தெரியவில்லை. அந்தச் சமயத்தில் அவள் அங்கே வந்ததைப்பற்றி எனக்கு ஆச்சரியமே தோன்றவில்லை.

மெலிந்து கூனிய உருவம், வெளுத்துக் களையில்லாத முகம், சூரியோதயத்துக்குச் சற்று முன்பு முழு வட்டமாகச் சந்திரன் தெரிகிறதே, அந்த மாதிரி. அந்தக் கண்கள்!—அந்தப் பெரிய விழிகளின் முன்னால் நான் குன்றிப்போய் உட்கார்ந்திருந்தேன்.

அவள் ஏன் அங்கே வந்தாள்? எப்படி வந்தாள்? மேலதிகாரி பண்ணின சூழ்ச்சியா இது? அவளுக்கு அவன் உறவா?—இந்தக் கேள்விகளை எல்லாம் பற்றிக் கொஞ்ச நேரம் கழித்துத்தான் ஆராயத் தொடங்கிற்று என் மனம்.

நான் யோசனையில் இறங்குவதற்குள் அவள் திடீரென்று குனிந்து என் பாதங்களைப் பிடித்துக்கொண்டு நமஸ்கரிக்கத் தொடங்குகிறாள். அவள் கண்களிலே என்ன, கண்ணீரா? .......?

எனக்கு நெஞ்சும் மார்பும் ஏன் இப்படி அடித்துக் கொள்கின்றன? என் உடம்பு ஏன் இப்படிப் பதறுகிறது? ஐயோ! இந்தப் பாவி ஏன் இப்படிப் பாடு

கிறான்! என்னைக் கொல்லுகிறானே!......அப்பப்பா! என்ன இனிமை! என்ன இனிமை!

என்ன ராகம், காம்போதியோ? இப்படிக்கூடக் காம்போதியைப் பாட முடியுமா?

வளைந்து வளைந்து மேலே போகிறானே? ஆகாயத்துக்கும் பூமிக்குமாக வலை பின்னுகிறானா?

இன்பமயமான கம்பியாக இழுக்கிறான். என்ன சாரீரம்! என்ன அழுத்தம்!

அப்பா! எவ்வளவு இனிமை!

இனிமைக்கும் துயரத்துக்கும் என்ன சம்பந்தம்? இந்த இனிமை ஏன் இப்படி என்னை வதைக்கிறது?

அடி வயிற்றிலிருந்து கிளம்பி அசைத்துத் திருப்பிக்கொண்டு மேலே எழும்பும் அந்தக் குரலில் ஏன் சோகம்? அவனுடைய வாழ்க்கைத் துயரத்தை எல்லாம் அப்போதே கொட்டித் தீர்க்கிறானா? அவனுக்கு என்ன துக்கம் வந்தது அப்படி?—ஆனால் வாழ்க்கையில் துயரம் இல்லாதவன் எவன்?

என்னை ஏன் இப்படிக் கொல்லவேண்டும்? அவனையும் என்னையும் தவிர லோகத்தில் வேறு ஜீவராசியே இல்லையா? ஐயோ! அந்த இனிமை. வேதனை என்றால் தாங்க முடியவில்லையே!......

மரங்கள் சலனமற்று நிற்கின்றன. அவைகளுக்கும் காது உண்டா? சந்திரன் அசைவற்று நிற்கிறான். அவனுக்கும் சங்கீத ஞானம் உண்டா?

வான வீதியிலே நின்று இன்பமயமான பொறிகளை அள்ளி அள்ளி விசிறிக்கொண்டே இருக்கிறது அந்தத் தெய்விகக் குரல். என்னைக் கூவிக் கூவி, எங்கோ அழைக்கிறது. என் கண்கள் கூசுகின்றன. நான் என்னுடைய சின்னத்தனத்தை உதறி எறிய முடியவில்லை. மகா அற்பனான நான் புழுவைப்போல், கீழே, தரை

யிலே நெளிகிறேன். தெய்வலோகத்திலே இருந்து பொழிவதுபோல் கீழே உதிரும் இன்ப மணிகளைப் பொறுக்கி மோந்து பார்க்கக் குனிகிறேன்.

வசிய மந்திரத்திலே கட்டுண்டவன்போல் நான் சுய சக்தியின்றி எழுந்திருக்கிறேன். உள்ளே போகிறேன். அங்கே, இன்னொரு கிழிசல் பாய், பஞ்சு கிளம்பின தலையணை. அதில் படுத்துக்கொண் டிருக்கிறாள் என் மனைவி, சௌந்தரம். குச்சி குச்சியான கால் கைகளுடன் கூடின அவளுடைய வற்றின தேகம் ஒரு பக்கமாக வளைந்து கிடக்கிறது.

அந்த வளைவுக்குள்ளே கிடக்கிறான், என்னுடைய புத்திரன்: இன்னொரு சின்ன எலும்புக்கூடு. பல் இல்லாத அவனுடைய வாய் தாயின் ஒட்டிப்போன மார்பை விடாமல் கவ்விக்கொண் டிருக்கிறது; சாரமில்லாத இந்த வாழ்க்கையை நாம் விடாமல் பிடித்துக்கொண்டு தொங்குகிற மாதிரி.

அந்தச் சிசு எதைக் கண்டுவிட்டது, அதன் முகத்தில் இத்தனை சந்தோஷம் உதிக்க? அப்போது அதற்குக் கூடத் துயரம் உண்டா?

தாயையும் பிள்ளையையும் பார்த்துக்கொண்டே நான் நிற்கிறேன்.

அவள் என்ன சுகத்தைக் கண்டுவிட்டாள் எனக்கு வாழ்க்கைப்பட்டு?—அல்லது, நான்தான் என்ன சுகத்தைக் கண்டு விட்டேன் அவளுக்கு வாழ்க்கைப்பட்டு? இல்லாவிட்டால், என்ன துக்கத்தைத்தான் கண்டுவிட்டோம்?

எதையாவது எதிர்பார்த்தால் அல்லவா, பிறகு சுகமோ துக்கமோ உண்டாக முடியும்? ஆனால் இங்கே யாரைக் கண்டு எதை எதிர்பார்க்க முடியும்?

அந்த நிசாசரனை பாடகன் எப்போது வாயை மூடினானோ எனக்குத் தெரியாது. நான் கண் விழித்த போது பொழுது விடிந்திருந்தது. பிள்ளையாண்டான் ஒரு காலை வாய்க்குள் இழுத்து வைத்துக்கொண்டு, இன்னொரு காலை என்மேல் உதைத்துகொண்டு கூப்பாடு போட்டுக்கொண் டிருந்தான். அன்றை வேலைக்குத் தயாராக நிற்கும் குதிரையைப் போல் நான் சுறுசுறுப்புடன் எழுந்திருந்தேன்.

# புலிக்குட்டியின் பெண்

"சுந்தரியம்மா ரொம்பக் கர்நாடகம். இந்தக் காலத்துக்கு லாயக்கே இல்லாதவள்......"

"ஆமாம். அவள் பிள்ளைக்கு ஆரைக் கொடுத்திருந்தது?"

"அதுதான், புலிக்குட்டியின் பெண்ணை."

"யாரு?"

"புலிக் குட்டி பத்மநாபனைத் தெரியாது?—ஆமாம் உனக்குத் தெரிய நியாயம் இல்லை. ஏ அப்பா! அவன் மாதிரி மனுஷன் நான் பார்த்ததில்லே. அவன் பேரைச் சொன்னுலே ஊரெல்லாம் நடுங்கும்; பள்ளுப்பறை எல்லாம் கதி கலங்கும். அதுக்காகவே அவனுக்குப் புலிக்குட்டின்னு பேர். அக்கிரகாரத்திலேதான் ஆகட்டுமே, அவனைக் கண்டாத் துளி சத்தம் இருக்காது; ரொம்ப மதிப்பு."

"அவன் பெண்ணைத்தான் சுந்தரி பிள்ளை சாமுவுக்குக் கொடுத்திருந்ததா?"

"ஆமாம், மறந்துவிட்டேன்...அதுதான்; சுந்தரிக்குத் தூரபந்து அவன். ஒரே பெண்தான் அவனுக்கு; தாயில்லாப் பெண். அப்போதான் அவனுக்கு வியாதி வந்துவிட்டது. சுந்தரியைக் கூப்பிட்டுச் சொன்னுன். அவனுக்கென்ன? பெண்ணுக்குத்தான் என்ன? தங்கமான பெண். நல்ல லட்சணங்கூட. அதோடே கொஞ்சம் சொத்தும் வருகிறது. அப்போதான் அந்தப் பயல் சாமு பி. ஏ. படித்துக்கொண் டிருந்தான். கூப்பிட்டுச் சொன்னுன். பையனே தாய் வார்த்தையைத் தட்டமாட்டான். ஆச்சு ஒரே நாள் கல்யாணம்;

முடிஞ்சு போச்சு. கல்யாணமான பத்து நாளுக்குள்ளேயே புலிக்குட்டியும் நிம்மதியாய்க் கண்ணை மூடி விட்டான்.''

''இருந்தாலும் இவ்வளவு துர்ப்பாக்கியமாய் முடியுமென்று, ஆமாம், அவன், சாமு என்னமாகக் கிடந்தான்— வேறே ஏதோ சொல்லுகிறீர்களே?''

''தற்கொலை என்று?''

''ஆமாம், அப்படித்தான் கேள்விப்பட்டேன்... அப்படி என்ன வந்துவிட்டது? நல்ல உத்தியோகத்திலே இருந்தான். எத்தனை சம்பளம்?''

''சம்பளம் அறுபது, எழுபது வாங்கிக்கொண்டிருந்தான். வாங்கி என்ன பண்றது?''

''சுந்தரியம்மாள் இதனாலேயே மனமுடைந்து போய்விட்டாள் என்று நினைக்கிறேன் நான்.''

''சந்தேகம் என்ன?''

''நான் ஒரு நாள் வந்திருந்தேன். ஐயோ அவள் கதறின கதறல்!—அவளுக்குத தன் பிள்ளை போனது கூடப் பெரிதாய் இல்லை. நாட்டுப் பெண்ணைப் பார்த்துப் பார்த்துத்தான் கதறினாள். 'இங்கே பாருடா இந்தப் பெண்ணை! அன்னியிலே இருந்து சித்த ஸ்வாதீனம் இல்லேடா இதுக்கு. இந்தக் கண்ராவியைத்தான் எனக்குப் பார்க்க முடியல்லே' என்று கதறுவாள். ஆமாம், அவன் ஏன் தற்கொலை பண்ணிக்கொண்டான் என்பதற்குக் காரணமே தெரியவில்லையே?''

''காரணம் இல்லாமே இருக்குமா?''

''என்ன காரணம்?''

''சொல்லுகிறேன். ஆனால் நான் சொல்லப் போகும் விஷயம் ஒருத்தருக்கும் தெரியாது. இந்த உண்மை எல்லாம் நானாகக் கண்டு பிடித்தது...''

"சொல்லு."

"சுந்தரி பிள்ளை எனக்கு உறவு என்பது உனக்குத் தெரியுமோ?"

"தெரியாது."

"பரவாயில்லை; எனக்குச் சொந்த அத்தான் பிள்ளை. அதே மாதிரி புலிக்குட்டியும் எனக்கு உறவுதான்; என் சம்சாரத்து வழியிலே. அந்தப் பெண் கல்யாணத்துக்குக்கூட நான் போயிருந்தேன். அந்தப் பெண்தான் சொல்லியிருந்தேனே, நல்ல அழகு; அதற்கேத்த அறிவு. என்ன இருந்தென்ன? அதிருஷ்டமில்லை!"

"விஷயத்தைச் சொல்லு."

"அவசரப்படாதே. சொல்லுகிறேன். உனக்கு என்னவோ எளிதாகத் தோன்றுகிறது. அப்பப்பா! அதை நினைக்கிறபோது என் மனசு என்ன பாடு படுகிறது! அவர்கள் வாழ்ந்த வாழ்வென்ன! அடடா!"

"அந்தப் பெண் ரொம்ப அறிவுள்ள பெண்ணுக்கும்! அவனும் கெட்டிக்காரப் பையன்தானே?"

"ரொம்பக் கெட்டிக்காரன். ஆகா, அந்த ஜோடி சேர்ந்தது உண்டோ இல்லையோ! நான் ஒரு தடவை போயிருந்தேன். அப்போதுதான் அவர்களுக்குக் கல்யாணம் ஆகி இரண்டு வருஷம் ஆகியிருந்தது.

அதென்ன அழகு போ! ரதியும் மன்மதனும் போலே என்று சொல்வார்கள். அந்த மாதிரி சதிபதிகளை, அவ்வளவு நேர்மையாக, ஒற்றுமையாக நான் இது வரையில் பார்த்ததில்லை. அப்படி இருந்தவர்களுக்கு என்ன கேடு வந்துவிட்டது! ஒருவேளை என் திருஷ்டி தோஷந்தான் பட்டுவிட்டதோ என்றுகூட நான் ஓரோர் சமயம் நினைத்துக்கொள்வது உண்டு; அவ்வளவு சந்தோஷப்பட்டேன், அப்போது நான்!"

"அப்படி இருந்தவர்களுக்குக் கேடு எப்படி வந்தது?"

"சொல்லுகிறேன்; ஆரம்பத்திலிருந்தே சொல்லு கிறேன்: நான் சொல்லப்போவதெல்லாம் நேரில் நானே கண்டதும் தவிர ஊகம் பாதி. கல்யாணம் ஆனவுட னேயே சாமுவுக்குச் சென்னையில் ஓர் உத்தியோகம் ஆகிவிட்டது. சர்க்கார் உத்தியோகம், அக்கௌன்டன்ட் ஜெனரல் அபீசில். அப்போதுகூட எல்லாரும் பெண் ணின் அதிருஷ்டமென்று வாழ்த்தினார்கள். சில மாதங் களுக்கெல்லாம் சாமு தன் மனைவியை அழைத்துக் கொண்டு சென்னைக்குப் போய்விட்டான். சுந்தரியம் மாள் கோவிலும் குளமும் உள்ள கிராமத்தை விட்டு வரமாட்டேன் என்று ஊரிலேயே இருந்துவிட்டாள்.

"இளம் தம்பதிகள் ரொம்ப சந்தோஷத்துட னேயே குடும்பம் நடத்த ஆரம்பித்தார்கள். சந்தோ ஷத்துக்கு என்ன? அந்தப் பெண், ஆமாம், அதன் பெயர் செல்லம்-அவனுக்கேற்ற பெண்-அவனுடைய குறிப்பறிந்து செய்வாள். அவனும் நல்ல படிப்போடு அறிவுள்ளவன். ரொம்ப ஆசையோடு வைத்திருந்தான். அவளைக் கேட்காமல் ஒரு காரியமும் செய்யமாட்டான். 'செல்லம், செல்லம்னு' உயிராய்த்தான் இருந்தான். பரஸ்பரம் அப்படியே இருந்ததென்றால் அதை என்ன சொல்வது? அதை எப்படித்தான் சொல்வது போ!

"ஆச்சு. இரண்டு வருஷமாச்சு. அவன் உத்தி யோகத்துக்குப் போகிறபோது நாற்பது ரூபாய் சம் பளம். இரண்டு வருஷத்துக்கெல்லாம் அறுபது ரூபாயாயிற்று. சம்பளம் எத்தனை இருந்தால் என்ன, மனசில் சமாதானம் ஏற்பட்டுவிட்டால்—? அவர்க ளுடைய குடித்தனம் சாமான்யமாகத் தோன்றினாலும் அவர்கள் சம்பந்தப்பட்ட வரையில் தேவபோகந்தான். அந்தச் சமயத்தில்தான் அவர்களுக்கு ஒரு குழந்தையும் பிறந்தது."

"குழந்தை வேறு இருக்கிறதா?"

"அதை ஏன் கேட்கிறாய்? அது இல்லை—ஏன், அதனால் ஒன்றும் இல்லை. குழந்தை பிறந்த பிறகுதான் அவர்களுடைய சந்தோஷம் இரட்டிப்பாயிற்று! ஆகா! அந்தக் குழந்தையை அவர்கள் வளர்த்த செல்லம்! அப்போதுதான் நான் போயிருந்தேன்; ஆபீஸ் போகிற வரையில் குழந்தையைக் கீழே இறக்க மாட்டான். வந்ததும் வராததும் உடுப்பைக்கூடக் கழற்றமாட்டான். குழந்தைதான் ஞாபகம். அதை எடுத்து வைத்துக் கொண்டு ஒரு நாழிகை கொஞ்சாவிட்டால் வேறு வேலை ஓடாது அவனுக்கு.

"நான் போயிருந்த அன்று சாயங்தரம் அஞ்சு மணி இருக்கும். குழந்தையை அறைக்குள்ளே வைத்து நான் விளையாடிக்கொண்டிருந்தேன். இவன் அப்பொழுதுதான் வருகிறான். வரும்பொழுதே கூடத்தில் நின்றுகொண்டிருந்த செல்லத்தைக் கண்டான். அவளிடம் குழந்தை இல்லை. ஐயோ, அப்போது அவன் போட்ட சத்தம்! 'குழந்தை எங்கே செல்லம்?' என்று கூவி விட்டான். உடனே நான் உள்ளே இருந்து, 'இங்கே பத்திரமா இருக்குடா உன் பிள்ளை' என்றதும், 'நீங்களா மாமா!' என்று சிரித்துக்கொண்டு உள்ளே வந்தான்.

"அவனே அப்படி இருந்தால் அவளைப்பற்றிக் கேட்கவேணுமா? அவனுக்கு மேலே அவள். ஆனால் இதனாலே அவர்களுடைய பரஸ்பரப் பிரியத்திலே கொஞ்சமாவது வித்தியாசம் உண்டா? துளிகூடக் கிடையாது. இன்னும் இதனாலே அதிகப்பட்டது என்றுதான் சொல்லவேண்டும். இந்தச் சமயத்தில் தான் வந்தது."

"என்ன வியாதி?"

"வியாதி ஒன்றும் இல்லை. மூளைக் கோளாறு."

"யாருக்கு? செல்லத்துக்கா?"

"இல்லை இல்லை! இந்தக் காலத்தில்தான் இங்கிலீஷ் படித்துவிட்டால் கொஞ்சம் மூளை புரண்டு விடுகிறதே. இருந்தாலும் சாமு அந்த மாதிரி இல்லை என்று திருப்திப்பட்டுக்கொண்டிருந்தேன்..நானும் எவ்வளவோ வாதாடிப் பார்த்தேன்...

"ஒன்றும் இல்லை. சாமுவுக்கு நாகரிக யோசனை எல்லாம் தோன்றிற்று......அதாவது உலகத்திற்கே தான்தான் கர்த்தா என்று நினைத்துக்கொண்டான். இருந்தாலும், இன்னமும் எனக்கு, சாமுவா அப்படிச் செய்தான்! என்று ஆச்சரியமாய் இருக்கிறது. நிறை குடப் பாலில் துளி விஷம் கலந்தது...."

"என்ன செய்தான்?"

"என்ன செய்தான்! அளவுக்கு மீறி வம்சவிருத்தி செய்யக்கூடாதென்றும், நம்முடைய சௌகரியம் போல், இஷ்டம் போல் கருத்தடை செய்துகொள்ள வேண்டியது அவசியமென்றும் அந்தப் பெண்ணுக்குப் போதனை செய்யத் தொடங்கிவிட்டான்."

"அந்தப் பெண்?"

"அதென்ன செயயும்? இருந்தாலும் புலிக்குட்டியின் பெண்ணில்லையா? அந்தப் பிடிவாதம் கொஞ்சங்கூட இருக்காதா? ஆரம்பத்தில் அதை லட்சியம் செய்யாமல்தான் இருந்தாள். கடைசியில் அவனுடைய இஷ்டத்துக்கு இணங்கிவிட்டாள்."

"என்ன பண்ணினான்?"

"அவ்வளவுதான். அவளைக் கூட்டிக்கொண்டு போய் ஏதோ ஆபரேஷனாம்; அதற்கப்புறம் பிள்ளையே கிடையாதாம்; இரண்டே நாளில் முடித்துக்கொண்டு வந்துவிட்டானாம்!"

"அட பாவி!"

"அப்போதுதான் கிராமத்துக்கு வந்திருந்தான். எனக்கு இதெல்லாம் ஒன்றும் தெரியாது. யதேச்சையாகப் பேச்சு வந்தபோது இதைப்பற்றி என்னிடங்கூட வாதாடினான். நான் என்ன சொல்லியும் ஏற வில்லை. 'ஏண்டா! உலகத்துக்கு நீ என்ன அதிகாரியா? உன்னுடைய பாட்டை நீ பார்த்துக்கொண்டு போனால் போதாதா? வரப்போகும் வம்சத்தைப் பற்றி நமக்கென்ன?' இன்னும் எவ்வளவோ சொன்னேன் நான். அவன் என்ன சொல்லியும் கேட்கவில்லை.

"என்னவோ மாமா உங்களிடம் எனக்கு ரொம்ப மதிப்பு உண்டு. ஆனால் இந்த விஷயத்திலே எனக்கு அபிப்பிராய பேதம் இருக்கிறது வருந்தத்தக்கதுதான். நான் என்னுடைய மனசுப்படிதான் செய்யப் போகிறேன்" என்று ரொம்ப மரியாதையாகச் சொல்லி விட்டான். அவனை அப்புறம் என்ன பண்ணுவது?"

"அப்போது அந்தப்படியே அந்தப் பெண் சம்மதித்து விட்டாளா?"

"அதுதான் சொன்னேனே: அது அவன் மேல் உயிரா யிருந்தது! அன்னியோடே அவர்கள் நல்ல காலம் தொலைந்தது. வீட்டிலே எமன் புகுந்தான். சந்தோஷம் தொலைந்தது. அன்றைக்குப் பிடித்த சனி வளர ஆரம்பித்தது.

"இப்படி ஒரு வருஷமாச்சு. இருந்த குழந்தை உருப்படியா இருக்கப்படாதா? சனீசுவரன் ஒரு விதத்திலா படுத்துகிறான்? அதுக்கு என்னவோ தலையை வலித்தது; ஒரு மாசம் இழுத்துக்கொண்டு கிடந்தது. அப்படியே கண்ணை மூடிவிட்டது! குழந்தை என்றால் குழந்தையா? சொர்ண விக்கிரகம் மாதிரி! அடாடா....!"

"அதுவும் போச்சா! த்ஸ! த்ஸ! த்ஸ!"

"தொலைந்தது. குடித்தனம் நாசமாய்ப் போச்சு! எப்படி இருந்த வீடு!...ஊம். பாக்கியையும் சொல்லி முடித்துவிடுகிறேன். அன்னியிலே இருந்து சனி உச்சத்திலே ஏறிவிட்டான். ஒரு மாசம் வரையில் தலை தூக்கவில்லை, அந்தக் குட்டி செல்லம். மண்டை வீங்கிப்போச்சு. சோறு தண்ணி கிடையாது. உடம்பு துரும்பாய் விட்டது. அவனும் கதறினான். அவன்தான் என்ன பண்ணுவான்?-அவனைவிட அவளுக்குக் குழந்தையிடம் எத்தனை அபிமானம் இருந்தது என்று எனக்கு அப்போதுதான் தெரியும். நான் என்னாலே முடிந்த வரையில் தேற்றினேன். என்ன இருந்தாலும் பெற்ற மனசு சாமான்யமாய்க் கேட்குமா? அதுவும் சாதாரணக் குழந்தையாகவா இருந்தது அது?..அவன் எத்தனை நாள் கதறமுடியும்? சாப்பாட்டு வழியைப் பார்க்க வேண்டாமா? அதனால் அவன் ஒருவாறு தேறிக் கொண்டு ஆபீசுக்குப் போய் வந்தான். ஆனால் அந்தக் குட்டி மூன்று மாசம் வரையில் சரியானபடி இல்லை என்று கேள்விப்பட்டேன்.

"இருந்தாலும், அதற்கு அப்புறமும் அவள் பார்வைக்குச் சரியாக இருந்தாளே ஒழிய, உள்ளூற நிம்மதியில்லாமலேதான் இருந்திருக்கிறாள். என்னவோ நல்ல வீட்டிலே, லக்ஷ்மி நர்த்தனம் பண்ணிக்கொண்டிருந்த வீட்டிலே, மூதேவி குடியிருக்க ஆரம்பித்துவிட்டாள். காலத்திற்கு ஏற்றாப்போல் தரித்திரங்கூட வந்து விட்டது; அதாவது அவனுக்குச் சம்பளத்தைக் குறைத்துவிட்டார்கள். சமயத்துக்கு எல்லாம் சேருமோ இல்லையோ?..."

"சரிதான், அப்போது, யாருக்கும் வெறுப்பு வருவது..."

"இரு, இரு. அவசரப்படாதே. இன்னும் கொஞ்சம் இருக்கிறது. சொல்லி முடித்துவிடுகிறேன். வீட்டில் தரித்திரம் வரவே சமாதானம் குறைந்துவிட்டது.

தம்பதிகளுக்குள்ளே மனஸ்தாபமும் தலையெடுக்க ஆரம்பித்தது. தங்கள் நிலைமைக்காக ஒருவரை ஒருவர் மனத்துக்குள்ளேயே குற்றம் சாட்டிக்கொள்ள ஆரம்பித்தனர். எத்தனை நாள்தான் உள்ளே இருக்க முடியும்? ஒரு வருஷமாகியும் இன்னும் எதற்காகத் துக்கம் காக்க வேணும் என்று கோபம் வந்தது அவனுக்கு. அவளோ என்றால், 'பாப்பா, பாப்பா!' என்று உயிரை விட்டாள்! அந்தக் குழந்தைக்குப் பெயர் பாப்பாவாம்! ராக்காலங்களில் தன்னை மறந்து பிதற்றிக்கொண் டிருந்தாள். அவளுடைய நெஞ்சுக் குமுறல் அவனுக்குத் தெரியுமா? அன்றியும் அதுமட்டுமா? இன்னும் எதை எதை நினைத்தாளோ அவள்!—புலிக்குட்டியின் பெண்—வாய் திறந்து கண்டிக்க ஆரம்பித்தான் அவளை. எத்தனை நாள் தான் அவள் பொறுத்துக்கொண் டிருப்பாள். ஏதோ பதில் சொல்ல ஆரம்பித்தாள். எப்பொழுதோ ஒரு நாள் அவனைச் சுடச்சுடச் சொல்லிவிட்டாள்போல் இருக்கிறது. அவனுக்கும் வேகம் வந்துவிட்டது. அவளை அடியடி என்று போட்டு நொறுக்கிவிட்டான். ஆம்! இது விஷயம் பூராவும் தெரிந்துகொள்ளவேண்டுமென்று அடுத்த வீட்டில் விசாரித்து இதெல்லாம் தெரிந்துகொண்டேன்.

"அவ்வளவுதான். ஏற்கனவே மாருட்டமாக இருந்த புத்தி பூரணமாகத் திரும்பிவிட்டது. பித்துப் பிடித்துவிட்டது..."

"யாருக்கு, சாமுவுக்கா?"

"இல்லை; செல்லத்துக்கு. அதே குழந்தைப் பைத்தியந்தான். வீட்டு வேலைகளைக்கூடச் செய்வதில்லை. அறுபது நாழிகையும் அதே புலம்பல்; 'பாப்பா! பாப்பா! பாப்பா!' இதே கூப்பாடுதான்! அவனும் எவ்வளவோ அதட்டி உருக்கிப் பார்த்தான்! ஒன்றும் பலன் இல்லை.

"இந்தச் சமயத்தில் நான் ஒரு கேஸ் விஷயமாகப் போயிருந்தேன். அப்பொழுது பார்த்துவிட்டு வருவோம் என்று அங்கே போயிருந்தேன். 'வாருங்கோ மாமா' என்றான். அவன் முகத்தைப் பார்க்க வேணுமே! என்ன விகாரம்! அந்த வீடுதான், அப்போது சுடுகாடாகவா இருக்கும்! போன தடவை எப்படி இருந்தது! 'வாருங்கோ மாமா, ஓட்டலுக்குச் சாப்பிடப் போவோம்' என்று அழைத்தான். 'ஏன், செல்லம் எங்கே?' என்றேன்.

" 'அவளுக்கு உடம்பு சரியா இல்லை மாமா; எழுந்திருக்கவே இல்லை' என்றான். நான்கூட, 'என்னடா உடம்பு? டாக்டரிடம் காட்டு. அலட்சியமாய் இருக்காதே' என்றேன். அவன் கவனிக்காததுபோல் இருந்துவிட்டான். அதற்கப்புறந்தான் நான் விசாரித்ததும் எனக்கு உண்மை தெரியவந்தது..

"அப்பொழுது, தற்கொலை.."

"தற்கொலை இல்லை அது!"

"இல்லையா! என்னது!"

"சொல்லுகிறேன் கேள். இப்படியே அதற்குப் பைத்தியம் அதிகமாய்ப் போய்விட்டது. நான் போயிருந்தேன் என்று சொன்னேனே? அன்று நான் வெளியே இருந்து ராத்திரி ஒன்பது மணிக்கு வீட்டுக்குத் திரும்பினேன். உள்ளே ஏதோ பேச்சுக் குரல் கேட்டது. சற்று நின்று ஒற்றுக் கேட்டேன்.

"ஐயோ!..சதிபதிகளுக்குள்தான் விவாதம். அந்தப் பெண் குரலை—அப்பா! அந்த மாதிரி நான் அதுவரையில் கேட்டதில்லை.—

"மூதேவி! பிராணனை வாங்குகிறயே."

"பாவி! நீதானே பாப்பாவைக் கொண்டுபோனாய்!"

"சீ! சீ! மூடு வாயை, விடியா மூஞ்சி!"

'"நீ நாசமாய்ப் போக! என்னைக் குட்டுச் சுவராக்கி, என் தங்கத்தை முழுங்கிவிட்டு முழிக்கிறாயா! பழி காரா!'

'ஐயையோ!'

அதற்கப்புறம் நான் கேட்டதை! ..மடமடவென்று வெறியுடன் சிரித்தாள் பைத்தியம். அதே சமயத்தில் எனக்கு என்னவோ தோன்றிற்று. உடம்பெல்லாம் வெடவெடவென்று நடுங்கிற்று. தடாலென்று கதவைத் திறந்துகொண்டு என்னை அறியாமலே உள்ளே ஓடி னேன். அப்பா! அங்கே கண்ட கோரத்தை என்னால் மறக்க முடியாது. 'ஐயோ!' என்று கதறிக்கொண்டு வீழ்ந்தான் சாமு. அதோடு சரி...

"என்ன, என்ன!"

"அவ்வளவுதான்! வெறிபிடித்த பித்துக்குளி அவன் மேல் பாய்ந்துவிட்டாள். பக்கத்தில் கிடந்த கயிற்றை எடுத்து அவனுடைய கழுத்தை நெருக்கி விட்டாள்!....ஐயோ! அந்தச் சமயத்தில் அவள் முகத் தைப் பார்த்தால் அம்மம்மா! கல்பனை செய்து பார்க் கக்கூட முடியாது! என்ன கோரம்! என்ன வெறி! காளி ரூபம்! விழி பிதுங்கிவிட்டது! கயிறே தேவை இல்லை அவனுக்கு. அந்த ரூபத்தைப் பார்த்தாலுமே போதும் என்று நினைக்கிறேன் நான்....மறு நிமிஷமே பிரேதத்தின் மேல் விழுந்து பிரலாபிக்கத் தொடங்கி விட்டாள். சத்தமில்லாமல் அடக்கிவிட்டேன். பைத் தியம்! என்ன பண்ணுவது? அப்புறம் நானே இருந்து தற்கொலை என்று எழுதி வைத்துவிட்டேன். வேறென்ன பண்ணுவது? யாரைச் சொல்வது? இதைச் சொன்னால் தாங்குவாளா சுந்தரியம்மாள்?

"அவளும் எல்லோரையும் போலவே, கணவன் இறந்ததும் செல்லத்துக்கு மூளை பிசகிவிட்டதென்றே நம்பிவிட்டாள். எப்படி இருந்தால் என்ன? எல்லாம்

ஒன்றுதான். அதே விசனத்தாலேதான் அவளும் போய் விட்டாள்.''

"அந்தப் பெண் எங்கே இப்போது?"

"சென்னையில் பைத்தியக்கார ஆஸ்பத்திரியில். என்னவோ நல்ல குடும்பம் நாசமாய்ப் போச்சு. இருந்த இடம் தெரியல்லே! துவம்சம்! இப்படியா தூர்ப்புத்தி தோன்றவேணும். அந்தப் பிள்ளைக்கு.... த்ஸ! த்ஸ!! த்ஸ!..''

# தாய்

## 1

சென்னையிலிருந்து வரும் பாசஞ்சர் வண்டி பாலூரை அடையும்போது இருட்டிப் போய்விடும். பாலூர் சின்ன ஸ்டேஷனுதலால் அங்கே அதிகமான பிரயாணிகள் இறங்குவதில்லை; ஏறுவதும் இல்லை. வருஷத்திற்கு ஒரு முறை பத்து மைல் கிழக்கே உள்ள பள்ளக்குடியில் மாட்டுச் சந்தை நடக்கும். அன்று மாத்திரம் பாலூர் ஸ்டேஷன் பிராயணிகள் நிறைந்து காணப்படும். அந்த ஒரு நாளை வியாபாரத்திற்காக ரெயில்வே கம்பெனியார் ஒரு ஸ்டேஷனை எதற்காக வைத்திருக்கிறார்கள் என்று தோன்றும். ஆனால் போட் மெயில் முதல் ஒவ்வொரு வண்டியும் அங்கே நிற்பதைக் கவனிக்கும்போது ஏதாவது காரணம் இருக்க வேண்டும் என்று தெரிகிறது. பாலூருக்குக் கிழக்கேயும் மேற்கேயும் முப்பது மைல் தூரத்துக்கு ஜலவசதி இல்லை. அதனால் ஒவ்வொரு வண்டியும் அங்கே நீர் நிரப்பிக்கொண்டு போவதைப் பார்க்கையில் அதற்காகவே அந்த ஸ்டேஷனை ஸ்தாபித்திருக்கிறார்களோ என்று நினைக்க இடம் ஏற்படுகிறது.

அன்றைத் தினம் பாசஞ்சர் வண்டி வரும்போது வழக்கத்தை விடக் கால் மணி கூட ஆகிவிட்டது. அதனால் சற்று அவசரமாகவே எஞ்சின் தண்ணீரைப் பருகத் தொடங்கியது.

வழக்கம்போல், டிக்கட் கொடுப்பவர், டிக்கட் பரிசோதகர், ஸ்டேஷன் மாஸ்டர் முதலிய பலவிதமான இலாகாக்களையும் ஒருங்கே நிர்வகிக்கும் பிரணதார்த்தி, தமது ஒவ்வோர் உத்தியோகத்தையும் முடித்துக்

கொண்டு பிளாட்பாரத்தை அடைந்தார். ஒரு முறை வழக்கம் போல், ஓடிய களைப்பால் அலுத்து வந்து நிற்கும் நீண்ட வண்டித் தொடரின்மேல் தமது திருஷ்டியைச் செலுத்தினார். ஒருவரும் இறங்க வில்லை...., இல்லை. யாரோ ஒரு பிரயாணி கடைசி வண்டியிலிருந்து இறங்குகிற மாதிரி இருக் கிறதே!..ஆமாம். உடனே ஓடிப்போய், பூட்டிய கதவைத் திறந்துவிட்டு, கையிலிருந்த லாந்தரைக் கீழே வைத்துவிட்டு, டிக்கட் பரிசோதகர் ஹோதாவில் நின்றார்.

வந்தவள் ஒரு பெண்மணி, தலையில் முக்காடு இட்டுக்கொண்டிருந்தாள். சென்னையிலிருந்து வருகிறவளாகக் காணவில்லை. இல்லாமற் போனால் ஒரு துணி மூட்டையாவது கையில் இருக்காதா? கையை வீசிக்கொண்டுதான் வந்தாள். அவள் டிக்கட்டை நீட்டிவிட்டு நகர்ந்த பொழுது மின்சார வெளிச்சம் அவள் முகத்தில் பட்டது. பிரணதார்த்தி திடுக்கிட்டார். அந்த முகத்தை எங்கோ பார்த்திருந்த ஞாபகமாக இருந்தது. அவள் அணிந்திருந்த மெல்லிய ஆடையும் பாதங்களைத் தாங்கிய செருப்பும், காதுகளில் தொங்கிய லோலக்கும் அவளை நவீன நாகரிகமானவள் என்று அறிவித்தன. வயசு முப்பது இருக்கும்.

பிரணதார்த்தி இரண்டாம் முறை யோசிப்பதற் குள் அவள் வெளியே போய்விட்டாள். அவளுடைய மறையும் உருவத்தைச் சற்று நேரம் பார்த்துக்கொண்டு நின்றார். பிறகு சட்டென்று கையிலிருந்த டிக்கட்டைப் பார்த்தார். சென்னையிலிருந்துதான் வருகிறாள்!

## 2

ஸ்டேஷனுக்கு வெளியே வந்ததும் குமுதம் ஒரு விநாடி தயங்கி நின்று நீண்ட ரஸ்தாவை நோக்கினாள்.

பத்து வருஷங்களுக்கு மேல் ஆகிவிட்டதல்லவா? அப்போதெல்லாம் மின்சார விளக்குகள் வரவில்லை. இப்போது ரோடு நெடுக மின்சார வெளிச்சம். அநேகம் புதுக் கட்டிடங்களும் காணப்பட்டன. தனக்கு மிகவும் பழக்கமான ரஸ்தாவில் நடக்கத் தொடங்கினாள். அங்கிருந்து முக்கால் மைல் போனால் பாலூர்க் கிராமம்.

அதோ அந்தச் சிவப்புக் கட்டிடந்தான் அவள் படித்த பாடசாலை. அப்போது ஏழாவது வரையில் இருந்தது. இப்போது இன்னும் அதிக வகுப்புக்கள் ஏற்படுத்தியிருப்பார்கள். இல்லாமற் போனால் இவ்வளவு புதுக் கட்டிடங்கள் எதற்கு?

பாடசாலையின் முன் வந்ததும் பழைய நினைவுகள் அவள் மனத்தில் குவியத் தொடங்கின. அப்போதெல்லாம் 'ஜல் ஜல்' என்று சலங்கை கட்டிய வண்டியில் வருவாள். அப்போது அவள் வாழ்க்கை எவ்வளவு உற்சாகமாய்க் கவலையற்று இருந்தது! அக்காலத்தில் சிற்றப்பா உயிருடன் இருந்தார். சிற்றப்பா காலமாகிப் பத்து வருஷங்கள் ஆகிவிட்டன. கடைசித் தடவையாய் அவரைப் பார்க்கக்கூடக் கொடுத்து வைக்கவில்லை! சிற்றப்பாவைப் போல் அவ்வளவு பிரியமாய் யார் இருப்பார்கள்! அந்தக் காலமெல்லாம் போய்விட்டது.

அன்னமும் இந்தப் பள்ளிக்கூடத்தில்தான் படிக்கிறாளோ! இப்போது ரொம்பப் பெரியவளாய் இருப்பாள். பத்து வயசு ஆகும் அல்லவா!..கொஞ்சம் வெளிச்சத்தோடு வந்திருந்தாலாவது பாடசாலையிலேயே அன்னத்தைப் பார்த்திருக்கலாம். அப்பா, வீட்டில் நுழைய விடுவாரோ மாட்டாரோ. இந்தப் பாழாய்ப் போன ரெயில் இருட்டின பிறகுதானே வருகிறது, கட்டை வண்டி மாதிரி?

அப்பா என்ன சொல்லுவாரோ! அவர் மனம் இத்தனை வருஷத்தில் கொஞ்சங்கூட இளகியிருக்காதா?..

அவள் மனம், பழைய காலத்துப் பயங்கரமான காட்சிகளை நினைவுக்குக் கொண்டு வந்தது: அப்போது அப்பா சென்னையில் ஹைகோர்ட் ஜட்ஜாக இருந்த சமயம். மயிலாப்பூரில் அப்போதுதான் பங்களா வாங்கியிருந்தார். அப்பாவைப்போலவே அவளும் இப்போது தன் சம்பாத்தியத்தினால் அதே மயிலாப்பூரில்தான் பங்களா வாங்கியிருக்கிறாள்!

அவள் பேரில் என்ன தப்பிதம்? தன் புருஷன் இறந்தது அவளுக்குத் துக்கம் அல்லவா? அவன் இறந்ததற்கு அவள் ஜவாப்தாரி ஆவாளா? அவளைப் படிக்க வைத்தவர் யார்? அவளுக்குச் சங்கீத சிக்ஷை சொல்லி வைத்தவர் யார்?

அப்பாவையும் முழுவதும் குற்றம் சொல்ல முடியாது. அவரைப்போல் அறிவும் பெருந்தன்மையும் உள்ளவர்கள் வெகு சொற்பம். எல்லாம் தலைவிதி.

மிகவும் உயர்ந்த வரனைப் பார்த்துத்தான் கல்யாணம் செய்து வைத்தார். அவளுடைய கணவன் மதனப்பள்ளி காலேஜில் புரொபஸராக இருந்தான். ஐந்நூறு ரூபாய் சம்பளம். இதைத் தவிர ஏராளமான சொத்தும் இருந்தது. அவளிடத்தில் பிரியமாய் இல்லையா? உயிராய்த்தான் இருந்தான். 'குமுதம்' என்று அவன் வாய் நிறையக் கூப்பிடும் அழகே போதாதோ? இரண்டு வருஷந்தான் அவனுடன் வாழ்ந்தாள். அதற்குள்ளாக இரண்டாயிரம் வருஷம் வாழ்ந்த ஆனந்தத்தை அவள் அடைந்தாள். ஒரு கணங்கூட அவனை விட்டுப் பிரியச் சம்மதிக்க மாட்டாள். அவன் காலையில் போய் விட்டுப் பகல் திரும்பி வருவதற்குள் ஒரு யுகம் மாதிரி தோன்றும். அதற்காக அவனை எத்தனை தடவை சில்லறையாகச் சண்டைப் பிடித்திருப்பாள்! ஐயோ! கடைசிக் காலத்தில் அவனைப் பார்க்கக்கூடக் கொடுத்து வைக்கவில்லை!

அப்போது அன்னத்தைப் பிரசவிப்பதற்காகச் சென்னைக்கு வந்திருந்தாள். அந்தத் தடவை அவள் புறப்பட்டு வரும்போது ரெயிலைப் பிடித்துக்கொண்டு அவன் அழுத அழுகை அவளுக்கு இன்னும் மறக்க வில்லையே! குழந்தை பிறந்து இரண்டு நாளைக்கெல்லாம் இடி விழுந்துவிட்டது! நான்கு நாள் ஜ்வரமாய்க் கிடந் தானும். அவ்வளவுதான். இந்தப் பயங்கரம் எங்கே. உண்டு? அதன் பிறகு பத்து நாளைக்கு அவளுக்குச் சுய ஞாபகம் உண்டா? புருஷனைத் தொடர்ந்து அவளும் போய்விடுவாளோ என்று அத்தனை பேரும் கவலைப் பட்டனர்.

அதெல்லாம் போய் இந்த வாழ்க்கையில் ஒரு சுவை ஏற்பட்டது. அன்னத்தின் களங்கமற்ற முகத் தைப் பார்த்துக்கொண்டே இருந்தால் போதும் என்று தோன்றிற்று. சாயலெல்லாம் அவளுடைய தகப்பனு ரைப் போலவே இருந்தாள். அவள் சிரிக்கும்போது கன்னத்தில் குழி விழுகிறதே, அதற்கு லக்ஷம் பொன் கொடுக்கலாம்! என்ன அழகு! 'தாத்தா!' என்று அந்த ஒரு வயசுக் குழந்தை தன் மெல்லிய பூக்கையால் ஸ்பரிசிக்கும்போது எத்தனை இன்பம்! தனக்கு நிகரானவர் இந்த உலகில் ஒருவரும் இல்லை என்றே தோன்றும்.

அப்படியே அவளுடைய வாழ்க்கை போயிருக்கக் கூடாதா? அப்பாவுக்கு ஏன் இந்தப் புத்தி தோன்ற வேண்டும்? பெண்ணுக்குத் துக்கத்தை மாற்ற வேண்டு மாம். அதற்காகச் சங்கீத சிக்ஷைக்கு ஏற்பாடு செய் தார். அவளுக்கும் அது அப்போது மனசுக்கு ஆறு தலாய்த்தான் இருந்தது. குழந்தையுடன் கொஞ்சிய நேரம் போக மீதிப் பொழுதைச் சங்கீத அப்பியாசத் தில் செலவழித்தாள்.

அவளுக்குப் பாடம் சொல்லிக்கொடுத்த சுந்தரம் பொல்லாதவனா? 'உன்னைப்போல் சங்கீத ஞானமும்

அழகும் உள்ளவர்கள் காலத்தை வீணுக்குவார்களா?' என்றுதானே கேட்டான்? அது நிஜந்தானே?

இப்போது படித்துவிட்டு எத்தனை பெண்கள் உத்தியோகம் பார்க்கிறார்கள்! அதைப் போலத்தானே இதுவும்?

அவளுக்குச் சினிமாவில் சேர்ந்து ஏராளமாகப் பணம் சேர்க்க வேண்டும் என்ற எண்ணம் இல்லை. தன்னுடைய சங்கீதத்தைப் பத்துப் பேர் கேட்டுப் பாராட்ட வேண்டும். தன்னுடைய நடிப்புத் திறமையைக் கண்டு புகழவேண்டும்! ஒருவருக்கும் பாரமாக இல்லாமல் சுதந்தரமாக வாழ்வதில் எவ்வளவு பெருமை இருக்கிறது! நடத்தை கெட்டுவிடும் என்று சொல்வது எவ்வளவு அபத்தமானது? சுதந்தரமாக வெளியில் போய்ச் சம்பாதிக்கும் ஆண் பிள்ளைகள் எல்லோருமே கெட்டு விடுகிறார்களா? இல்லை. நடத்தை கெட்ட பெண்கள் எல்லோருமே வீட்டை விட்டு வெளியில் கிளம்பினவர்கள்தாமா? நல்லவர்களும் கெட்டவர்களும் எங்கேயுந்தான் இருக்கிறார்கள். ஆண் பிள்ளைகளுக்கு உள்ள உரிமையைப் பெண்களுக்கு மட்டும் ஏன் கொடுக்கக்கூடாது?

ஆனால், அவளுடைய குழந்தை? குழந்தையை விட்டு அவளால் பிரிந்திருக்க முடியவில்லை. சுந்தரத்துடன் கூட முன்னேற்பாட்டின்படி வீட்டை விட்டு வெளியேறி விட்டாள். பம்பாய்க்குப் போனாள். அங்கேதான் அவளுக்கு முதல் உத்தியோகம் கிடைத்தது. ஆறு மாதத்தில் படம் முடிந்தது. படம் வெளியானதுமே அவள் முதல்தர நக்ஷத்திர மாகிவிட்டாள். ஏராளமாகப் பணம் குவியத் தொடங்கியது. மேலும் மேலும் ஒப்பந்தங்கள் வந்து விழுந்தன. ஆனால் அவள் மனத்தில் நிம்மதி இல்லை. குழந்தையை அழைத்துக்கொண்டு வந்துவிட வேண்டும் என்று மனம் துடித்தது.

அன்றே வீட்டுக்கு வந்தாள். தைரியமாக ஒரு மோட்டாரில் போய் இறங்கினாள்...அவளுக்கு இன்னும் நன்றாக நினைவு இருக்கிறது, அந்தக் காட்சி!

வீட்டு வாசலில் மோட்டார் வந்து நின்றதும் உள்ளேயிருந்து ஓடி வந்தார் தகப்பனார். முதலில் அவருக்கு அவளைத் தெரியவில்லை. பிறகு தெரிந்தது. உடனே அவர் முகம் சிவந்தது. நெற்றி நரம்புகள் புடைத்தன. ஐயோ! அவர் கோபத்தை நினைக்கவே பயமாக இருந்தது!

"ஏ, நாயே! போ வெளியிலே!" என்று கர்ஜித்தார்.

அப்போது அவளுக்கும் கோபம் வந்தது; அவருக்குப் பிறந்த பெண்தானே?

"என் உடைமையைக் கொடுத்தால் போய் விடுகிறேன்!"

"என்னது!"

"என் குழந்தையை அழைத்துக்கொண்டு போகத் தான் வந்தேன்."

"சீ! சீ! சீ! போ வெளியே!" என்று புலி போல் சீறிக்கொண்டு பாய்ந்தார். அப்படியே அவளைக் கழுத்தைப் பிடித்துத் தள்ளினார் வேகமாக. அவள் உருண்டுகொண்டே மோட்டார் அருகில் போய் விழுந்தாள். விழுந்த வேகத்தில் ஒரு பல் மூளியாகி உதட்டிலிருந்து ரத்தம் கசிந்தது. மெதுவாக எழுந்து உதட்டைத் தடவிக்கொண்டாள்.

அதற்குள் தெருவில் கும்பல் சேர்ந்துவிட்டது. உள்ளேயிருந்து தாயும் ஓடிவந்தாள். அவளுக்கு விஷயம் விளங்கிவிட்டது.

"இதென்ன மூர்க்கத்தனம்!" என்று பதறிப்போய் அவளை நோக்கி ஓடி வந்தாள். அதற்குள் அவர் வழியை மறித்துவிட்டார்.

"போ உள்ளே! இனிமேல் அந்த நாய் படியேறி னால் காலை வெட்டிப் போடுவேன்!" என்று தாண்டினார். ஒன்றும் செய்ய முடியாமல் தாய் கண்ணீரைக் கொட்டிக்கொண்டு நின்றாள்.

நெஞ்சில் ஆத்திரமும் துக்கமும் கடல்போல் பொங்க, ஒரு கையால் உதட்டைத் தடவிக்கொண்டே குமுதம் எழுந்திருந்தாள். காரில் எப்படித்தான் ஏறி உட்கார்ந்தாளோ தெரியாது. மறு விநாடி கார் அதி வேகமாகப் பறந்தது.

## 3

கடந்த எழெட்டு வருஷங்களில் அவள் எவ்வளவோ அநுபவித்துவிட்டாள். சென்னையில் இரண்டு பெரிய வீடுகள் அவளுக்குச் சொந்தம். ஒரு மோட்டார் கார்; பாங்கியில் ஏராளமான பணம்; வீட்டில் இட்டதைச் செய்ய வேலைக்காரர்கள் காத்துக் கிடந்தார்கள். ஆனாலும் அவளுக்கு நிம்மதி இல்லை. அவள் தேடிச் சென்ற சுதந்தரம் கிட்டிவிட்டது. வாழ்க்கையில் வெற்றி அடைந்துவிட்டாள். ஆனால் மனத்தை வெல்ல முடியவில்லையே. இது வேடிக்கைதான்.

கோரமான பழைய நினைவுக் குவியல்களிடையே நீந்திக்கொண்டிருந்த குமுதம் கிராமத்தை அடைந்து விட்டதை உணர்ந்தாள்.

அப்படியே நேராகப் போனால் அரசமரத்தடி, காவேரித் துறை. அங்கிருந்து இடது பக்கம் திரும்பினால் அக்கிரகாரம். நன்றாக இருட்டிவிட்டதென்றாலும் அவளுக்கு நேராக அக்கிரகாரத்துக்குள் நுழையக் கூச்சமாக இருந்தது. யாராவது தெரிந்தவர்களைச் சந்தித்து விட்டால்—?

அவள் நின்ற இடத்திலிருந்து இடது பக்கம் திரும்பினால் ஒரு பாதை போகிறது. அது குடியானத்

ம் தரு வழியே செல்கிறது. அந்தப் பாதையில் திரும்பி நடந்தாள். இவ்வளவு நேரம் சஞ்சலமற்றிருந்த அவள் நெஞ்சு படபடக்கத் தொடங்கியது. மனத்தில் பெரும் பாரம் எழுந்து அழுத்தத் தொடங்கியது. அவள் காரியம் சித்திக்குமா? குழந்தையை, அவளுடைய அன்னக் குஞ்சை, ஒரு தடவையாவது பார்க்க முடியுமா?

குடியானத் தெருவைக் கடந்து கீழைத் தெருவுக்குப் பின்புறம் வயல்கள் வழியே நடந்தாள். தூரம் வளருகிறது.

அதோ மேலைத் தெரு; அந்த மூலையில் பெருமாள் கோவில். அதற்கு அடுத்த வீடுதான் அவளுடைய வீடு அவளுடைய வீடா! அப்பாவின் வீடு.

பெருமாள் கோவிலின் முன்புறம் சில குழந்தைகள் விளையாடிக்கொண்டிருந்தன. ஒரு கணம் நின்று ஊறும் நெஞ்சுடன் கவனித்தாள். அதோ அந்தப் பெண், கறுப்புப் பட்டுப் பாவாடை கட்டிக்கொண்டிருக்கும் பெண்தான் அன்னம். அவளுக்கு நிச்சயமாய்த் தெரியும். அதே பெருமாள் கோவிலின் முன்புதான், அவளும் சின்னக் குழந்தையாக இருந்தபோது விளையாடியிருக்கிறாள். அப்படியே போய்க் குழந்தையைக் கட்டிக்கொண்டுவிட்டால் என்ன? ஆனால் குழந்தை கத்திவிட்டால்? சிரமத்துடன் ஆசையை அடக்கிக்கொண்டு பக்கத்துச் சந்துக்குள் நுழைந்தாள். கால் எழவில்லை. உயிரெல்லாம் கோவில் வாசலில் நின்றது. நின்று திரும்பிப் பார்த்தாள். அதற்குள் அந்தப் பெண் மற்றப் பெண்களுடன் கத்திக்கொண்டே ஓடிவிட்டாள்.

குமுதம் வீட்டு வாசலைக் கவனித்தாள். முன்னால் இப்போது ஒரு கைபிடிச் சுவர் காணப்பட்டது. முன்பெல்லாம் கிடையாது. வீட்டை நிதானித்துக்கொண்டு பின்புறம் போனாள். காலடியில் பட்டு, சருகுகள் சலசலவென்று சப்தித்தன. தூரத்தில் எங்கோ நாய்

குரைத்தது. பயந்துகொண்டே உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு கொல்லைப்புற வேலியைத் திறந்து தோட்டத்துக்குள் நுழைந்தாள். அதோ வலது புறம் தெரியும் அறைதான் சமையலறை. இடது பக்கம் ஏது கட்டிடம்? புதிதாக வீட்டுக்கு வெளியில் ஓர் அறை கட்டப்பட்டிருந்தது. முன்பெல்லாம் அது இல்லை. அதையும் தவிர நெடுகிலும் கம்பி வைத்து மறைத்திருந்தது. அவள் இருந்த காலத்தில் திறந்த வெளியாகத்தான் இருந்தது.

திடுக்கிட்டு நின்றாள். சேலையை வெடுக்கென்று இழுத்தது. பயத்துடன் குனிந்தாள்; ஒன்றுமில்லை. ரோஜாச் செடியில் சேலை நுனி மாட்டிக்கொண்டு விட்டது. சுற்றிலும் பார்வையைச் செலுத்தினாள். எங்கும் ஒரே புஷ்பச் செடிகள்! அப்பாவுக்கு எப்போதும் புஷ்பச் செடிகள் என்றால் பிடிக்கும்.

வீட்டின் கோடியை அடைந்தாள். கம்பிக் கதவு உட்புறம் பூட்டியிருந்தது. கதவண்டை நின்று உள்ளே எட்டிப் பார்த்தாள். உள் கதவு கொஞ்சந்தான் திறந்திருந்தது. உள்ளே பளிச்சென்று மின்சார வெளிச்சம் வீசியது. சமையலறைப் பக்கம் திரும்பினாள். எங்கும் ஒரே நிச்சப்தம். 'கொர்! கொர்!' என்று தவளைகளின் சப்தம் வயற்காட்டிலிருந்து கேட்டு, அந்த அமைதியின் பயங்கரத்தை மிகைப்படுத்திக் காட்டிற்று. லேசான பிறைச் சந்திரன் வானத்தில் மிதந்தது. அதன் மங்கிய வெளிச்சம் மரக் கூட்டங்களின் இருளைப் பிளக்கச் சக்தியின்றி, தெளிவற்ற அவற்றின் உருவங்களைப் பின்னும் கோரமாக்கிக் காட்டிற்று. நெஞ்சு திக்திக்கென்று அடித்துக்கொள்ள, ஒரு விநாடியை ஒரு யுகமாகக் கழித்துக் கொண்டு குமுதம் நின்றாள்.

அம்மா அந்தப் பக்கம் வர மாட்டாளா! வேறு யாராவது வந்துவிட்டால் என்ன செய்வது?

"அம்மா!" என்று கூப்பிட்டால் என்ன? அம்மா மட்டும் தனியாக இருந்தால் போச்சு. அப்பாவும் இருந்துவிட்டால்? இந்தத் தடவை அப்பாவின் மனத்தை அறியாமல், வந்த காரியத்தை இழக்க அவளுக்குச் சம்மதமில்லை. பேசாமல் காத்திருக்க வேண்டியதுதான். எத்தனை நேரம் காத்திருப்பது?

அதோ! ஆமாம், அம்மாதான். கையில் செம்புடன் வருவது, அம்மாதான். அவள் உடல் பதறிற்று. "அம்மா!" என்று கூப்பிடவேண்டுமென்று தோன்றிற்று. வாயிலிருந்து வார்த்தை வரவில்லை.

இவள் நின்ற இடம் சற்று இருண்டிருந்தது. அதனால் இவளை அம்மா கவனிக்கவில்லை. பக்கத்தில் இருந்த புது அறைக்குள் நுழைந்துவிட்டாள். பளிச்சென்று அந்த அறைக்குள் வெளிச்சம் தெரிந்தது. தண்ணீரைக் கொட்டும் சத்தம் கேட்டது. உடனே விளக்கு அணைந்துவிட்டது. அம்மா வெளியில் வந்தாள். இவள் இருக்கும் இடத்துக்கு நேராக வந்து உள்ளே போகத் திரும்பினாள். "அம்மா!"

சொப்பனம் போன்ற குரலைக் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினாள். குமுதத்தைப் பார்த்துவிட்டாள். அப்படியே ஸ்தம்பித்து நின்று வெறிக்கப் பார்த்தாள்.

"நான்தான் அம்மா."

"நீயா!" அவ்வளவுதான். கம்பிக் கதவில் பூட்டாமல் மாட்டியிருந்த பூட்டை எடுத்துக் கதவைத் தள்ளிக்கொண்டு ஓடிவந்தாள். குமுதத்தைக் கையைப் பிடித்துக் கர கரவென்று தாழ்வாரத்திற்கு இழுத்துக் கொண்டு வந்தாள். குமுதம் தடுத்திராவிட்டால் அவளை உள்ளேயே இழுத்துக்கொண்டு போயிருப்பாள்.

"நீ எப்போடி அம்மா வந்தாய்? உடம்பு விச்சா இருக்கியா? முதலில் உள்ளே வந்து சாப்பிடு!"

"சாப்பாடு இருக்கட்டும் அம்மா. குழந்தை சௌக்கியமாய் இருக்கிறாளா?"

"அன்னமா? சமர்த்தா இருக்கிறாள். போய்க் கூட்டி வரவா?"

"வேண்டாம் அம்மா" என்று அவளை நிறுத்தினாள் குமுதம். பிறகு, "என் அம்மா, இன்று கறுப்புப் பாவாடைதானே கட்டிக்கொண்டிருக்கிறாள்?" என்று கேட்டாள்.

"அன்னமா? இல்லையே. சிவப்புச் சீட்டியல்லவா உடுத்துக்கொண்டிருந்தாள்? ஏன்?"

குமுதம் பதில் ஒன்றும் பேசவில்லை; பின்பு அவள் பார்த்தது அன்னமல்லவா? வேறு யாரோ குழந்தை! அவளுடைய முகத்தையும், ஆடையலங்காரங்களையும் முதல் தடவையாக ஏற இறங்கப் பார்த்தாள் தாய். அவளுடைய முகத்தில் ஒரு பரிதாப உணர்ச்சி திரைபோல் படர்ந்தது.

"அப்பா எங்கே?" மிகவும் கஷ்டப்பட்டுத்தான் குமுதம் கேட்டாள்.

தாயின் முகம் சட்டென்று மாறிற்று. "காவேரிக்குப் போயிருக்கிறார்" என்றாள், கண்களில் நீர் பொங்க.

அப்போது உள்ளேயிருந்து, "அம்மா, அம்மா!" என்று ஓர் இளங் குரல் கேட்டது.

"அன்னம்!" என்று திரும்பினாள் தாய். அவளை அறியாமல் ஓடிப் பின்னடைந்து இருண்ட தோட்டத்தை நோக்கினாள் குமுதம். அவள் திரும்பிப் போய் மறைந்து கொள்ளலாம் என்று நினைப்பதற்குள், குழந்தை அங்கே ஓடி வந்துவிட்டது.

"அம்மா, இங்கே என்ன அம்மா பண்ணறே? இன்னும் யாரு?" என்று சமீபத்தில் வந்தது:

"இல்லே தங்கம், பேசிக்கொண் டிருந்தேன்." என்று சந்தேகத்துடன் குழந்தை முகத்தையும் குமுதத்தின் முகத்தையும் மாறி மாறிப் பார்த்தாள்.

குழந்தை குமுதத்தை நிமிர்ந்து பார்த்தது. அவளுடைய மார்பு நின்றுவிடும்போல் அடித்துக்கொண்டது. ஒவ்வோர் அங்கமும் பதறத் தொடங்கியது. நல்ல வேளை! அடையாளம் தெரியவில்லை. எத்தனை வருஷமாச்சு!

அந்தப் பயங்கரமான அமைதி குழந்தையின் இள மனத்தையும் பற்றிக்கொண்டதோ என்னவோ! சட்டென்று அதிருப்தியுடன் திரும்பியது.

"வா, அம்மா! பசிக்கிறது" என்று தன் பாட்டியைப் பிடித்து இழுத்தது. அவளும் குழந்தையோடு உள்ளே சென்றாள்.

குமுதத்தின் மனத்தில் ஒரு பெருஞ் சூன்யம் நிறைந்தது. எதையோ பறிகொடுத்து விட்டதைப் போன்ற ஏமாற்றம். வார்த்தைகளால் விவரிக்க முடியாத சுத்த வெறுமையுணர்ச்சி தோன்றி நெஞ்சை நிறைத்தது.

உள்ளே பேச்சுக் குரல் கேட்டது. ஆம், அவரே; காவேரியிலிருந்து வந்துவிட்டார். என்ன இருக்கிறது பேசுவதற்கு?

குழந்தைதான் பேசுகிறது! அன்னம், அன்னக் குஞ்சு. அவளை, 'அம்மா' என்று கூப்பிட வேண்டிய குழந்தை:

"அப்பா! எனக்கு அதே மாதிரி ஒரு லோலாக்கு வாங்கித் தரயா, அப்பா?"

"எதே மாதிரி, கண்ணு?"

"அந்த மாமி போட்டிண் டிருக்காளே, அந்த மாதிரி."

"எந்த மாமி?"

"கொல்லையிலே ஒரு மாமி வந்தா. அவ போட்டுண்டிருக்கா அப்பா. அம்மாளை வேணும்னுக் கேளு."

"ஏண்டி, யாரு போட்டிண்டிருக்களாம் லோலக்கு."

"குழந்தை என்னவோ உளர்றது!" இது தாய் சொன்னது. அவளுடைய குரலின் ஸ்திரமற்ற தன்மை சந்தேகத்தைக் கிளப்புவதாய் இருந்தது.

"யாரு உளர்றது? நீ அந்த மாமியோடே பேசிக் கொண்டு நிக்கலையா! இல்லேப்பா. இப்போகூட நான் பார்த்தேன். அந்த மாமி கொல்லையிலேதான் இருந்தா."

"யார் அது?"

அவள் எப்படிச் சொல்வாள்? "ஒண்ணுமில்லே" என்று என்னவோ ஆரம்பித்தாள். வாய் பேச முடியவில்லை. கண்கள் நீரைச் சொரிந்தன.

அவருக்கு விஷயம் விளங்கிவிட்டது.

"உன் பெண் இங்கே வந்தாளா?"

"ஆமாம்" என்று தலையசைத்தாள்.

"இந்த வீட்டில் அடியெடுத்து வைக்கக் கூடாது என்று நான் எத்தனை தடவை சொல்லியிருக்கிறேன்! உனக்கு அறிவு இல்லே? நீயும் போய்விடு வெளியில்!"

அவருடைய குரல் எட்டு வீட்டுக்குக் கேட்கும் போல் இருந்தது.

"மனசு உங்களுக்கு இரங்கவே இரங்காதா?" என்றுதான் கேட்டாள். உடனே கிளம்பிவிட்டார் அவர். தாவித் தாவிக் குதித்துக்கொண்டு கர்ஜிக்கத் தொடங்கிவிட்டார்.

"இரக்கமா! யாருக்கு இரக்கம்? மானம், மரியாதை எல்லாவற்றையும் விற்றுவிட்ட கழுதை! இன்னும்

எனக்கு என்ன பாக்கி இருக்கிறது? வெளியில் தலை காட்ட யோக்கியதை இல்லை. இனி ஏதாவது பேசினால் நீயும் வீட்டைவிட்டுப் போகும்படி வரும்.''

“ஆமாம், எனக்கு வேண்டியதுதான், இத்தனை வயசுக்குமேல்! என்னதான் இருந்தாலும் வயிற்றில் பிறந்த பெண் இல்லையா? உங்கள் மனசு கருங்கல்லா? இப்படிப் பிடிவாதம் உலகத்தில் உண்டா?''

“உண்டு. நாளைக்கு இந்தப் பெண்ணுக்குக் கல்யாணம் செய்ய வேணும். எந்த மானமுள்ளவன் வந்து தாலி கட்டுவான்?''

அதற்கு மேல் அவளால் வாதாட முடியவில்லை. “போனது போகட்டும். இனிமேல் செய்ததை மறைக்க முடியாது. வயிற்றில் பிறந்த குழந்தை வயிறு எரிய நின்றால் மனசு கேட்கவில்லை'' என்றாள்.

“உனக்கு முடியவில்லை என்றால் கூட்டிக் கொணர்ந்து வைத்துக்கொள். எந்த நிமிஷத்தில் அந்தச் சனியன் என் எதிரில் வருகிறதோ, இதோ நான் துண்டை உதறிப் போட்டுக்கொண்டு நடந்துவிடுவேன்.''

தன் புருஷனுடைய பிடிவாதம் அவளுக்கு நன்றாகத் தெரியும். இனி என்ன செய்வது? அழுது அழுது புரண்டாலும் அவரவர்களுடைய தலைவிதியை மாற்ற யாரால் முடியும்? அதன் தலையில் அப்படித்தான் எழுதியிருந்ததாக்கும்!

பேசாமல் கண்ணைத் துடைத்துக்கொண்டே உள்ளே போனாள். சற்று நேரத்தில் கையில் ஒரு தூக்குப் பாத்திரத்துடன் வெளியில் வந்து, பின் கட்டுக்குப் போனாள். அதில் கொஞ்சம் ரசஞ் சாதம், தயிர் சாதம் இருந்தது.

அங்கே வந்து பார்த்ததும் குமுதம் நின்றிருந்த இடம் காலியாக இருந்தத. அவள் வயிறு பகீரென்றது.

விளக்கை ஏற்றிப் பார்த்தாள். ஒரே இருட்டு. போய் விட்டாளா! ஒரு பிடி சோறுகூடச் சாப்பிடாமல் போய்விட்டாளே, பாவி!

விளக்கை அணைத்தாள். ஒரே அந்தகாரம்.

## 4

இரவு பத்து மணி இருக்கும். போட்மெயில் 'அவுட்டர்'ருக்கு வெளியில் வந்துவிட்டது. பிரணதார்த்தி தம் முழு உடுப்புகளையும் அணிந்துகொண்டு ஜன்னற் கதவைச் சாத்தப் போகும் சமயம்.

"மதராஸ் எழும்பூர், ஒரு டிக்கட்" என்ற பெண் குரல் கேட்டுத் திடுக்கிட்டார்.

நீல மோதிரம் அணிந்த ஒரு கை ஐந்து ரூபாய் நோட்டை நீட்டிற்று. வாங்கி, டிக்கட்டையும் சில்லறையையும் கொடுத்துவிட்டு ஜன்னல் வழியே முகத்தைப் பார்த்தார். அதே ஸ்திரீதான்; சாயங்காலம் பாஸஞ்சரில் இறங்கினவள்தான்.

உடனே பரபரவென்று வெளியில் வந்தார். மெயிலும் வந்து நின்றது. சட்டென்று திரும்பியவர், சுவரின் மேல் ஒட்டியிருந்த சினிமா விளம்பரத்தைப் பார்த்தார். ஆமாம், இப்போது தெரிந்துவிட்டது. அந்த ஸ்திரீ சினிமா நடிகை மிஸ் பானுமதிதான். அவளுடைய விளம்பரத்தைத் தாங்காத சுவரே இல்லையே! அவளை இன்னொரு முறை பார்க்கவேண்டும் என்று பிளாட்பாரத்தை நோக்கி விரைந்தார். ஆனால் அவள் எங்கேயோ ஒரு வண்டிக்குள் ஏறிக்கொண்டுவிட்டாள்.

அவர் ஏமாற்றத்துடன் திரும்புவதற்கும், கார்டு ஊதலை எடுத்து ஊதுவதற்கும் சரியாக இருந்தது.

# ஊர் வாய்

## 1

இந்த உலகத்தில் ஒருவன் எவ்வளவு யோக்கியனாக இருந்தாலும் அவனைப்பற்றி ஜனங்கள் கவனிக்கிறதே இல்லை. ஆனால் அவன் ஒரு சின்னத் தவறுதல் செய்துவிட்டால் அதைப் பிரமாதப்படுத்திவிடுகிறார்கள். அவன் அதற்கு முன்னால் எப்படி இருந்தான், இதர விஷயங்களில் அவனுடைய நடத்தை எப்படி இருக்கிறது என்பதையெல்லாம் அடியோடு மறந்துவிடுகிறார்கள். மிகவும் அற்பமான அவனுடைய பிசகு மட்டும் கண்ணில் படுகிறது. என்னுடைய அநுபவத்தில் நான் இதைக் கண்டுவிட்டேன். நானும் இது வரையில் எத்தனையோ ஊர் சுற்றியிருக்கிறேன். எவ்வளவோ உத்தியோகங்கள் பார்த்தாகிவிட்டது. பஸ் கண்டக்டராக இருந்திருக்கிறேன்; ஜவுளிக் கடையில் கணக்கு எழுதியிருக்கிறேன்; செட்டி வீட்டில் காரியம் பார்த்திருக்கிறேன்; காபி ஹோட்டலில் சரக்குப் போட்டிருக்கிறேன்; நானே இரண்டு ஹோட்டல் வைத்து நடத்தியிருக்கிறேன். கன்னியாகுமாரி முதல் ஹிமாசலம் வரையில் நான் போகாத ஊரே இல்லை. ஒரு சமயம் லக்ஷ்மணபுரி காங்கிரஸின்போது பண்டித ஜவாஹர்லால் நேருவே வந்து என் ஹோட்டலில் காபி சாப்பிட்டு விட்டு, 'பேஷ்' என்றார். நான் அங்கே மதராஸிகளுக்காக நம் பக்கத்து ஹோட்டல் வைத்திருந்தேன்.

இவ்வளவும் எதற்காகச் சொல்ல வந்தேன் என்றால், ராவ்சாகிப் ராஜாராமையரைப்பற்றிச் சொல்லத்தான். ஆகா! அவரைப்போல் மனுஷன் இனிமேல்

எங்கே கிடைப்பான்! மன்னன். அந்தப் போலீஸ் உடுப்பைப் போட்டுக்கொண்டு குதிரைமேல் வந்து நின்றானால், அப்படியே சிவாஜியே வந்து நிற்கிறமாதிரி அல்லவா இருக்கும்! லஞ்சம் என்கிற பேச்சு அவர் கிட்ட மூச்சுவிட முடியுமா? ஏழை பாழைகளிடத்திலே அவருக்கு எவ்வளவு பிரியம் தெரியுமோ! அதே மாதிரி ஜனங்களுக்கும் அவரிடத்திலே அசாத்திய விசுவாசம்.

அவர் தேவகோட்டை ஸர்க்கிளாய் இருந்தார். ஆனால் எனக்கு அவரை முன்பே தெரியும். நான் அப்போது தஞ்சாவூர் - தேவகோட்டை லயனில் வேலை செய்துகொண்டிருந்தேன், பஸ் கண்டக்டராக. அப்போது ராஜாராமையர் ஸப் இன்ஸ்பெக்டராக இருந்தார். என் வண்டியில் அஹமத் அஹமத் என்று ஒரு டிரைவர். பாவம்! ரொம்ப நல்லவன்தான். பெரிய சம்சாரி. ஆனால் அவனுக்கு ஒரே ஒரு கெட்ட குணம் உண்டு. கையில் அதிகப்படி துட்டுக் கிடைத்துவிட்டால் கள்ளைக் குடித்துவிடுவான். நானும் அடிக்கடி சொல்லிப் பார்த்துவிட்டேன், 'டே அஹமத், உன் தொழிலுக்கு இது ஆபத்து' என்று. அவன் கேட்கிறதில்லை.

என்ன இருந்தாலும் மனுஷன்தானே? ஒரு நாளைக்கு அப்படித்தான் கொஞ்சம் அதிகப்படி வரும்படி; தஞ்சாவூரிலே புஷ்பப்பல்லக்கு. வண்டியில் ஒரே 'ஓவர் லோடு'. கண்டரகோட்டையிலே அஹமத் மூக்கைப் பிடிக்கப் போட்டுவிட்டான். ஆனால் ஒன்று: எவ்வளவு போட்டாலும் அவனுக்கு நிதானம் தப்பாது. இருபத்தைந்து வருஷமாய் 'ஸ்டீரிங்கை'ப் பிடித்த கை இல்லையா? இருந்தாலும் அன்றைக்கு அவனைப் பிடித்த போதாத காலம், தஞ்சாவூர் மூன்று மைல் இருக்க ஒரு கிராமத்திலே சாவடி மேலே விட்டு விட்டான் வண்டியை. முன்னால் ஒரு வைக்கோல் வண்டி போய்க்கொண்டிருந்தது. 'ஹாரன்' கொடுத்துக் கொடுத்துப் பார்த்தான். வண்டிக்காரன் அசையவில்லை.

விடியற் காலை நாலு மணி; தூக்கக் கலக்கம். கோபத்தோடு அஹமத் இடது பக்கம் வண்டியை ஒடித்தான். அதே சமயத்தில் பின்புறமிருந்து ஒரு 'பிளஷர்' பூம் பூம் என்று கூள அவசரமாகப் பறந்து வந்தது. அஹமத் தைரியசாலி. அப்படியே பிரேக்கை அழுத்தினான். ஆனால் துளி தவறிவிட்டது. அப்படியே வண்டி இடது பக்கம் இருந்த சாவடியின் மேல் மோதிவிட்டது. வண்டிக்கு ஆபத்தில்லை. ஆனால் சாவடியின் முன் கூரையைத் தாங்கியிருந்த மூங்கிற் கால்கள் சாய்ந்து விட்டன. அதற்குள் வண்டியை நிறுத்திவிட்டான் அஹமத். ஆனால் பின்னால் வந்த வண்டியும் அதே சமயம் வலது பக்கம் போய் நின்றது. அதிலிருந்து இறங்கி வந்தார், சப் இன்ஸ்பெக்டர் ராஜாராமையர்! எனக்குப் பகீரென்றது. அஹமத் அவர் காலில் விழுந்து கெஞ்சினான். ஆனால் அவர் ஒன்றும் பேசவில்லை. வண்டியின் நம்பரைக் குறித்துக்கொண்டார். லைசென்ஸை வாங்கி வைத்துக்கொண்டு, ஒரு தடவை முறைத்து அஹமத்தைப் பார்த்துவிட்டுக் காரில் ஏறிப் போய்விட்டார். நான் ஒன்றும் செய்யத் தோன்றாமல் திகைத்தேன்.

தஞ்சாவூர் வரும் வரையில் எனக்கு இதே ஞாபகந்தான். 'அஹமத், பாவம், ஏழை! ஏழு குழந்தைகள். அவன் பிழைப்புப் போய்விட்டால் என்ன செய்வான்! குடிப்பழக்கம் பிசகுதான். ஆனால் மனிதன் என்ன மரக்கட்டையா? ஏதோ ஒரு சமயம் கொஞ்சம் குஷியாய் இருந்தால் என்ன தப்பு?'

தஞ்சாவூர் போனதும் என்ன செய்தேன்: ஒரு கூடை நிறையச் சேலம் மாம்பழம் வாங்கிக்கொண்டு நேராக ராஜாராமையர் வீட்டுக்குப் போனேன். மடியில் ஒரு பத்து ரூபாய் நோட்டையும் மடித்து வைத்துக் கொண்டேன், ராஜாராமையரைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. கொஞ்சம் அப்படி இப்படிப் பேசினால் சடாரென்று நோட்டை நீட்டுவோம் என்று

உத்தேசர். வெள்ளையப்பனுக்கு மரியாதை ஆளும் உண்டா?

"நான் போனபோது, அப்போதுதான் அவர் காபி சாப்பிட்டுச் சமாசாரப் பத்திரிகை படித்துக் கொண்டிருந்தார். நான் போய்க் கூடையை அவர் முன் வைத்து இடுப்பில் துண்டைச் சுற்றிக்கொண்டு சாஷ்டாங்கமாய் நமஸ்காரம் செய்தேன். அவர் என்னையும் கூடையையும் ஏற இறங்க ஒரு தடவை பார்த்தார்.

"இதென்ன, ஐயா?" என்றார். நான் கையைப் பிசைந்துகொண்டு பல்லைக் காட்டினேன். "ஒன்றும் இல்லை. நேற்று, அந்த டிரைவர், பெரிய சம்சாரி. ஏழை. பாவம்! அண்ணா பெரிய மனசு பண்ணணும்."

"கூடையில் என்ன?" என்றார் கோபத்தோடு.

"ஒண்ணும் இல்லை. சேலம் மாம்பழம்."

"முதலில் அதைத் தெருவில் கொண்டு போய் வைத்துவிட்டு வாரும்!" என்றார் அதிகாரத்துடன். நான் தயங்கினேன். அவருடைய கோபம் அதிகரித்து விட்டது.

"போமையா! எடுத்துக்கொண்டு போம்! அவனை வந்து ஸ்டேஷனில் என்னைப் பார்க்கச் சொல்லும். ஊம்!"

"நான் பயந்துவிட்டேன். நானும் எத்தனையோ பேரைப் பார்த்திருக்கிறேன். இந்தக் கெடுபிடியைப் போல் எங்கும் கண்டதில்லை. ஆனால் நான் விடவில்லை. அடுத்த அஸ்திரத்தைப் பிரயோகித்துப் பார்க்கலாம் என்று மடியில் தடவி நோட்டை எடுத்தேன். அதைப் பார்த்ததும் அவருக்கு ரௌத்திராகாரமான கோபம் கிளம்பிவிட்டது.

"ஓய்! நான் சொல்றது தெரியலை? வெளியில் போகப் போகிறீரா, இல்லையா? என்று கூவிக்

கொண்டே எழுந்துவிட்டார். நான் பார்த்தேன்; இதற்குமேல் நம் ஜபம் சாயாது என்று தீர்மானித்துக் கூடையைத் தூக்கிக்கொண்டு போய் வெளி நடையில் வைத்துவிட்டு மறுபடியும் வந்தேன்.

என்னைக் கண்டதும், "ஏனையா திரும்பியும் வந்தீர்?" என்றார். நான் அப்படியே விழுந்து அவர் காலைப் பிடித்துக்கொண்டு, "நீங்கள் என்னை என்ன வேண்டுமானாலும் செய்யுங்கள். பாவம், அவனைக் காப்பாற்றி ஆகவேண்டும்" என்றேன். வாஸ்தவத்திலேயே அவனுடைய கஷ்டம் என்னுடைய கஷ்டமாகவேதான் தோன்றிற்று. 'அவனுக்கு ஏழு குழந்தைகள் இந்த வேலை போச்சானால் அவன் குடும்பம் வீணாகப் போய் விடும். ஒரு குடும்பத்துக்கு விளக்கு ஏற்றிவைத்த புண்ணியம் உங்களைச் சேரும்" என்று இன்னும் ஏதேதோ சொன்னேன்.

அவர் ஏதோ யோசித்தார். "ஆமாம், நேற்றுக் கொஞ்சம் தப்பியிருந்தால் அத்தனை பாஸஞ்சர்கள் கதியும் என்ன ஆகியிருக்கும்! ஸ்டீரிங்கைப் பிடித்து ஓட்டுகிறவன் குடிக்கலாமா, ஐயா? எழுந்திரும்" என்றார் மெதுவாக.

"குடிக்கிறது முட்டாள் தனந்தான்; மடையன். நானும் எத்தனையோ தடவை சொல்லிப் பார்த்து விட்டேன் எஜமான் கூப்பிட்டு அவனைச் செருப்பால் அடியுங்கள். அவன் குடியைக் கெடுக்கிறதில் என்ன பிரயோசனம்!" என்றேன் நான். இனிமேல் என் பக்கம் ஜயம் என்று எனக்கு நிச்சயமாகிவிட்டது.

"சரி சரி. அவனை வந்து லைசென்ஸை வாங்கிக் கொண்டு போகச் சொல்லும். ஆமாம்; உமக்கு என்ன இதிலே இவ்வளவு அக்கறை?" என்று கேட்டார்.

"எனக்கு அவன் ரொம்ப நாளைப் பழக்கம். அவனும் ரொம்ப நல்லவன். சிநேகத்துக்குத் தங்கமானவன்" என்றேன்.

"அதற்காகத்தான் ஒரு கூடை மாம்பழத்தை வாங்கிக்கொண்டு வந்தீரோ? எனக்கு மாம்பழம் பிரியம் என்று யார் சொன்னது?"

அவர் கேட்டதன் அர்த்தத்தை நான் தெரிந்து கொண்டேன். "என்ன அண்ணு செய்வது? இந்தக் காலத்தில் இப்படியெல்லாந்தான் செய்ய வேண்டி யிருக்கிறது. நியாய அநியாயத்தை யார் பார்க்கிருர்கள்? உங்களைப் போல் தர்மவான்கள் ஆயிரத்தில் ஒருத் தரைத்தான் பார்க்க முடிகிறது" என்றேன்.

அவர் உடனே, "சரி, சரி, ஸ்தோத்திரம் வேண் டாம். இந்தமாதிரி வேலை இனிமேல் செய்யாதேயும், போம்" என்று என்னை அனுப்பிவிட்டார்.

இந்த உலகத்தில் இப்படிப்பட்ட தர்மவான்கள் எத்தனை பேர் இருக்கிருர்கள்? இப்பேர்ப்பட்டவர் களைத்தான், ஒரு சிறு தவறுதலுக்காக, உலகம் படாத பாடு படுத்துகிறது.

ஏதோ ஒரு நாளைக்கு மனுஷன் பிசகிவிட்டால் அதைப் பெருந்தன்மையோடு மன்னித்துவிடுகிறதில்லை. அதற்காக அவர்மேல் இல்லாத அபாண்டத்தை எல்லாம் சுமத்தி ஜாதிப் பிரஷ்டம் செய்து விடுவதா? அவருடைய சஷ்டியப்த பூர்த்தியின்போது நானும் போயிருந்தேன். ஒரு பிராம்மணன் கூட வரவில்லை. அவருடைய பந்துக்கள் கூட ஒருவரும் வரவில்லை. அவர் நாடகக்காரியோடு போனுராம்! நான் கேட் கிறேன்: அத்தனை பேர் அவரைத் தூஷித்தார்களே, அவர்களில் எத்தனை பேர் மனசால்கூடப் பிற மாதரை நினைக்காதவர்கள்?

அதுவும், அவர் மனைவி உயிருடன் இருந்த காலத்தில் அவரைப்போல் நேர்மையானவரை நான் கண்டதில்லை. அரிச்சந்திரன் என்ருல் அவருக்குத் தான் தகும். அவரோடு நெருங்கிப் பழகும் பாக்கியம்

எனக்குக் கிடைத்தது. சுப்பண்ணு, சுப்பண்ணு என்று என்னிடத்தில் அவருக்கு அத்யந்தப் பிரியம். அவர் வீட்டில் ஒரு சின்ன விசேஷம் நடந்தால்கூட என்னைக் கூப்பிடாமல் இருக்க மாட்டார்.

## 2

தஞ்சாவூரில் அவர் எனக்குப் பழக்கமானதன் பின், நாலைந்து வருஷம் கழித்து, நான் திருச்சிராப் பள்ளியில் மளிகை ஸ்டோர் வைத்திருந்தேன். ராஜாராமையர் அப்போது டிப்டியாகத் திருச்சிக்கு வந்தார். அவர் வரப்போகிறார் என்று நான் ஏற்கனவே கேள்விப்பட்டிருந்தேன். அதனால் அவர் வந்தவுடனே கன்டோன்மென்டில் போய் அவரைப் பார்த்தேன். தேசிகாசாரியார் பங்களாவுக்குப் பக்கத்தில் ஒரு சிறிய பங்களாவில் அவர் ஜாகை இருந்தார். நான் இரண்டு கூடை நிறைய ஆப்பிளும் ஆரஞ்சும் வாங்கிக்கொண்டு போனேன். இப்போதெல்லாம் கூடையைக் கண்டால் விரட்டுவதில்லை. அந்தரங்கத்தில் பிரியத்தோடு செய்கிறபோது யார்தான் குற்றம் சொல்ல முடியும்?

என்னைக் கண்டதும், “என்ன, சுப்பண்ணு, நான் வரப்போகிறேன் என்று உனக்கு எந்தக் குருவி வந்து சொல்லிற்று?” என்று சிரித்துக்கொண்டே கேட்டார். அன்று காலையில்தான் அவர் ரெயிலில் வந்து இறங்கியிருந்தார். கூடத்தில் பெட்டி படுக்கைகள் எல்லாம் அப்படி அப்படியே கிடந்தன.

“என்ன அண்ணு, நீங்கள் எப்போது வரப்போகிறீர்கள் என்று காத்துக்கொண்டிருந்தேன். உங்களுக்கு டிப்டி ஆகிவிட்டது என்று கேட்டதுமே, ரொம்ப சந்தோஷமாக இருந்தது” என்றேன் நான்.

அவர் உடனே உள் பக்கம் திரும்பி, "அடியே லக்ஷ்மி, இங்கே வந்து பார், யார் வந்திருக்கிறதென்று" என்று தம் சம்சாரத்தைக் கூப்பிட்டார்

உள்ளே சமையலறையில் சாமான்களை அடுக்கி வைத்துக்கொண்டிருந்த அவருடைய சம்சாரம் வெளியில் வந்தாள்; லக்ஷ்மி என்றால் அந்த அம்மாளுக்குத்தான் தகும். நல்ல அழகு; அதற்கேற்ற தங்கமான குணம். இந்தக் கலிகாலத்தில் அந்த அம்மாளைப்போல் உத்தமியை நான் பார்த்ததில்லை. என்னிடத்தில் ராஜாராமையரைப் போலவே அந்த அம்மாளுக்கும் அத்தியந்தப் பிரியம். அந்த அம்மாள் கையில் நான் சாப்பிட்டிருக்கும் சாப்பாட்டுக்குக் கணக்கே இல்லை. அந்தத் தம்பதிகளுக்குள்ளே எத்தனை ஒற்றுமை தெரியுமோ? ஒரு நிமிஷங்கூட இணை பிரிய மாட்டார்கள். அவர்களைப் பார்க்கிற போதெல்லாம் எனக்கு என்னை அறியாமலே உற்சாகமாய் இருக்கும். சாக்ஷாத் ஸ்ரீராமசந்திர மூர்த்தியும் ஸீதா பிராட்டியும் இருக்கிறாப் போலேயே என் கண்ணுக்குத் தோன்றும். பாவி, என்னுடைய கண்தான் பட்டுவிட்டதோ என்னவோ, இப்படிப்பட்ட கஷ்டம் உண்டாக! அதைப்பற்றி நினைத்தாலே இன்னும் எனக்கு மனசு ஆறவில்லை! இரண்டு பேரும் பரஸ்பரம் எத்தனை அந்நியோந்நியம் என்று உங்களுக்குத் தெரியாது. இவ்வளவு பெரிய உத்தியோகத்தில் இருக்கிறாரே, அவர் வீட்டில் ஒரு பரிசாரகன் கிடையாது. அந்த அம்மாளுக்குத் தன் கையாலேயே புருஷனுக்குச் சமையல் பண்ணிப் போட்டால்தான் திருப்தி. எங்கே சர்க்கூட் போனாலும் இருவரும் ஜோடியாகத்தான் போவார்கள். நான் கூட அடிக்கடி சொல்லிப் பார்த்து விட்டேன். "என்ன மன்னி, நீங்கள் ஏன் இப்படிக் கஷ்டப்பட வேண்டும்? உடம்பு கெட்டுப்போய் விடாதா? நான் கொண்டு வருகிறேன் முதல் நம்பர் சமையல்காரனை" என்று.

"அப்போ என் சமையல் நன்னுயில்லேன்னு சொல்றுப்லே இருக்கு" என்ற சிரித்துவிட்டாள்.

அன்றைத்தினம், அவர்களைத் திருச்சியில் போய்ப் பார்க்கப் போனேனே, அன்றைக்கு எனக்கும் அவர்கள் வீட்டில்தான் சாப்பாடு. என்னுடைய பிடிவாதத்தின் பேரில் ஹோட்டலில் போய் இரண்டு எடுப்புச் சாப்பாடு எடுத்து வந்தேன்.

அவர்கள் திருச்சியில் இருக்கும் வரையில் நான் தான் மளிகைச் சாமான் 'சப்ளை' செய்துவந்தேன். முதலில் அவரிடம் பணம் வாங்கிக்கொள்ள மாட்டேன் என்று சொல்லிப் பார்த்தேன். ஆனால் ராஜாராமையரிடமா அதெல்லாம் நடக்கும்? என்னிடத்தில் சரியென்று சொல்லிவிட்டு எனக்குத் தெரியாமல் பாங்கியில் என் பேரில் கணக்கு வைத்துப் பணத்தை அதில் போட்டு விட்டார்!

இவ்வளவு ஒற்றுமையான தம்பதிகளுக்கு ஒரு குழந்தை இல்லையே என்று எனக்கு ரொம்ப மன வருத்தம். அவருக்கும் அந்தக் குறை மனசிற்குள்ளாகவே இருந்திருக்கும் என்று தான் நினைக்கிறேன். நான் இரண்டொரு தடவை, "சேது ஸ்நானம் செய்தால் என்ன, அண்ணு?" என்று சொல்லிப் பார்த்தேன்.

"என்ன சுப்பண்ணு, எல்லாம் ஈசுவர கிருபை இருந்தால் தானுகவே உண்டாகும். சேதுவுக்குப் போனதனுல் என்ன பலன்?" என்று பதில் சொல்லி விட்டார்.

அவருக்குத் தெய்வத்தினிடம் அபார நம்பிக்கை. திருச்சிராப்பள்ளியிலே இருக்கிற வரையிலும் ஒரு வெள்ளிக்கிழமை தவறமாட்டார். மலைவாசற்படிப் பிள்ளையாருக்குச் சந்தனக் காப்பு; தம்பதி சமேதராய் அவர்கள் தரிசனத்துக்கு வருகிற காட்சி ஒன்றே போதுமே. பக்தி சிரத்தையாய் ஸ்நானம் செய்துவிட்டு

அரையில் பட்டு வஸ்திரமும், நெற்றியில் ஸ்பஷ்டமான விபூதியும்; அதே மாதிரி அந்த அம்மாளும்: நெற்றியில் நெருப்புப்போல் குங்குமம் பிரகாசிக்க, அந்தக் களைக்கு ஈடு வேறு ஒன்றுமே இல்லை. பார்வதி பரமேச்வரர் மாதிரி! அவர்களைப் பார்ப்பதிலே எனக்கு அலாதி ஆனந்தம்.

அப்பேர்ப்பட்டவர்களுக்கு இந்தத் தெய்வம் கிருபை செய்யவில்லையே! குழந்தை இல்லாவிட்டாலும் அவர்கள் சௌக்கியமாய் இருக்கக்கூடாதா? கடவுளுக்கு அவர்கள் சந்தோஷத்தைக் காணச் சகிக்கவில்லையே! ஆகா! இப்போது நினைத்தாலும் எனக்கு வயிறு பகீ ரென்கிறது! மனிதர்கள் அநியாயம் செய்தால் தண்டிக்க நீதி ஸ்தலம் இருக்கிறது. கடவுளே அக்கிரமம் செய்தால் இதை எங்கே போய் முறையிடுகிறது?

ஒன்றும் இல்லை. தினம் இரவு சாப்பாடு ஆனதும் ராஜாராமையர் இப்படி நடந்துகொண்டே என் கடை வரையில் வருவது வழக்கம். என் கடை தென்னூரில் இருந்தது என்று சொன்னேனே? - ஆமாம், அவர் வருகிற சமயம் நான் கணக்கை முடித்துக் கடையை அடைக்கிறதும் சரியாயிருக்கும். பிறகு இருவரும் பேசிக் கொண்டே பங்களாவுக்குத் திரும்புவோம். அங்கே வெகு நேரம் வரையில் பேசிக்கொண் டிருந்து விட்டுத் தான் நான் வீடு திரும்புவேன். இது எப்போதும் வழக்கம்.

அன்றைக்கு ஏதோ விசேஷம்—ஆமாம், மறுநாள் சங்கராந்தி. அதனால் கடையில் அதிகப்படியான வியாபாரம். ராத்திரிப் பத்தரை மணி இருக்கும். நான் கணக்கைப் போட்டு மண்டையை உடைத்துக்கொண் டிருந்தேன். ஒன்றரை ரூபாய் வித்தியாசம் வந்தது. அப்போது தான் ராஜாராமையர் வந்தார். தூரத்தில் வரும்போதே அவருடைய செருப்புச் சத்தம் எனக்குத் தெரியும். அதனால் கணக்கை மறுநாள் பார்த்துக்கொள்ளுவோம்

என்று கதவைப் பூட்டிக் கடையை அடைக்கச் சொன்னேன். நான் சாவியை வாங்கிக்கொண்டு ரோட்டில் இறங்கவும் ராஜாராமையர் வரவும் சரியாயிருந்தது.

என்னைக் கண்டதும் அவர், "சுப்பண்ணு, இன்றைக்கு ஒரு விசேஷம்; வா, போகலாம்" என்றார். அவர் முகம் மலர்ந்திருந்தது.

மறுநாள் பண்டிகை அல்லவா? அதனால் என்னைச் சாப்பிடச் சொல்லப்போகிறார் என்று நினைத்துக் கொண்டு, "எனக்குத் தெரியும்" என்றேன்.

"நீ நினைக்கிறது அல்ல. அது ஒரு ரகஸ்யம். வீட்டுக்கு வா, தெரியும்" என்று சொல்லிவிட்டுச் சற்று நேரத்தில் அந்த ரகஸ்யத்தையும் சொல்லிவிட்டார். அதுதான் அவரிடத்தில் ஒரு விசேஷம். அவருடைய சம்சாரம் புதியதாக ஒரு பலகாரம் செய்தாளாம். பத்திரிகைகளில் போட்டு வருகிறதல்லவா, அதைப் பார்த்துச் செய்தாளாம்!

அதைப்பற்றி வேடிக்கையாகப் பேசிக்கொண்டே நாங்கள் பங்களாவை அடைந்தோம். எனக்கு முன்னால் போய் ராஜாராமையர் கதவை இடித்தார். ஆனால் கதவு திறக்கப்படவில்லை. "லக்ஷ்மி, லக்ஷ்மி!" என்று இரண்டு குரல் கூப்பிட்டார். அப்பொழுதும் திறக்கவில்லை. எனக்கு என்னவோபோல் இருந்தது. மேலே ஜன்னல் வழியாக விளக்கு வெளிச்சம் தெரிந்தது, "ஆச்சரியமாய் இருக்கிறதே!" என்று சொல்லிக்கொண்டே ராஜாராமையர் இன்னும் பலமாக இடித்தார்.

என்னை அறியாமல் ஒரு பயம் ஏற்பட்டது. "இருங்கள் அண்ணு" என்று சொல்லிவிட்டு என்ன செய்தேன்: பின்புறத்துக் கைப்பிடிச் சுவர் வழியாய் ஏறி உள்ளே முற்றத்தில் குதித்தேன். பின் கட்டுக் கதவு திறந்திருந்தது. உள்ளே ஓடினேன். வழியில் சமையற் கட்டிற்குள் எட்டிப் பார்த்தேன். விளக்கு

எரிந்துகொண்டிருந்தது. இலை போட்டுச் சாப்பிடத் தயாராய் வைத்திருந்தது. லக்ஷ்மி அம்மாளைக் காண வில்லை. மனசோ பதைக்கிறது. கூடத்திற்கு ஓடினேன். அங்கேயும் விளக்கு எரிந்தபடி இருந்தது. சுற்றிப் பார்த்தேன். மூலையில் ஒரு கட்டிலின் மேல் லக்ஷ்மி அம்மாள் படுத்துக்கிடந்தாள். கிட்டத்தில் போய்ப் பார்த்தேன். தூங்குகிற மாதிரி இருந்தது.

ஆனால் மனசைப் போட்டுப் பிய்த்தது. ஓடிப் போய்த் தெருக் கதவைத் திறந்தேன். ராஜாராமையர், "என்ன!" என்று ஆவலோடு கேட்டுக்கொண்டே ஓடி வந்தார். வந்து, "லக்ஷ்மி, லக்ஷ்மி!" என்று கூப்பிட்டார். பதில் இல்லை. உடம்பைப் புரட்டினார். கை கால்கள் போட்டது போட்டபடி கிடந்தன. சுவாசம் இல்லை. அவ்வளவுதான்! "ஐயோ லக்ஷ்மி!" என்று ஒரே அலற லாக அலறத் தொடங்கிவிட்டார். எனக்கு உடம்பெல் லாம் பதறுகிறது. என்ன செய்வதென்று தோன்ற வில்லை. எப்படியோ வெளியில் ஓடினேன். பக்கத்துப் பங்களாவில் சிவராமன் என்று ஒரு டாக்டர். அவரைப் போய்ப் படுக்கையிலிருந்து எழுப்பி அழைத்துக் கொண்டு ஓடிவந்தேன். வந்து என்ன பிரயோஜனம்? மாரடைப்பினால் பிராணன் போய்விட்டது என்று அவர் சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

என்ன காரணமாயிருந்தால் என்ன? அழகான ஒரு குடித்தனம் பாழாய்ப் போய்விட்டது! அவருடைய வாழ்வு அஸ்தமித்துவிட்டது!

ஆஹா! துக்கம் என்றாலும் அந்த மாதிரி துக்கம் நான் எங்கும் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை. அலறு கிறார்; புரளுகிறார்; தலையில் தலையில் அடித்துக்கொள் ளுகிறார். "ஐயோ லக்ஷ்மி! உன்னை இனிமேல் எப்போது பார்ப்பேன்! பாழும் தெய்வமே! உனக்குக் கண் அவிந்து விட்டதா!" என்று பிணத்தைக் கட்டிக்கொண்டு கதறு கிறார்.

அன்று அவரைச் சமாதானப் படுத்திக் காரியத்தை முடிப்பது பெரும் பாடாய் விட்டது.

வாஸ்தவத்தில் கடவுள் என்று ஒன்று உண்டா? இருந்தால் இத்தனை அக்கிரமம் நடக்குமா? அவருடைய வாழ்வே பாழாய்ப் போனதில் யாருக்கு என்ன லாபம்? எனக்கு மனசு வெலவெலத்துப் போய்விட்டது.

ராஜாராமையருக்கு அத்துடன் புத்தியே பிசகி விடுமோ என்று பயந்தேன். ஆறு மாதம் வரையில் அவர் கூடவே இருந்தேன். என் வியாபாரத்தையெல்லாம் மூட்டைகட்டி வைத்துவிட்டேன். இருவருமாக ஊர் ஊராய்ச் சுற்றினோம். அவர் ஆறுமாதம் லீவு வாங்கிக் கொண்டார். எங்கே போனால் என்ன? மனசிலுள்ள நினைவை மறக்க முடியுமா? சரீரத்தில் காயம் பட்டா லுமே சாகும் வரையில் வடு மாறுவதில்லை. மனசில் ஏற்பட்ட வடு எத்தனை ஜன்மம் எடுத்தாலுந்தான் மறை யுமா? அவர் பார்வைக்குச் சாந்தமாய்த்தான் இருந் தார். ஆனால் அவர் நெஞ்சிற்குள்ளே குமுறும் எரிமலை யாருக்குத் தெரியும்?

அவருடைய மனசைத் திருப்பத்தான் நான் இந்தச் சுற்றுப் பிரயாணத்தை ஏற்பாடு செய்தேன். ஆனால் அதனால் பலன் ஒன்றும் இல்லை. "என்ன சுப்பண்ணு, எனக்கு இனிமேல் என்ன இருக்கிறது? நான் இருந்தா லும் ஒன்றுதான்! இறந்தாலும் ஒன்றுதான்" என்று ஒவ்வொரு சமயம் சொல்லுவார். அப்போது அவரு டைய முகத்தைப் பார்க்க முடியாது; அந்தப் பரிதா பத்தை வாயால் சொல்ல முடியாது.

## 3

லீவு முடிந்ததும் ராஜாராமையர் கடப்பை ஜில்லா வுக்கு மாற்றலாகிப் போய்விட்டார். உடனே அவ ருக்கு ஜில்லா சூப்ரன்டு பதவியும் ஆகிவிட்டது. ஆனால் நாலைந்து வருஷங்கள் அவரை நான் பார்க்கவில்லை.

எனக்கும் குடும்பத்தில் பல கஷ்டங்கள். வியாபாரம் முறிந்து ஊர் ஊராய்ச் சுற்றினேன். கடைசியில் திருச்சி ராபபள்ளியிலேயே ஜங்ஷனுக்கு எதிர்த்தாற்போல் ஒரு ஹோட்டல் வைத்தேன். சாப்பாடு, தங்கும் வசதி எல்லாம் உள்ள ஹோட்டல். ஏதோ சுமாராய் வியாபாரம் நடந்துகொண் டிருந்தது.

அப்போதுதான் ராஜாராமையர் மறுபடியும் திருச்சிக்கே மாற்றப்பட்டு வந்தார். அவரைப் பார்த்தவுடனே முதலில் நான் திகைத்துப் போய்விட்டேன். முன்பிருந்த ராஜாராமையருக்கும் இப்போது நான் பார்க்கும் இவருக்கும் ஏணி வைத்தால்கூட எட்டாது. பார்வைக்கு ரொம்பக் குஷியாக இருந்தார். சொந்தத்தில் ஒரு மோட்டார் வேறு வாங்கியிருந்தார்! 'பியூக்' வண்டி. அவருடைய நடவடிக்கைகளே மாறிப் போயிருந்தன. குடிப்பழக்கங்கூட இருக்கும் என்று அவருடைய கண்களைப் பார்த்தால் தோன்றிற்று. முதல் முதலாகத் திருச்சியில் அவரை நான் பார்த்ததே ஒரு நாடகக் கொட்டகையில்!

அப்துல் ஜாபர் என்று ஒரு வியாபாரி. மணிக்கூண்டில் அவனுக்குப் பெரிய கடை. வெங்காய வியாபாரம். எனக்கு அவன் வெகு நாளைய சிநேகிதம். நானும் அவனுமாகச் சேர்ந்து அப்போது மேலப் புலிவார்டு ரோடு டிராமாக் கொட்டகையைக் கன்டிராக்ட் எடுத்திருந்தோம். 'ரமாமணி செட்' என்று வெகு பிரபலமாய் இருந்ததே; கேள்விப்பட் டிருக்கலாம். அந்த செட்டைக் கொண்டுவந்து நாடகம் நடத்துகிறோம். 'ரமாமணிபாய் அப்போது வயசாகிக் கிழவியாய் விட்டாள். ஆனால் அவளுடைய வளர்ப்புப் பெண் ஒரு குட்டி, சுந்தரிபாய் என்று பெயர். ஆகா! அழகென்றால் அழகு. அந்த மாதிரி இந்தப் புவியில் கிடையாது. கடைந்தெடுத்த ஸ்வர்ண விக்ரகம் மாதிரி இருப்பாள். ரமாமணிக்கு அவளுடைய காலத்தில்

எவ்வளவு பெயரோ அதைவிட நூறு மடங்கு பிரபலம் இந்தப் பெண். சாரீரம் கணீரென்று ஒரு மைலுக்குக் கேட்கும். ராத்திரி ஒன்பது மணிக்கு ஆட்டம் என்றால் பகல் மூன்று மணிக்கே கொட்டகை நிரம்பிவிடும். அது வும் மயான காண்டம் என்றால் ஒரு மணிக்கு மேல் டிக்கட் கிடைக்காது.

அப்படித்தான் ஒரு நாள் மயான காண்டம் ஆட்டம் நடக்கும்போது திடீரென்று கலெக்டர் வீட்டு ஜனங்கள் நாலு பேர் வந்துவிட்டார்கள். அப்போது 'ரிஸர்வ் ஸீட்டு'களைப் பார்த்துக்கொண்டே வரும் போது ஒன்றில் ராஜாராமையர் உட்கார்ந்துகொண்டிருந் தார். அவரைக் கண்டதும் நான் பிரமித்துவிட்டேன். "என்ன அண்ணா! எப்போது வந்தியள்?" என்றேன். அவர் சிரித்துக்கொண்டே, "நான் இங்கே மாற்றலாகி ஒரு மாதம் ஆகிறதே. உன்னுடைய கவனம் அவ்வளவு தான்!" என்றார்.

அதற்குப் பிறகு அவர் அடிக்கடி என் ஹோட்ட லுக்கு வருவார்; என்னையும் அவருடைய காரில் அழைத்துக்கொண்டு போவார். அப்போதுதான் அவ ருடைய நடவடிக்கைகளில் மாறுதல் ஏற்பட்டிருந்ததைக் கவனித்தேன். ஆனால் அவரிடம் ஒன்றும் அதைப் பற்றிப் பேசவில்லை. நாடகத்திற்கு ஒரு நாள் தவறாமல் வருவார். ஆட்டம் முடிந்ததும் அவருடைய காரில்தான் இருவரும் வீடு திரும்புவோம். ஒரு நாள் இரவு என் னையும் கூட்டிக்கொண்டு ஸ்பென்ஸர் ஹோட்டலுக்குள் நுழைந்துவிட்டார்! எனக்கு அது புதிது என்று நான் சொல்லவில்லை. ஏதோ ஒரு சமயம் சரியான ஜமா சேர்ந்தால் நானும் போகிறதுதான். ஆனால் ராஜாராமை யர் கூடப் போகிறதென்றால்!

நான் பேசாமல் போனேன். தலையைக் குனிந்து கொண்டே யோசனையில் ஆழ்ந்து உட்கார்ந்துகொண் டிருந்தேன்.

"என்ன சுப்பண்ணு, சும்மா சாப்பிடு" என்று என்னிடம் அவராகவே ஒரு கிளாஸை நீட்டினார். நான், "ஒன்றும் இல்லை" என்று பல்லை இளித்துக்கொண்டு வாங்கிக் குடித்தேன். பிறகு கொஞ்ச நாளில் அதுவும் சகஜமாய்ப் போய்விட்டது.

இன்னொன்று சொல்ல மறந்துவிட்டேன். இந்தச் சுந்தரிபாய் என்ற பெண்ணை என் ஹோட்டலிலேயே தான் இறக்கியிருக்கிறேன். ஏதோ சபலம், மனுஷ சுபா வந்தானே! அந்தக் குட்டி ஒன்றும் பிடி கொடுக்காமலேயே இருந்தது. எல்லாம் ஜாதிக் குணந்தானே? இந்தச் சமயத்தில்தான் நான் சொல்லப் போகும் சம்பவம் நடந்தது.

ஒரு நாள் ராத்திரி, ஒரு மணி இரண்டு மணி இருக்கும். தினம் ராத்திரி நான் ஒரு தடவை வெளிக் கதவைத் திறந்து வெளியில் வந்து பார்த்துவிட்டுப் படுத்துக்கொள்வது வழக்கம். அன்றும் அதே மாதிரி வந்தபோது கதவு திறந்திருந்ததைக் கண்டேன். தினசரி காவற்காரன் பூட்டிவிட்டு உள் பக்கத்திலேயே படுத்துக் கொண்டிருப்பான். அன்றைக்கு அவனையும் காண வில்லை. எனக்கு ஆச்சரியம் ஒரு பக்கம்; பயம் ஒரு பக்கம். உடனே என் கையில் உள்ள சாவியால் கதவைப் பூட்டினேன். மெதுவாகக் கையில் டார்ச் விளக்கை வைத்துக்கொண்டு ஒவ்வோர் அறைப் பக்கமாகச் சுற்றிப் பார்த்துக்கொண்டே மாடிக்கு ஏறினேன். மாடியில்தான் சுந்தரிபாய் அறை. அவளுடன் கூட வேறு யாரும் அந்த அறைக்குள் படுப்பதில்லை. அவளுடைய மாமன் ஒருவன் வெளி வராந்தாவில் படுத்துக்கொண் டிருப்பான். அப்படி இருக்க அவளுடைய அறையில் பேச்சுக் குரல் ஏது? நான் விளக்கை ஏற்றினேன். மாமன் வெளியில்தான் படுத்திருந்தான். உடனே விளக்கை அணைத்து விட்டுச் சுவர் ஓரமாகப் பதுங்கிக்கொண் டிருந்தேன். எனக்கு ஆத்திரம் ஒரு

பக்கம் வந்தது. அப்போது ஓர் ஆள் தலையில் துணியுடன் டக்கென்று சுந்தரிபாய் அறையிலிருந்து வெளியே வந்து என்னைக் கடந்து சென்றான். நானும் ஒரே பாய்ச்சலில் தாவி, மாடிப்படியண்டை போய் வழியை மறித்து, "யாரது! நில்" என்றேன். அந்த ஆள் மௌனமாக நின்றான். உடனே டார்ச்சை ஏற்றி முகத்துக்கு நேராகப் பிடித்தேன். 'ராஜாராமையர்!' ஐயோ! அவர் முகத்தில் தோன்றிய பரிதாபத்தை இன்னும் என்னால் மறக்க முடியவில்லை-

"சுப்பண்ணு! என்னுடைய கஷ்டம் உனக்குத் தெரியாது. என்னை மன்னித்துவிடு. உனக்கு வருத்தம் உண்டாகும் என்று எனக்குத் தெரியும்" என்று இன்னும் ஏதோதோ சொன்னார். அவர் சொன்னது ஒன்றும் என் காதில் விழவில்லை. நான் மலைத்துப் போய் நின்றேன். என்னைப் பார்த்து ராஜாராமையர் கெஞ்சுவதா! என்னால் ஒன்றும் பேச முடியவில்லை. நெஞ்சுக்குள்ளே ஏதோ குழுறிக்கொண் டிருந்தது. பேசாமல் கீழே போனேன். வெளிக் கதவைத் திறந்து வைத்தேன். என் அறைக்குள் போய்விட்டேன்.

அதன் பிறகு பத்து நாள் வரையில் நான் வெளிக் கிளம்பவே இல்லை. ராஜாராமையரும் வரவில்லை. சுந்தரிபாய் மறுநாளே வேறு இடத்துக்கு ஜாகை மாற்றிக்கொண்டு போய்விட்டாள்.

ஊர் ஜனங்களுக்கு இதெல்லாம் யார் சொல்வார்களோ! ஒன்றுக்குப் பத்தாக உடனே பேச்சுக் கிளம்பி விட்டது. சுந்தரிபாயைத் தம் பங்களாவிலேயே கொண்டுபோய் வைத்துக்கொண்டுவிட்டார் என்றும், அவளைக் கல்யாணமே செய்துகொள்ளப் போகிறார் என்றும், இப்படிப் பல விதமாகப் பேசிக்கொள்ள ஆரம்பித்துவிட்டனர். நல்ல வேளையாக அவரும் நாடகத்தில் சேரப் போகிறார் என்று ஒருவரும் பேசிக்

கொள்ளவில்லை. அதைத் தவிர மற்றெல்லாம் பேசி விட்டார்கள்.

உண்மையில் நான் கேட்கிறேன்: அவர் வாழ்ந்த வாழ்வு என்ன? இருந்த யோக்கியதை என்ன? அவருக்கு இந்த மாதிரியான கதி வரலாமா? அதற்கு யார் ஜவாப்தாரி? நானாக இருந்தால் அவ்வளவு பெரிய துக்கத்தைத் தாங்கிக்கொண்டு உயிருடன் இருந்திருப்பேனா? எப்படியானால் என்ன? இத்தனை வருஷமாய் அவர் சம்பாதித்த செல்வாக்கும், கட்டி வைத்த பெயரும் கீர்த்தியும் ஒரே நாளில் மறைந்து மண்ணாய்ப் போய்விட்டன. அவர் ஊரை விட்டே போகும்படியான நிலைமை ஏற்பட்டு விட்டது.

அவர் சுயமாகவே செங்கற்பட்டுக்கு மாற்றிக் கொண்டு போய்விட்டார். போகும்போது என்னிடம் சொல்லிக்கொள்ள வந்திருந்தார். தலையை நிமிர்ந்து என்னைப் பாராமலே, "போய் வருகிறேன்" என்றார். தொண்டையை அடைத்தது. கண்களில் வந்த நீரைத் துடைத்துக்கொண்டே தலையை அசைத்தேன்.

அவர் போன அப்புறமும் அவரை விட்டார்களா? சுந்தரியாய் சென்னைக்குப் போனாளாம். அதனால்தான் ராஜாராமையர் செங்கற்பட்டுக்கு மாற்றிக்கொண்டாராம். இது என்ன அநியாயம்?

தெய்வமே அவர் விஷயத்தில் கொடுமையான அநியாயம் செய்திருக்கும்போது மனிதர்கள் செய்யும் அநியாயம் எம்மாத்திரம்? பந்துக்கள் விலக்கி வைத்தார்கள். ஜாதிப் பிரஷ்டம் செய்வோம் என்று பயமுறுத்தினார்கள். அவர் ஒன்றுக்கும் கலங்கவில்லை.

அவர் சொல்லுகிற மாதிரி, இனி அவர் இருந்தாலும் ஒன்றுதான், இறந்தாலும் ஒன்றுதான். ஆனால், இந்த ஊர் ஜனங்கள் மட்டும் அவர் இறந்தால்கூட மேல் லோகத்துக்கும் போய் வம்பளப்பார்கள்.

# சாட்சி

## 1

மாலை நேரம்; பகலும் இல்லாத, இரவும் இல்லாத மங்கிய அந்திவேளை. அப்போது சுப்பனுக்கு ஆறு வயசு இருக்கும்.

"இதோ பாத்துக்கிடு, அப்பனுக்கு மேலே பேரெடுக்கணும். எனக்கு எங்க ஐயா இப்படித்தான் சொல்லிக் கொடுத்தாரு. இங்கே பாரு."

கறுப்பனாசாரி தன்னுடைய மகன் சுப்பனைக் கொஞ்சிக்கொண்டே தொழில் கற்றுக்கொடுக்கிறான். தச்சு வேலை.

குழந்தையும் தந்தையின் கையிலுள்ள உளியைப் பிடுங்குகிறது. உடனே தந்தை, "டேயப்பா, அதை முதலில் எடுக்காதே. கை தவறிச்சினாப் போச்சு. முதல்லே, தமுரு இளுக்கணும்" என்று கூறிக் குழந்தையை ஆர்வத்துடன் வாரி எடுக்கிறான்.

அந்தச் சமயத்தில்தான் ஓர் உருவம் உள்ளே நுழைந்தது. திடுக்கிட்டுக் குழந்தையைக் கீழே விட்டான் கறுப்பன். ஏறிட்டுப் பார்த்தான். அந்த அறை இருண்டிருந்ததாயினும், புகை எழுப்பி எரிந்துகொண்டிருந்த மண்ணெண்ணெய் விளக்கின் உதவியால் வந்த ஆளைக் கண்டுகொண்டான்; அடுத்த வீட்டுக்காரன் காத்தானாசாரி.

அறிந்துகொண்டதும், "என்ன, காத்தான், எங்கே இந்த நேரத்தில்?" என்று வரவேற்றான் அவனை.

வந்தவன் ஒன்றும் பேசவில்லை. கீழே குனிந்த படியே கறுப்பனை உற்றுப் பார்த்தான். சில விநாடிகள் கழித்து, "என்னுடா, எங்கிட்டவா உன் வேலைத்தனத் தைக் காட்டறே? யார் இன்னுடா நெனச்சே என்னை?" என்று படபடவென்று பேசினான். அவனுடைய கண் கள் கோபத்தால் சிவந்திருந்தது இருளில் தெரியவில்லை.

கறுப்பன் எழுந்தான். "என்ன அப்பா விஷயம்? ஏன் இப்படிப் பேசறே?"

அவனுடைய குரலில் உண்மையான வியப்பும் பீதி யும் தொனித்தன.

கிட்ட நெருங்கினான் காத்தான்.

"என்னுடா ஒண்ணும் தெரியாதுபோலே பாசாங்கு பண்ணுறே! என்னோடே ரம்பம் உனக்குத் தெரியாது?"

உண்மையில் கோபமடைந்தான் கறுப்பன். இவன் ரம்பத்தைக் காணுவிட்டால் அதற்கு யாரைச் சொல்லு வது?

"டேய் என்னடா முழிக்கிறே? மரியாதையா ரம்பத்தைக் கீழே வச்சு மறு காரியம் பாரு. இல் லேன்னு—"

"ஏய், கொஞ்சம் அடக்கிப் பேசு."

"இல்லாட்டி—? திருட்டுப் பயலுக்கு மரியாதை வேறையா?"

"டேய்!"

"ரம்பத்தைக் கீழே வை."

"போடா வெளியே."

"உதைப்பேன்."

"குத்துவேன்."

எதிர்பாராத விதமாய் அவன் மேல் பாய்ந்தான் காத்தான்.

இவ்வளவு நேரம் வியப்புடன் பார்த்துக்கொண்டிருந்த குழந்தை வீரிட்டு அலறிக்கொண்டு மூலைக்கு ஓடிற்று. அங்கிருந்து கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தது தந்தையை.

காத்தானும் கறுப்பனும் கட்டிப் புரண்டனர். சுவரில் பிறைமுழுவதும் கரிமய மாக்கிக்கொண் டிருந்த மண்ணெண்ணெய் விளக்கு ஆடியாடி எரிந்தது.

திடீரென்று ஏதோ பாய்ந்ததுபோல இருந்தது அந்தக் குழந்தையுள்ளத்தில். பயத்தின் மிகுதியால் அதன் இளம் தேகம் முழுவதும் அப்படியே பனிக் கட்டியாய் உறைந்துவிட்டது போல இருந்தது. அசை யாமல் விரித்த கண் விரித்தபடியே கற்சிலையாய் நின்று கொண்டிருந்தது.

எதிரே அந்தப் பாவி காத்தான் பக்கத்தில் இருந்த உளியை எடுத்துச் செருகிவிட்டான், கறுப் பனின் மார்பில். சரேலென்று பீரிட்டுப் பாய்ந்தது ரத்த ஊற்று.

'ஐயோ!' என்று தன்னுடைய முழுப் பலத்துட னும் கீச்சிட்டது குழந்தை.

எழுந்து வெளியே ஓடி மறைந்தான் கொலைகாரன்.

## 2

"ஏண்டா சுப்பா, பள்ளிக்கூடத்திலே என்னடா பண்ணினே? சரியாப் பாடம் படிச்சுக்கிடலியாடா?"

"ஒண்ணுமில்லே அம்மா."

மிரள மிரள விழித்துக்கொண்டு எதிரே வந்து நின்றான் சுப்பன். அவனுக்கு இப்போது பத்து வயசு. தகப்பனை இழந்த பின் அவனைக் காப்பாற்றுவோர் யாரும் இல்லை. தாயில்லாக் குழந்தை மேல் இரக்கம் கொண்டு தன் வீட்டுக்குக் கொண்டு வந்து வளர்த்து வந்தாள் அவனுடைய அத்தை. அவளுக்கும் குழந்தை இல்லை.

இந்தக் குழந்தை விசித்திரமாய் இருந்தது. எட்டு வயசாகியும் வாய் திறந்து ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. எப்போதும் மிரள மிரள விழித்துக்கொண்டே ஆகாயத்தை அண்ணாந்து பார்த்துக்கொண்டே நிற்கும். அதிகமாக அதட்டிப் பேசினால் திடுக்கிட்டுத் திரும்பும். வாய் திறந்து பசியென்று ஒரு தடவைகூடக் கேட்டதில்லை. சுப்பாயிக்கு ரொம்ப விநோதமாய் இருந்தது. ஒருவேளை ஊமைப் பிள்ளையோ என்று நினைத்தாள். குழந்தையைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பி வைத்துப் பார்ப்போம் என்று தோன்றிற்று. உள்ளூர்த் தர்மப் பள்ளிக்கூடத்தில் சேர்த்தாள். ஆனால் இரண்டு வருஷப் பள்ளிக்கூட வாசத்தின்பின் உயிரெழுத்து நான்கு அக்ஷரங்களைக் கற்றுக்கொள்வதுடன் வீடு வந்து சேர்ந்தது குழந்தை.

அது மட்டுமல்ல. பள்ளிக்கூட ஆசிரியர் பையனுடன் ஒரு பெரிய புகார் மூட்டையையும் கொண்டு வந்து சேர்த்தார். "என்ன அம்மா, உங்க பிள்ளை ஒன்றுக்கும் லாயக்கில்லை. நானும் ரெண்டு வருஷமா எத்தனையோ வழியெல்லாம் செய்து பார்த்தேன். அவனுடைய பித்துத் தெளிவதாயில்லை. ஏதாவது 'மந்திரம் கிந்திரம்' செய்து பாருங்கோ" என்றார் அவர்.

அவர்தாம் என்ன செய்ய முடியும்? வகுப்பில் ஒரு மூலையில் போய் உட்கார்ந்துவிடுகிறான். எவ்வளவு அதட்டி முன்னடி கொண்டுவந்து வைத்தாலும் மறுநாள் அதே இடத்திற்குப் போய்விடுவான். என்ன

கேட்டாலும் வாயைத் திறப்பதில்லை. சிலேட்டில் எழுதச் சொன்னால் ஏதாவது தாறுமாறாகக் கோடு கிறிக் கொண்டே இருக்கிறான். உதைத்தாலும் கேட்பதில்லை. அடித்தாலும் கேட்பதில்லை. எவ்வளவு தடவைதான் உதைப்பது?

இந்தப் பித்துப் பிடித்த பிள்ளையை வைத்துக் கொண்டு என்ன செய்வதென்று சுப்பாயிக்குத் தெரியவில்லை.

உள்ளூர்ப் பூசாரியைக் கூப்பிட்டு வெள்ளிக் கிழமை ஐயனார் கோயில்லே உடுக்கடிக்கச் சொன்னாள். ஐயனார், பூசாரி மூலம் சொல்லியபடி செய்ததில் அவளுக்குப் பத்துப் பணம் செலவு. ஆனால் அதனால் பிரயோசனம் ஒன்றுமில்லை. சுப்பன் ஸ்வபாவத்தில் ஓர் அபிவிருத்தியும் இல்லை. ஆனால் இரண்டு மூன்று தரம் அதட்டிக் கேட்டால், இப்பொழுது ஒரு வார்த்தை அரை வார்த்தையாகப் பதில் சொல்லுகிறான்.

இந்தச் சமயத்தில்தான் சுப்பாயியின் மாமன் கந்தையா உதவி செய்ய முன்வந்தார். கந்தையா அந்த ஊரிலேயே பெருத்த மளிகைக்கடை வைத்து வியாபாரம் செய்கிறார். பொங்கல் சமயத்தில் சுப்பாயியின் வீட்டுக்கு வந்திருந்தார். அப்பொழுதுதான் சொன்னார்:

"ஏம்மா, இந்தப் பயல் இங்கே என்ன பண்றான்? எங்கிட்ட அனுப்பி வையேன். கடையிலே போட்டுப் பாக்கிறேன். அங்கேயாவது உருப்படுவானா பாப்போம்" என்று.

சுப்பாயிக்கும் அது சரியென்று தோன்றிற்று. 'ஒரு தொழிலிலும் உருப்படாத பிள்ளை ஒன்று இருக்குமா? வியாபாரத்திலாவது முன்னுக்கு வருவானா என்று பார்ப்போம்' என்று நினைத்தாள்.

மறுநாள் கந்தையா கூடச் சென்றான் சுப்பன்.

## 3

முதல் ஒரு வருஷத்தில் கந்தையாவுடைய நம்பிக்கை கொஞ்சங் கூடத் தளரவில்லை. எப்படியாவது பையனை உருப்பட வைத்துவிடலாமென்று நம்பிக் கொண்டிருந்தார். ஆனால் இரண்டாவது வருஷத்தில் அவருடைய நம்பிக்கையும் தளர ஆரம்பித்தது. ஆனாலும் அவர் முயற்சியை விடவில்லை.

ஒரு நாள் மாலை கடையில் வாடிக்கைக்காரர் ஒருவர் வந்து, "நாலு வீசை சர்க்கரை போடு" என்றார்.

"டே சுப்பா! உள்ள போய் மூட்டையை அவுத்து நாலு வீசை போட்டு வா" என்றார் கந்தையா.

எங்கோ வெறும் வெளியை நோக்கிக்கொண்டிருந்த பையன் திடுக்கிட்டு எழுந்து உள்ளே போனான்.

பத்து நிமிஷமாச்சு. உள்ளே போன பையன் வரவில்லை. "டே, சுப்பா!" என்று கூவினார் முதலாளி. பையனைக் காணவில்லை. உடனே அவரே எழுந்து உள்ளே போனார். அங்கே என்ன கண்டார்?

பையன் சாக்கு மூட்டைக்கு அடியில் உட்கார்ந்து கொண்டு ஒரு சாக்குக் கட்டியால் மூட்டையின்மேல் தென்னமரப் படம் வரைந்துகொண்டிருக்கிறான்! வந்தது கோபம் அவருக்கு. பளீரென்று ஓர் அறை விட்டார் கன்னத்தில். "ஐயோ!" என்று சுருண்டு விழுந்தான் பையன் கீழே.

இந்த மாதிரி நடப்பது இது முதல் தடவையல்ல. ஒரு நாள் வீட்டில் வட்டிலில் சாப்பாடு போடப்பட்டிருக்கிறது. அவன் சோற்றைத் தொடவே இல்லை. கீழே குனிந்துகொண்டு என்னவோ தீவிர யோசனையில் ஆழ்ந்தவன்போல் உட்கார்ந்திருக்கிறான்.

கந்தையா சாப்பிட்டு எழுந்துவிட்டார். அவன் பக்கத்தில் வந்து, "டேய் சுப்பா!" என்று கூவினார்.

பையன் அசையவில்லை. தோளைப் பிடித்துக் குலுக்கினார்.

"என்னடா இது! சோறு திங்கல்லியா!"

மெதுவாக நிமிர்ந்தான் சுப்பன். "ஒண்ணுமில்லே" என்று சொல்லிவிட்டுச் சாப்பிட ஆரம்பித்தான்.

இவ்விதம் மூன்று வருஷங்கள் அந்த அசட்டுப் பிள்ளையை வைத்துக்கொண்டு மாரடித்தார் கந்தையா. எவ்வளவு நாள்தான் அவரால் பொறுக்க முடியும்? அவருடைய பொறுமைக்கு மட்டும் எல்லை கிடையாதா என்ன?

இவனை என்ன பண்ணுவது? எங்கே அனுப்புவது? இரண்டு வருஷத்திற்கு முன்பு சுப்பாயியும் இறந்துவிட்டாள். அவள் சாகும் தறுவாயில் தம்மை அழைத்துச் சொன்ன வார்த்தைகள் அவருக்கு நன்ருக நினைவிருந்தன.

"மாமா, நீங்க இதை மட்டும் மறக்கக் கூடாது. சுப்பன் ஓர் அநாதைப் பிள்ளை; தாயுமில்லே, தகப்பனுமில்லே. அதோடே பொளைக்கப் புத்தியுமில்லே, பித்து. என்ன வந்தாலும் நீங்க அதைக் காப்பாத்தியாகணும்; எனக்காக இதைச் செய்யணும்''என்று சொல்லிவிட்டுச் செத்தாள்.

அதை உத்தேசித்துத்தான் இவ்வளவு காலம் பொறுத்தார் அவர். ஆனல் இனியும் என்ன செய்வது?

அவருக்கும் ஒன்றும் தோன்றவில்லை. கடைசியில் தத்காலிகமாக வீட்டிலேயே இருக்கட்டும் என்று விட்டுவிட்டார்.

நாள் முழுவதும் இஷ்டம்போலச் சுற்றுவான் சுப்பன். சாப்பாட்டு வேளைக்கு மட்டும் வீட்டுக்கு வந்துவிடுவான். இவ்விதம் பல மாதங்கள் ஆயின.

தினம் எங்கே போவான்? காலையிலிருந்து சாயங் காலம் வரையில் என்ன பண்ணுகிறான்? இதை அறிய வேண்டுமென்று ஆவல் எழுந்தது கந்தையாவுக்கு.

ஒரு நாள் காலை அவன் அறியாமல் அவனைத் தொடர்ந்து போனார். நகரத்துக்கு வெளியே ஒரு பர் லாங்கு தூரத்தில் ஓர் இலுப்பைத் தோப்பு. உச்சி வேளையிலும் அங்கே துளிகூட வெயில் தெரியாது; குளுகுளுவென்று இருக்கும். அதற்குள்ளே நுழைந் தான் சுப்பன். கந்தையாவும் தொடர்ந்தார்.

ஒரு பெருத்த மரத்தடியில் அவன் உட்கார்ந் தான். மேலே அண்ணாந்து பார்த்துக்கொண்டே இருந் தான். மரத்தின் மேல் பக்ஷி ஜாலங்கள் கீச்சு மூச் சென்று கத்திக்கொண் டிருந்தன. ஆகாயத்தில் தனிமையாக ஒரு கருடன் சுழன்று கூவிக்கொண்டு வட்டமிட்டுக்கொண் டிருந்தது.

சற்று நேரம் கழிந்தது. சுப்பன் தன் மடியிலிருந்து ஒரு சுருண்ட காகிதத்தையும் சிறிய பென்சில் துண்டை யும் எடுத்தான். காகிதத்தைப் பிரித்து அதில் ஏதோ சித்திரம் எழுத ஆரம்பித்தான். அவனுடைய மந்த புத் தியில் என்ன கற்பனை ஓடியதோ? அவனுடைய மங்கிய கண்களில் சிறிது பிரகாசம் தோன்றிற்று.

கண் கொட்டாமல் வியப்புடன் பார்த்தார் கந்தையா. அந்த அசட்டுப் பிள்ளையினிடம் ஒருவித அநுதாபம் ஏற்பட்டது அவருக்கு. அவனுடைய திருப்தியைக் கலைக்க அவருக்கு மனமில்லை. 'பைத் தியம்!' என்று சொல்லிக்கொண்டே வீடு திரும்பினார்.

## 4

ஒரு வருஷம் கழிந்தது.

கந்தையா யோசித்தார். கடையில் இருந்தால்தான் வேலை செய்யமாட்டேன் என்கிறான். வெளியில் யாராவது அந்நியரிடம் வேலைக்கு வைத்தால் ஒரு வேளை திருந்திவிட மாட்டானா? அதோடு அவனிடம் ஓர் அபிவிருத்தியையும் கண்டார். இப்பொழுது சொன்னதைச் சொன்னபடி செய்யக் கற்றுக்கொண்டிருக்கிறான்.

ஒரு நாள் அவனைத் தனியே அழைத்துப் புத்திமதி சொன்னார். "சுப்பா, இந்த மாதிரி ஒரு தொழிலும் தெரியாமல் என்னமாப் பொளைக்க முடியும்? ஏதாவது வேலை செய்தாத்தானே அரை வயித்துக்குச் சம்பாதிக்கலாம்? எவ்வளவு நாளைக்கு வேலை செய்யாமெ குந்தியிருக்க முடியும்? எனக்கு வேண்டிய எடத்திலே ஒரு வேலை பாத்திருக்கேன். அங்கே போய் ஒழுங்காயிருக்கணும். என்ன சொல்றே?" என்றார்.

எல்லாவற்றிற்கும் பதிலாகத் தலையை வேகமாக அசைத்தான் சுப்பன். பிறகு மெதுவாக, "நீங்க சொல்றதைக் கேக்கறேன்" என்று சொல்லிவிட்டு மிரள மிரள விழித்தான்.

கந்தையாவுக்குப் பரம திருப்தி. 'பொறுப்பை அறிந்துவிட்டான் பையன்; இனி உருப்பட்டுவிடுவான்' என்று தமக்குள்ளேயே மகிழ்ச்சியடைந்தார். மறுநாளே ஒரு வேலை சம்பாதித்துவிட்டார். தாசில்தார் வீட்டில் அம்மாள் ஏவினதைச் செய்ய வேண்டியது; அங்கேயே சாப்பாடு.

அந்த வேலையைச் சம்பாதிப்பதில் அவருக்கு அதிகச் சிரமம் இல்லை. ஊரிலே பெருத்த வியாபாரி. தாசில்தார் அம்மாளின் சலுகை. அதோடு டபேதார் மிகவும் வேண்டியவன்.

சுப்பனும் மறுநாள் முதல் வேலைக்குப் போகத் தொடங்கினான். பகல் முழுவதும் வேலை. சாப்பாடு அங்கேயே. ராத்திரி வீட்டுக்கு வந்துவிடுவான்.

சுப்பன் தாசில்தார் வீட்டில் வேலைக்குப் போய்க் கிட்டத்தட்ட ஒரு வருஷம் ஆயிற்று.

கந்தையா பரம திருப்தியுடன் இருந்தார். இனி அவருக்குச் சுப்பனைப்பற்றிய கவலை விட்டது. இனி மேல் எப்படியும் பிழைத்துக்கொள்வான்.

ஒரு நாள் கடைக்குத் தாசில்தார் வீட்டு டபேதார் வந்தான். எல்லாம் வாங்கி முடிந்து அவன் புறப்பட்டான். அப்போது கந்தையா கேட்டார்: "ஏன் ஐயா, நம்ம பையன் ஒழுங்காக இருக்கிறானா?"

"ஒழுங்காத்தான் இருக்கான். ஒவ்வொரு சமயம் ஏதாவது கிறுக்குப் புத்தி வந்துடுது" என்று அவன் சொன்னதும் கந்தையாவுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

"என்ன ஐயா? என்ன பண்ணுறான்?" என்று கேட்டார் ஆவலுடன். இவ்வளவு சிரமப்பட்டும் வியர்த்தமாகப் போய்விடப் போகிறதே என்ற பயம் அவருக்கு.

"என்ன, ஒன்றும் இல்லை. ஒரு நாள் அப்படித் தான் கூப்பிடக் கூப்பிடக் குந்திக்கிட்டே இருந்தான். அப்புறம் எஜமான் வந்து அதட்டினதுந்தான் எழுந்தான். அடிக்கடி சுவத்திலே கரிக்கோடு கிழிச்சுக்கினே இருக்கான். கேட்டாப் பதிலே சொல்றதில்லே. ஆனா எஜமானியம்மாளுக்கு ரொம்பப் பிரியம் அவன் கிட்ட. 'போறான் ஊமைப்பிள்ளை'ன்னு சொல்லு வாங்க எப்போதும்..." என்று சொல்லிக்கொண்டே புறப்பட்டுவிட்டான் டபேதார்.

கந்தையா யோசனையில் ஆழ்ந்தார்.

## 5

ஒரு நாள் இரவு எட்டு மணி இருக்கும். அப் பொழுதுதான் கிளப்பிலிருந்து வந்து உள்ளே நுழைந்

தார் தாசில்தார். உடுப்புகளைக் கழற்றி வைத்துவிட்டு மேஜையின் சமீபத்தில் போய் ஏதோ தேடினார்.

அவருடைய முகச் சுளிப்பிலிருந்தும் அவர் 'சூள்' கொட்டுவதிலிருந்தும் அவர் தேடும் பொருள் அகப்படவில்லை என்று தோன்றிற்று.

"டபேதார்!" என்று கூவினார் கோபத்துடன்.

"எஜமான்!" என்று ஓடி வந்தான் டபேதார்.

"இங்கே இன்று காலமே யார் வந்தா?"

"ஒருத்தரும் இல்லே! சுப்பன்தான் இருந்தான்."

"எங்கே அவன்?"

"இதோ பாக்கறங்க" என்று ஓடினான் டபேதார்.

அப்பொழுது, "என்ன?" என்று விசாரித்துக் கொண்டே உள்ளே நுழைந்தாள் எஜமானியம்மாள்.

"சுப்பன் எங்கே?" என்றார் தாசில்தார்.

"ஏன்? எதற்கு?"

"என்ன, அநியாயமாயிருக்கிறது?"

"என்ன?"

"இங்கே இரண்டு ஐந்து ரூபா நோட்டு வைத்திருந்தேன் டிராயரில். காலமே நான் கச்சேரிக்குப் போகும் போது ஞாபகமாக வைத்தேன். அதைக் காணோம்."

"எங்கே போய்விடும்?"

"யாரோதான் திருடிவிட்டார்கள்; அந்தப் பயல் சுப்பன்—"

"சுப்பனா! அது ஒரு பித்துன்னா! அது எடுத்திருக்காது."

"வேறே எங்கே போய்விடும்?"

இதற்குள் பரபரப்புடன் உள்ளே நுழைந்த டபே தார், கைகட்டி மரியாதையாக நின்றான்.

"எங்கடா அவன்?"

"காணுங்க."

"இன்னிக்கி வேலைக்கு வந்தானா?"

"காலையிலே எட்டு மணிக்குப் பாத்தேனுங்க. அப்புறம் நான் பாக்கவே இல்லைங்க.

"ஆமாம். இன்னிக்கி மத்தியான்னம் சாப்பாட்டுக் குக் கூட வரல்லியே!" என்றாள் தாசில்தாரம்மாள். பிறகு, "ஒரு வேளை அதுதான் அசட்டுத்தனமாக எடுத்து விட்டதோ என்னவோ?" என்றாள் மெதுவாக.

"அதிலே சந்தேகமென்ன! டேய், போய்க் கந்தை யாவையும் அந்தப் பயலையும் இங்கே கொண்டுவா!"

வெளியே ஓடினான் டபேதார்.

## 6

இரவு பத்து மணி இருக்கும். கந்தையா வீட்டுப் பின்கட்டு. மண்ணெண்ணெய் விளக்கு ஏகமாகக் கரி மண்டலத்தை எழுப்பிக்கொண்டு பிசாசாய் எரிகிறது. அதன் எதிரில் உட்கார்ந்திருக்கிறான் சுப்பன். அவன் எதிரே ஓர் அகலமான திரைச்சீலை விரித்துக்கிடக்கிறது. பக்கத்தில் ஒரு வர்ணப் பெட்டி, பிரஷ்கள்.

சுப்பனுடைய ஆவி முழுவதும் அந்தத் திரைச் சீலையில் லயித்திருக்கிறது. அவனுடைய விரல்கள் வெகு லாகவமாகப் பிரஷ்ஷைப் பிடித்துப் பல வருஷங்கள் பழகித் தேர்ந்த சித்திரகாரனைப் போல் வேலை செய் கின்றன.

சீலையில் ஒரு படம். அநேகமாகப் பூர்த்தியாகி விட்டது. அதன் விஷயமோ மிகவும் கோரமாக

இருந்தது. ஆனால் ஒவ்வொரு ரேகையும், ஒவ்வொரு சாயையும் உயிர்பெற்றுத் துள்ளுவதுபோல இருந்தது.

ஒரு சிறு அறை; ஒரு பிறையில் ஒரு மண்ணெண்ணெய் விளக்கு; அதனுடைய சுடர் அப்படியே காற்றில் ஆடுவதுபோல இருந்தது. அந்தச் சுடருக்கும் எதிரே உண்மையில் எரிந்துகொண்டிருந்ததற்கும் வித்தியாசமே தெரியவில்லை. கீழே ஒரு முரட்டு ஆள் கிடக்கிறான், அலங்கோலமாக. மற்றொருவன் குனிந்துகொண்டு அவனுடைய மார்பில் ஓர் உளியைச் செருகுகிறான். ரத்தம் பீறிட்டு வீசுகிறது.

இதுதான் அந்தப் படத்தில் சித்திரித்திருந்தது. அங்கங்கே அதன் வர்ணக் குழைவுகளும் சாயைகளும் அதியற்புதமாக இருந்தன.

எல்லாம் முடிந்துவிட்டது. மார்பில் உளி பாயும் இடத்தில் உதிரம் பீறிடுகிறதே அது ஒன்றுதான் பாக்கி. இன்னும் சற்று நேரத்தில் அதுவும் முடிந்துவிடும்.

சுப்பன் சிவப்பு வர்ணத்தை எடுத்து அந்த இடத்தில் வைக்கிறான். அதை நிமிர்ந்து பார்க்கிறான். உடனே தலையை அசைத்துவிட்டு அதன்மேல் கடல் நுரையைப் போட்டு அழித்துவிடுகிறான். சித்திரகாரனுக்குத் திருப்தி இல்லை. மறுபடியும் சிவப்பில் கொஞ்சம் பழுப்புக் கலந்து விடுகிறான். அதுவும் திருப்தி இல்லை. மறுபடியும் இன்னும் கொஞ்சம் மாறிய வர்ணம்; மறுபடியும் வேறு வர்ணம்.

அரை மணி ஆயிற்று. அவனுக்குத் திருப்தியாக அமையவில்லை அந்த இடம். அவன் உள்ளூற வேதனைப் படுவதை முகக் கோணல்கள் தெரிவிக்கின்றன. முகம் சிவக்கிறது. விரல்கள் துடிக்கின்றன. அவனுடைய ஆவியே வெதும்பி முரணுவதை அவனுடைய ஒவ்வோர் அங்கமும் தெரிவிக்கிறது. திடீரென்று அவனுடைய

முகத்தில் ஒரு புதுப் பிரகாசம்! தெய்விகச் சாயை ஓடிய ஒரு களை! வெடுக்கென்று எழுந்தான். பக்கத்தில் இருந்த ஒரு கத்தியை எடுத்தான். சற்றும் யோசிக்காமல் சடக்கென்று இடது மணிக்கட்டைக் கீறிவிட்டான்! உதிர ஊற்று!

தானாகவே அவனுடைய வலது கை, பிரஷ்ஷைப் பிடித்து ரத்தத்தில் தோய்த்துப் படபடவென்று வேலை செய்யத் தொடங்கியது! படம் பூர்த்தியாகிவிட்டது! திருப்தி!

உதிரம் பிரவாகமாக ஓடி அவனுடைய தேகம் பூராவையும் நனைத்துவிட்டது. மயக்கம் போட்டுக் கீழே சாய்ந்தான். தலை சுழன்றது. வலது கையில் இருந்த பிரஷ் தானாகவே கீழே விழுந்தது.

வெளியில் காலடிச் சத்தம் கேட்டது. கதவு திறந்தது. டபேதாரும் அவன் பின்னே கங்கையாவும் உள்ளே நுழைவதை அவனுடைய மூடப்போகும் கண்கள் கடைசித் தடவையாய்க் கண்டன.

# அந்தரங்கம்

## 1

"என்ன அது? நான் பார்க்கலாமா?" என்று புன் சிரிப்புடன் கேட்டுக்கொண்டே உள்ளே நுழைந்தான் கோபாலன்.

அவன் நுழைவதைக் கண்டதும் காமு, தான் படித் துக்கொண் டிருந்த கடிதத்தை அவசர அவசரமாகப் புடைவைத் தலைப்பில் மறைத்து வைத்துக்கொண் டாள்.

அதற்குள் கிட்ட நெருங்கிய கோபாலன், அவள் மறைத்துக்கொண்டதைப் பார்த்துவிட்டான். உடனே, "அதை எடு, நான் பார்க்கவேண்டும்" என்று சொல் லிக்கொண்டே அவள் பக்கத்தில் வந்து தரையில் உட் கார்ந்துகொண்டான்.

"அது உங்களுக்கு ஒன்றும் இல்லை" என்றாள் காமு.

"அதனால்தான் நான் பார்க்க வேண்டும்."

"நீங்கள் பார்க்கக் கூடாது."

"நிச்சயமாகவா?"

"கண்டிப்பாக!"

"முடியாது; நான் கட்டாயமாய்ப் பார்க்கத்தான் போகிறேன். கொடுக்கிறாயா, இல்லையா?"

அவனுடைய குரலில் தொனித்த கடுமையால் தாக்கப்பட்டது போல், அவளுடைய முகத் தோற்றம் சடக்கென்று மாறிற்று. முகத்தில் அசட்டுக் களை தட்டிற்று.

உடனே அந்தக் கடிதத்தை எடுத்து, அவன் பக்கத்தில் எறிந்துவிட்டுக் கோபமாக அவனது முகத்தையே உற்றுப் பார்த்தாள். புன்னகை ததும்ப அதை எடுத்துப் படித்தான் கோபாலன்.

உடனே, "இதற்குத்தானா? உன் சிநேகிதையின் அபத்தக் கடிதத்துக்குத்தானா இத்தனை ரகஸ்யம்?" என்று சொல்லிக் கேலியாகச் சிரித்தான்.

காமுவின் முகம் சிவந்தது.

"அபத்தமாக இருந்தால் இருக்கட்டும். அது எனக்கு ரகஸ்யந்தான்" என்று முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

சற்று நேரம் கழித்துக் காமு கேட்டாள்: "நீங்கள் மாத்திரம் ஒன்றும் எனக்குச் சொல்வதில்லை. என்னுடைய ரகஸ்யத்தை மாத்திரம் கட்டாயப்படுத்தித் தெரிந்துகொள்கிறீர்களே? இது நியாயமா?"

"ஆமாம், நான் எதைச் சொல்ல வேண்டும்? எனக்கு இந்த மாதிரி நண்பர்கள் அபத்தமான கடிதம் எழுதுவதில்லையே! உனக்கு வந்திருக்கும் இந்தக் கடிதத்தைப் பார்; ஒரே பிதற்றலாகவும்........."

அவளுடைய முகத்தை நிமிர்ந்து பார்த்த கோபாலன் மேலே பேசாமல் நிறுத்திவிட்டான். சிவந்திருந்த அவளது முகம், கோபத்திலிருந்து துக்கமாக மாறும் நிலைமையில் இருந்தது.

"உங்களுக்கு என்னைப் பார்த்தால் பரிகாசமாக இருக்கிறது......நமக்குள்ளே ரகஸ்யமே இருக்கக் கூடாது என்று சொன்னேன்......"

அதற்குமேல் அவளால் பேச முடியவில்லை. கண்களில் கண்ணீர் ததும்பி நின்றது......

இது இரண்டு வருஷங்களுக்கு முன்பு நடந்த சம்பவம். அப்பொழுது அதை வெறும் விளையாட்டாக, பரிகாசமாக நினைத்தான் கோபாலன்.

ஆனால் அந்தச் சம்பவம் நடந்து சில மாதங்கள் கழித்துத்தான் அதனுடைய பூர்ண அர்த்தமும் அவனுக்கு விளங்கலாயிற்று. தன்னுடைய தங்கையிடமிருந்தோ சிநேகிதிகளிடமிருந்தோ வரும் கடிதங்களை அவள் வஞ்சனையற்ற வெள்ளை உள்ளத்துடன் அவனிடம் கொண்டுவந்து காண்பிக்கும்போது அவன் தன்னையே பரிசீலனை செய்துகொள்ளும் நிலைமை ஏற்பட்டது.

அப்பொழுது ஒரு பழைய சம்பவம், வெகு நாளைக்கு முன் நடந்தது, அவன் மனத்தில் தோன்றி, சுருக்கென்று தைத்தது. இவ்வளவு காலம் அதை அவன் நினைக்கவே இல்லை. அடியோடு மறந்துவிட்டிருந்தான். அது அவனுக்குக் கல்யாணம் ஆவதற்கு முன் நடந்தது. அப்பொழுது அவன் காமுவைப் பார்த்தது கூட இல்லை.

எதேச்சையாகத் தோன்றிய அந்த நினைவு வர வரக் கனமாக வளர்ந்து, அவன் நெஞ்சில் உறுத்த ஆரம்பித்தது. அவன் எவ்வளவுதான் மறக்க முயன்றாலும், அது அவன் நெஞ்சைவிட்டு அகல மறுத்தது. காமுவைக் காணும்போதெல்லாம் அது தானாகவே அவன் மனக் கண்முன் தோன்றி அவனைக் குற்றம் சாட்டுவதுபோல இருந்தது.

'அது ஒரு குற்றமாகுமா? பால்யத்தில் சிறுபிள்ளை விளையாட்டாக நடந்தது. அப்போது மனத்தில் கெட்ட எண்ணம் உண்டா? யதேச்சையாக நேர்ந்துவிட்டது. வீட்டிலே குழந்தை முதல் அவனுடன் வளர்ந்த பெண் அவள். அவளுக்கும் விவரம் தெரியாது அப்போது; வாலிபத்தின் குறுகுறுத்த ஆவல்; அவ்வளவுதான்! அதற்குப்பின் அதைப்பற்றி நினைத்ததுகூட உண்டா?

இதனால் காமுவுக்குத் துரோகம் செய்ததாக ஆகுமா?... ஆனால் அவளிடம் அதைப்பற்றித் தெரிவிக்காதது குற்றம் அல்லவா? கள்ளம் கபடமற்றக் குழந்தை போல, அவனிடம் எவ்வளவு நம்பிக்கை வைத்திருக்கிறாள்! அவளை மோசம் செய்ததாக ஆகாதா?—'

பல நாட்கள் இவ்விதம் கட்சிப் பிரதிகட்சி பேசி அவனது நெஞ்சு வேதனையில் ஆழ்ந்தது. பல சமயங்களில் அவளிடம் உண்மையைச் சொல்லிவிடவேண்டும் என்று நினைத்தான். ஒவ்வொரு சமயம் சொல்லிவிட வேண்டும் என்று தீர்மானித்துப் பேச்சைக்கூட ஆரம்பித்தான். ஆனால் கடைசிச் சமயத்தில் அவன் சுயநலம் முன்னுக்கு வந்துவிடும். துணிவு அவனைக் கைவிட்டு விடும்.

ஆனால் இன்று நிலைமை வேறு. ஒரு மாதமாகக் காமு படுத்த படுக்கையாய்க் கிடக்கிறாள். குடலில் ஒரு பெருத்த 'ஆபரேஷன்' ஆகி ஒரு மாதம் ஆகிவிட்டது. ஆனால் இன்னும் ஆறவில்லை. தினசரி இரண்டு பிரபல ஸர்ஜன்கள் வந்து கவனித்துவருகிறார்கள். ஆனாலும் நாளுக்கு நாள் நிலைமை அபாயமாகிக்கொண்டே வருகிறதே ஒழியச் சற்றும் குணம் தெரியவில்லை. பத்து நாட்களாக ஓயாமல் ஜுரம் அடிக்கிறது; சுய நினைவு இல்லை.

ஸர்ஜன் நோயாளியின் அறையை விட்டு வெளியே வந்ததும் அவரிடம் நெருங்கினான் கோபாலன். அவன் முகம் கவலையே உருவாக இருந்தது. ஆவலுடன், "எப்படி இருக்கிறது?" என்று கேட்டான் டாக்டரை.

டாக்டர் ஒன்றும் பேசவில்லை. மௌனமாக வெறும் வெளியைப் பார்த்தார்.

கோபாலனுடைய ஆவல் கட்டில் அடங்கவில்லை. "எவ்வளவு இருக்கிறது?" என்றான். ஒவ்வொரு விநாடியும் ஒரு யுகமாகத் தோன்றியது அவனுக்கு.

டாக்டர் ஆழ்ந்த குரலில் மெதுவாகச் சொன்னார்:

"இன்றைக்கும் 106 டிகிரி இருக்கிறது. நாளைக்குச் சாயந்தரந்தான் ஏதும் நிச்சயமாகச் சொல்ல முடியும்."

டாக்டர் சென்றதும், அடிமேல் அடி வைத்து உள்ளே நுழைந்தான் கோபாலன். கட்டிலின்மேல் மெலிந்து எலும்புக் கூடாகக் கிடந்தாள் காமு. கண்கள் மூடியிருந்தன. வேதனை தாங்காமல் வாய் தானாகவே அரற்றிக்கொண் டிருந்தது.

அவள் முகத்தை உற்றுப் பார்த்துக்கொண்டு நின்றான் கோபாலன். அவன் கண்களில் மளமளவென்று கண்ணீர்ப் பெருக்கு எடுத்தது.

அவளுடைய வெளுத்த முகத்தில் சற்று அசைவு தோன்றிற்று. கண்கள் மெதுவாகத் திறந்தன. மெலிந்த புன்னகையொன்று அவள் வாய்க் கோணத்தில் உருவெடுத்தது. விழிகளை அசைத்து அவனைப் பக்கத்தில் உட்காரும்படி சைகை செய்தாள்.

அந்தச் சமயத்தில், உயிருக்கும் சாவுக்கும் இடையில் நிச்சயமின்றிக் கிடக்கும் அவளுடைய அந்த நிலைமையில், சில காலமாகத் தோன்றி அவனுடைய நெஞ்சை வாட்டி வந்த அந்த ஒரு விஷயம் அவனுடைய மனத்தில் ருஜுவாக உருவெடுத்து அவனைத் தாக்கியது. அதைத் தாங்கமாட்டாமல் அனற்காற்றில் அகப்பட்ட இளந்தளிர்போல் அவன் நெஞ்சு தத்தளித்தது.

நாளை அவள் இருப்பது நிச்சயம் இல்லை. இது வரையில் அவள் அவனைப் பூர்ணமாகத்தானே நம்பியிருக்கிறாள்? இந்தச் சமயத்தில், தெய்விகத்தை நினைப்பூட்டும் இந்தக் கடைசி வேளையிலாவது, புனிதமான நோய்ப் படுக்கையின் அருகிலாவது ஒருவன் உண்மையைப் பேச வேண்டாமா?

எப்படியாவது விஷயத்தைத் தெரிவித்துவிடுவது என்று தீர்மானித்துவிட்டான். இவ்வளவு காலமாக அவனுடைய சுயநல உணர்ச்சியுடன் போராடிக் களைத்த அவன் மனம் கடைசித் துணிவை அடைந்தது.

மெதுவாகக் கனைத்துக்கொண்டு வாயைத் திறந்தான். அதே சமயம் காமுவின் உதடு அசைவது போன்று இருந்தது. சிரமப்பட்டுக் கையைத் தூக்கி ஜலம் வேண்டுமென்று சைகை செய்தாள்.

உடனே எழுந்து ஓடி ஜலம் கொணர்ந்து அவளுடைய வாயில் விட்டான் கோபாலன்.

மறுபடியும் அவன் வாயைத் திறப்பதற்குத் துணிவடையச் சற்று நேரம் பிடித்தது. காமுவின் கண்கள் மூடிக்கொண்டன.

"காமு!"

அவனுடைய நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது. உடம்பெல்லாம் வியர்த்தது.

காமு கண்ணைத் திறந்தாள்.

"காமு—நான் உனக்கு—ஒரு துரோகம் செய்துவிட்டேன்—" என்று உடைந்த வார்த்தைகளாய் மளமளவென்று பாடம் ஒப்பிப்பதுபோலச் சொல்லி முடித்தான் கோபாலன்.

"ஐயோ, அப்பா! தாங்க முடியவில்லையே!"—வேதனை தாங்காமல் கூவிக்கொண்டே புரண்டு படுத்துக் கொண்டாள் காமு.

கடைசியில் கோபாலன் சொல்லி முடித்துவிட்டான். அவனுடைய நெஞ்சிலிருந்து பெருத்த பாரம் இறங்கிவிட்டது போல இருந்தது. தலையிலிருந்து மலையொத்த பாரத்தை இறக்கி வைத்துவிட்டவன் போல உணர்ந்தான்.

உடனே, அந்த இடத்தில் நிற்கக் கூடாதவன் போல எழுந்து வெளியே ஓடிவிட்டான்.

## 2

காமுவுக்குத் தேகம் பூர்ண சௌஸ்தமாகிப் பல மாதங்கள் ஆகிவிட்டன. அவள் சௌஸ்தமானபின் கோபாலன் எல்லையற்ற சந்தோஷமடைந்தானெனினும் அவனுடைய மனத்தின் ஆழத்திலே ஓர் அசமாதான வித்து அடிக்கடி தோன்றியது. அவளுடன் தனிமையில் இருக்கும்போதெல்லாம் மங்கலான ஓர் எண்ணத்திரை தோன்றி அவனுடைய பார்வையை மறைத்தது.

ஒரு நாள் காலை கோபாலன் தன்னுடைய அறையில் உட்கார்ந்துகொண்டு அவசரமாக ஒரு கடிதம் எழுதிக்கொண்டிருந்தான் காமு கையில் காபி டம்ளருடன் உள்ளே நுழைந்தாள்; காபியை மேஜைமேல் வைத்து, "இதென்ன இத்தனை முார்முரர்? காபியைக் குடித்து விட்டு எழுதக்கூடாதா?" என்றாள். அவளுடைய பார்வை அவன் எழுதும் கடிதத்தின் மேல் விழுந்தது. உடனே, "யாருக்கு இத்தனை அவசரம், காபி கூடக் குடிக்காமல்?" என்று கேட்டாள்.

"ஒருவருக்கும் இல்லை—"

"போதும், நான் ஏன் அதைக் கேட்கிறேன்? உங்களுக்கு எத்தனையோ ரகஸ்யம் இருக்கும். எனக்குச் சொல்ல முடியுமா?"

அவளுடைய வார்த்தைகளில் சாதாரணமான பரிகாசத்தைத் தவிர வேறொன்றும் தொனிக்கவில்லை என்றாலும், கோபாலனுடைய மனத்தில் அந்த வார்த்தைகள் சுருக்கென்று தைத்தன; ஏதோ குத்தலாகத் தோன்றின.

"இல்லை—" என்று அவன் ஏதோ பதில் சொல்ல வாயெடுத்தான். ஆனால் அதற்குள் அவள் மறைந்து விட்டாள்.

"சீக்கிரம் ஸ்நானம் செய்ய வாருங்கள். வெந்நீர் எடுத்து வைத்தாய்விட்டது" என்ற அவளுடைய குரல் கேட்டது.

கோபாலன் யோசனையில் ஆழ்ந்தான். அவன் மனம் சஞ்சலப்பட்டுத் தவித்தது. அன்று செய்தது பிசகா? அவன் கடமையைச் செய்தான். அவள் அதைப் பெருந் தன்மையுடன் மறந்துவிட வேண்டாமா? ஒவ்வொரு தடவையும் அதைக் குத்திக் குத்திக் காண்பிப்பது நியாயமா?

அவனுக்கு அந்த நிலைமை பொறுக்க முடியாததாக இருந்தது. இவ்விதம் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் புண்ணைக் கிளறுவதுபோல அவனுடைய குற்றத்தைச் சுட்டிக் காட்டிக்கொண்டே இருந்தால் அவன் என்ன செய்ய முடியும்? சமாதானம் இருக்குமா?

பல இரவுகள் தூக்கமின்றிக் கழித்தான். இதற்கு என்ன வழி செய்வதென்று அவனுக்குத் தோன்றவில்லை.

கடைசியில் அவளிடம் எல்லாவற்றையும் பேசித் தீர்த்துவிடுவதெனத் தீர்மானித்தான். ஆனால் மற்றொரு முறை, அந்த விஷயத்தை, அந்தச் சம்பவத்தைப் பற்றி எப்படிப் பேசுவது? அவன் மனம் துணியவில்லை; அதற்குச் சந்தர்ப்பமும் நேரவில்லை.

காமு பிழைத்தெழுந்து ஒரு வருஷம் இருக்கும். அப்பொழுது அவள் பிறந்த வீடு போயிருந்தாள். போய் ஒரு மாதம் ஆகியிருந்தது.

அவளைப் பிரிந்து தனியாக இருக்கும்போது அவளைப் பற்றிய நினைவுகள் கோபாலனைத் தூரத்தலாயின.

எல்லாவற்றையும் விட அவள் தன்னை அலக்ஷ்யம் செய்கிறாள் என்ற எண்ணம் மேலோங்கி நின்று வாட்டியது.

அவள் சமீபத்தில் இல்லாததால் அந்தக் கல்மஷ எண்ணம் அடிக்கடி தோன்றிற்று. கண்ணை மூடினால் அவன் மனம் அதிருப்திக் கற்பனைகளைச் செய்து குவிக்கும்; கோரமான கனவுகள் தோன்றி நெஞ்சை வாட்டும்.

அதற்கு ஏற்றாற் போல ஊருக்குப் போய் ஒரு மாதமாகியும் அவன் எழுதிய இரண்டு கடிதங்களுக்கும் பதில் வரவில்லை. அலக்ஷ்யம் இல்லாவிட்டால் பதில் போடமாட்டாளா? அவளுக்கு எழுதச் சௌகரியம் இல்லாவிட்டால் வேறு யாரைக் கொண்டாவது எழுதச் சொல்லமாட்டாளா? இவ்வளவு தூரம் அவமதிக்கப் படுவதை யார்தான் பொறுத்துக்கொள்ள முடியும்?

இருந்தாலும் தன் கோபத்தை அடக்கிக்கொண்டான். கடைசியாக ஒரு கடிதம் எழுதிப் பார்த்துவிடுவோம் என்று எழுதினான்.

அதில் அவள் மேலுள்ள அன்பினாலும், பூரண நம்பிக்கையாலுமே தான் அவளிடம் அந்த விஷயத்தைச் சொன்னதாகவும், அதனால் இவ்விதம் அவமதிக்கப் படுவான் என்று அவன் எதிர்பார்க்கவில்லை என்றும் விஸ்தாரமாக எழுதியிருந்தான்.

கடிதம் எழுதிய மூன்றாவது நாள் கோபாலனுக்குக் காமுவிடமிருந்து பதில் வந்தது. அதில் பின்வருமாறு எழுதியிருந்தது.

"நமஸ்காரம். தங்களுடைய கடிதங்களுக்கு இது வரையில் பதில் எழுதாதற்குக் காரணம், நாங்கள் எல்லோரும் ஊரில் இல்லை. கல்யாணத்துக்குப் போயிருந்தோம். நான் நேற்றுத்தான் திரும்பி வந்தேன். கல்யாணம் ஆனதும் பத்து நாள் இருக்க வேண்டுமென்று

அக்காள் கேட்டுக்கொண்டாள். ஆதலால் தங்கள் மன்னிப்பைக் கோருகிறேன்.

"ஆமாம். இன்றைக் கடிதத்தில் ஏதோ எழுதியிருக்கிறீர்களே, அது என்ன? நான் படுத்த படுக்கையாய் இருக்கும்போது ஏதோ முக்கியமான விஷயத்தைப் பற்றிச் சொன்னதாக எழுதியிருக்கிறீர்களே. அந்தப் பத்து நாளுந்தான் எனக்குப் பிரக்ஞையே இல்லையே! என்ன விஷயம் அது?—

நான் நாளைக்கு மறுநாள் புறப்பட்டு வருகிறேன். அப்போது எல்லா விஷயத்தையும் நேரில் சொல்லுங்கள்.

இப்படிக்கு........"

முற்றும்